கன்னித்தமிழ்

# கவிதை

## பாடுவோம்



முனைவர் புரட்சிதாசன்

# கன்னித்தமிழ்க்
# கவிதை பாடுவோம்

(இலக்கண நூல்)

இயற்றியவர் :
"முத்தமிழ்ச் செம்மல்"

## முனைவர் புரட்சிதாசன்

அமைப்பாளர் :
தென்னக இசைத்தமிழ் ஆய்வுப் பேரவை,
தலைவர் :
தமிழ் எழுத்தாளர் பேரவை



பாண்டியன் பாசறை
17, வடக்கு போக்கு சாலை
தி. நகர், சென்னை - 17.

## நூல் விளக்கம்

| | | |
|---|---|---|
| தலைப்பு | : | கன்னித்தமிழ்க் கவிதைபாடுவோம் (இலக்கண நூல்) |
| இயற்றியவர் | : | முனைவர் புரட்சிதாசன் |
| பதிப்பு | : | முதல் பதிப்பு |
| ஆண்டு | : | டிசம்பர் 1992 |
| உரிமை | : | ஆசிரியருக்கே |
| தாள் | : | 142 கி.கி. வெள்ளைத்தாள் |
| நூலின் அளவு | : | 14+21.5 செ.மீ. |
| எழுத்து | : | 10, 11. புள்ளிகள் |
| பக்கங்கள் | : | 16+194=210 |
| படிகள் | : | 1200 |
| விலை | : | 40/= |
| வெளியீடு | : | பாண்டியன் பாசறை<br>17, வடக்கு போக் சாலை<br>தி.நகர்—சென்னை-600 017. |
| அச்சகம் | : | மூவேந்தர் அச்சகம்<br>சென்னை-600 014<br>தொலைபேசி : 867189 |

நூல் கிடைக்குமிடம் :

**சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்**
**154, டி. டி. கே. சாலை**
**ஆழ்வார்ப்பேட்டை சென்னை-18**

முத்தமிழ்ச் செம்மல்

# முனைவர் புரட்சிதாசன்

**இயற்றிய பாராட்டுக்குரிய நூல்கள்**

**1. தொல்காப்பிய ஐந்திணை** ரூ. 70-00

சங்க இலக்கிய, இலக்கணத் தொகுப்பாக 536—வெண்பாக்கள், பொழிப்புரை — மேற்கோள் விளக்கத்துடன்.

**2. வரலாற்றில் இந்து மதம்** 30-00

சிவனியம், மாலியம், சமணம், பௌத்தம் இசுலாம், கிறித்தவம், வேதம் அனைத்தும் ஆய்ந்த மெய்ப் பொருள் நூல் மேற்கோளுடன்.

**3. ஏழிசை** 25-00

குழல், யாழ், முழவு கூத்து, நனிநய முத்திரைகள், இசைப் பாடல், மெய்ப்பாடு ஆகிய மேற்கோளுடன் இயற்றப்பட்ட இசைக் கோவை நூல்.

**4. சிலப்பதிகாரக் கூத்து** 20-00

சிலப்பதிகாரப் பாடல் சார்ந்த நாடக் வழக்கும் கூத்த நூல் ஆய்வும், அதில் பிற திணிப்பும் விளக்கமாகக் கூறும் அரிய நூல்.

**5. தமிழிசையில் சாமதானம்** 45-00

இலக்கணத் தமிழிசையில் எவ்வாறு சாம கானமென்ற, ஆரிய சங்கீதம் புகுந்து பிழை பட்டது என்பதை, பரதர், சாரங்கர் வேங் கடமகி, தியாகராசர், ஆகியோரைக் கொண்டே உரைக்கும் ஆய்வு நூல்.

6. **சினிமாவும் அரசியலும்** 30-00

நூலாசிரியரின் தமிழ்ப் புலமையும், இளமை முதல், இசையும், நடிப்பும், பாட்டும் அரசியலுடன், திரையுலக ஈடுபாடுமாக நாற்ப தாண்டு காலச் செய்திகள்.

7. **கன்னித்தமிழ்க் கவிதை பாடுவோம்** 40-00

தமிழ் யாப்பு இலக்கணம், அதற்குச் செய்யுள் இலக்கியம். கவிதை எழுதுபவர் களுக்கென, எளிய முறையில், விரிவாக மரபுக் கவிதைகள் கூறும் இலக்கண நூல்.

8. **சிலப்பதிகாரச் செங்கோட்டியாழ்** அச்சில்

அன்றையப் பாணர் கை வழி யாழே இன்றைய வீணை என்பதையும். அதன் உறுப் புகளைச் சங்க நூல்களில் இருந்தே மேற்கோள் எடுத்துக் காட்டி, குழல், யாழ் முழவு என எழுபதிற்கு மேற்பட்ட படங்களுடன் தொகுக் கப்பட்ட அரிய நூல்.

9. **இசைத் தமிழ்** அச்சில்

ஆயப் பாலை, வட்டப் பாலை என அவற்றில் பெயர்க்கப்பட்ட;பற்று, கேள்வி என சுர சுருதி, 103—பண்கள் அனைத்தையும் கூறும் இசை இலக்கண நூல்.

10. **ஐயம் திரிபற 6000 குறள்** அச்சில்

முன்னூறு தலைப்புகளில் ஒரு தலைப் பிற்கு 20—குறளாக — வெண்பா யாப்பில் பாடப்பட்டவை. உலக அடிப்படையில் அறம், பொருள்,இன்பம் மனித வாழ்வியல் தத்துவம், இயற்கைப் பரிணாம நெறி அனைத்தையும் கூறும் தமிழ்க் களஞ்சியம்.

நூல்கிடைக்குமிடம்

**சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட்,**

**154. டி. டி. கே. சாலை—சென்னை 600018**

# பருந்துப் பார்வை

முனைவர் புரட்சியார், எதிலும் முனைப்பான புரட்சியார். அப்புரட்சிப் பார்வை வழியே முகிழ்த்த நூல்களுள் இப்புது வரவும் ஒன்றாகும்.

''கன்னித் தமிழ்க் கவிதை பாடுவோம்'' என்னும் பெயரிய இந்நூல் மரபுப்பாவின் இலக்கணம் கூறுவதாகும். இம் மரபு காக்கும் நூலில் புரட்சியார் செய்துள்ள புரட்சி என்ன? பாடல் இலக்கணம் பகரும் நூல், ஒருவரால் இயற்றப்படும். அந்நூலுக்கு ஒருவர் உரை காண்பார். அந்நூல் இலக்கணத்திற்குச் சான்றாம் மேற்கோள், பல்வேறு ஆசிரியர்களின், நூல்களின் படைப்புகளில் இருந்து திரட்டப் பட்டிருக்கும். அவ்வாறு தக்க மேற்கோள் காண்டற்கு அரிய நிலையில், உரையாசிரியர் தாமே மேற்கோள் படைத்து வைப்பதும் உண்டு. இந்நிலை மாறி, நூலாசிரியரும் உரையாசிரியரும் அவரே—ஒருவரே—என்னும், வழக்காறும் தமிழுலகும் கண்டது. இலக்கண விளக்கம், அதற்கொரு சான்றாம்.

இப் புரட்சியாரோ, தாமே நூல் இயற்றி, தாமே உரையும் வரைந்து தாமே மேற்கோளும் யாத்து மும்மையும் தம்மை முதலாகக் கொள்ளும் ஒருமையில் இயங்க விட்டுளார்.

இது, புரட்சியார் வழிப்பட்ட நூற்புரட்சி, தமிழ் உலகுக்கு இவ்வகையில் முதல்வரவு.

இனி மேற்கோளிலும் ஒரு பெரும் புரட்சியுண்டு.

மற்றை நூல்களின் (இலக்கணங்களின்) மேற்கோள்கள், தொன்மக் கதையும் (புராணம்) சமயச் சார்பும் உடையவனவாகவே அமைதல் வழக்காறு. அதற்கு விலக்காகப் புது நோக்கில் உரை நடையில் இலக்கண நூல் எழுதினாரும், பெரிதும் அம் மேற் கோள்களையே எடுத்தாண்டனர். ஆனால், புரட்சிதாசனார் பகுத்தறிவு, வரலாறு, மாந்த நேயம், காதல், அறிவியல், முதலிய நோக்குகளில் மேற்கோள் பாக்களை யாத்துக் காட்டியுள்ளார்.

''வைத்திருந்தால் நம்பிறப்பை வாழ்த்துவார் இல்லையெனப்
பொய்த்திருந்தால் பாரார் புறம்''

என்பது பொருளுலகஞ் சுட்டும் குறட்பா. (16)

''என்ன கொடுத்தும் கொடையாமோ நீகொடுத்த
அன்னக் கொடையே கொடை''

என்பது கொடை நலம் சுட்டும் குறட்பா. (77)

''கொடியும் குழுவும் குரல்கொடுக்க
கொள்ளை ஆடிக் கொலைசெய்ய
அடியாள் அரசோ அதைமறைத்தே
ஆணை என்றே வழக்காட
நெடிய பழியை நிறைபுகழாய்
நேர்மை நீதி என்றுரைக்க
விடியும் பொழுதோ விழிதிறக்க
வேண்டா விருப்பில் இருண்டதுவே

என்பது இற்றை அரசியல் சுட்டும் அறு சீர்க் கழி நெடிலடி ஆசிரிய விருத்தம். (92)

''கோட்டைச் சுவரும் கொடிபறந்த கோபுரமும்
பாட்டுத் தமிழும் பலசிறப்பும்—நாட்டியமை
சிந்து வெளிச் சம்பரன் சீர்''

என்பது பண்டை வரலாற்றுத் திறம் காட்டும் சிந்தியல் வெண்பா (113)

''புல்லொடு பூண்டாகிப் பூச்சி புழுவாகிச்
சொல்லொலி யாகும் துலக்கத்தில் – பல்குரலாய்க்
காட்டுப் பறவை கடுவிலங்கு மற்றன
கூட்டி மனிதன் குரல்''

என்பது மொழியியல்—ஒலியியல்—தோற்றத்தின் முகிழ்ப்பு நிலை காட்டும் நேரிசை வெண்பா (103)

''பெற்றோம் எனத்தந்தை பிள்ளைக் குடன்படுவான்
உற்ற மகனோ உருத்தெனச்—சற்றேனும்
தந்தை துயரைத்தான் தீர்த்தல் அரிதென்ப
வாழையடி வாழை வழக்கு''

என்பது வாழ்வியல் தொடர்நிலை சுட்டும் இன்னிசை வெண்பா (110)

''மழைவளம் கொள்ள மரம் நடுக—நட்டுத்
தழைவளம் கொள்ளத் தளிர்நடுக—கட்டி
நீர்த்தேக்கம் கொள்க நிலமுழுது—கொட்டும்
நெல்மணி கொள்க நிமிர்ந்து''

என்பது இயற்கையொடு கூடிய வாழ்வின் வாழ்த்தாய் இயலும் இன்னிசை வெண்பா. (111)

''அந்தணர்க்கு வெண்பா அரசருக் காசிரியம்
வஞ்சியிசை வெண்பா வணிகருக்குத்—தஞ்சமென்ற
சூத்திரர்க்கோ வெண்பாட்டு சொன்னவர்யார் ஆரியக்
கூத்தர்கள் என்பதைக் கொள்''

என்பது பாட்டியல் வகையால் வருணம் நாட்டிய கொடுமையை காட்டிய வெண்பா (83)

இத்தகைய பாடல்கள் என்ன சொல்கின்றன ?

**இலக்கணம் படிக்கும் போதே, வாழ்வியலுக்குஇன்றியமையாத் துறையறிவெல்லாம் படித்துக் கொள்க என்பதைச் சொல்லாமல் சொல்கின்றன.**

எழுத்துத் தொடங்கி எல்லா இலக்கணங்களும் கூறினும், இடை இடையே பல இலக்கணங்களும், குறிப்புகளும் செய்திகளும், மேற் கோள்களும், விளக்கங்களும் காணலாம். அவை தெளிவுறுத்தலும் வலியுறுத்தலும் நோக்காக அமைவன.

''கன்னித் தமிழ்க் கவிதை பாடுவோம்'' என்னும் இந்நூல் இலக்கணமாதல் அன்றி, **வாழ்வியல் இலக்கியமாகவும் வடிக்கப் பட்டது என்பதைக் கற்பார் உணர்ந்து போற்றுவர்.**

புரட்சியார் போக்கு, புதுமை மிக்கது அப்புதுமை புதுவது இல்லை ; அவர் நூல்களிலெல்லாம் பொலிந்து நிற்பதே அப்பொலிவு இந்நூலிலும் உண்டு!

அன்புடன்;

**இரா. இளங்குமரன்**
பாவாணர் நூலகம்
மதுரை

# இலக்கியம்

தமிழ் மொழியின் சிறப்பு அதன் சிறந்த இலக்கணக் கட்டுக் கோப்பேயாகும். ஐந்திலக்கணம் என்று கூறப்பெறும் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி எனும் ஐந்து வகை இலக்கணங் களுள் செய்யுள் அல்லது பாடல் இயற்றும் இலக்கணம் கூறும் யாப்பிலக்கணம் தமிழ்க்கவிதையின் கட்டுக்கோப்பினைச் சிதை யாமல் காப்பது.

சங்க கால இலக்கண நூலான தொல்காப்பியம் எழுத்து, சொல், பொருள் என்ற மூவிலக்கணத்தையே கூறி நின்றது. பொருள் இலக்கணத்தில் யாப்பையும் அணியையும் அடக்கி விட்டது. யாப்பு செய்யுளியலிலும் அணி உவமையியலிலும் தொல்காப்பியத்தில் அடக்கப் பெற்றுள்ளது. இதுவே பின்னர் இடைக்காலத்தில் விரிவாகித் தனித்தனியாக உருவாகி விட்டது.

சங்ககாலப் புலவரான காக்கைபாடினியார் காக்கை பாடினியம் என்னும் யாப்புநூல் இயற்றியதாகக் குறிப்பு இருப் பினும் இது நிறுவப்படவில்லை. சிறுகாக்கைபாடினியம், பல் காயம், அவிநயம், மயேச்சுரம், பனம்பாரம் போன்ற யாப்பு நூல் கள் இருந்தனவென்று உரையாசிரியர்கள் மேற்கோள்களிலிருந்து புலப்படுகிறது. இருப்பினும் யாப்பருங்கலமும் யாப்பருங்கலக் காரிகையுமே இன்று நமக்குக் கிடைக்கும் யாப்பிலக்கண நூல் களாம். இவற்றிலும் யாப்பருங்கலக் காரிகை ஒன்றே எல்லோ ராலும் நன்கு பயிலப் பெறுகின்றது.

பா புனைதல் என்பது இயல்பாக வரவேண்டிய ஒன்று. புனைகின்ற பாக்கள் காரிகை கூறும் இலக்கணக்கட்டுக் கோப்புக்குள் அடங்கி நிற்க வேண்டுமென்பது அவசியம். ஆனால் காரிகை பயின்றபின் கவிதை பாடுவது என்பது இலக் கணக் கட்டுக்கோப்புடைய சொற்கோயிலைக் கட்டுவது போலா கும். அதில் கவிதை நயமும் கற்பனைச் செறிவும் இல்லாது போய்விடும். இதுபற்றியே ''காரிகை கற்றுக் கவிபாடுவதினும் பேரிகை கொட்டிப் பிழைத்தல் நன்றே'' என்ற கூற்று எழுந்தது. எனவே பாட்டு கட்டுக்கோப்புடனும் கவிநயத்துடனும் இருத்தல் வேண்டுமென்பது பெற்றாம்.

இவ்வகையில் 'கன்னித் தமிழ்க் கவிதை பாடுவோம்' என்ற இந்நூலை, யாப்பிலக்கணத்தைக் கவிதை நயத்துடன் கூடிய உதாரணச் செய்யுள்களுடன் இயற்றி முனைவர் புரட்சிதாசன் பெருஞ்சாதனை புரிந்துள்ளார்.

நாற்பதாண்டுகளாகத் திரைப்படத்துறையில் பாடல், வசனம், இயக்கம் என்ற பல துறைகளில் சாதனை புரிந்து வரும் முனைவர் புரட்சிதாசன் அவர்கள் கடந்த பத்தாண்டுகளாக தமிழ் மொழி, இலக்கணம், வரலாறு, பண்பாடு, இசைக்கலை போன்ற துறைகளில் ஆய்வு நூல்கள் படைத்துப் பெரும் புரட்சி செய்து வருகிறார். தமிழர்தம் தலைவரான தந்தை பெரியார் அவர்களின் சீர்திருத்த இயக்கத்தின் தாக்கம் இவர்பால் பெரிதும் உள்ளதால் எந்த நூலை எழுதினாலும் தமிழினத்தின் மேம் பாட்டைக் கருத்தில் கொண்டே எழுதுவார்.

தமிழர் வாழ்வியலைச் செம்மைப்படுத்த புரட்சிக் கருத்து க்களைக் கொண்ட 'ஐயம் திரிபற ஆறாயிரம் குறள்' என்ற நூலை குறள் வெண்பா வடிவில் இருபது ஆண்டுகளுக்கு முன்னரே எழுதிய புரட்சியார் அதனை அச்சிடும் பணியில் முனைந்தபோது அதைவிட இன்றியமையாத நூல்கள் என்று கருதிய தொல்காப்பிய ஐந்திணை, வரலாற்றில் இந்துமதம் ஆகிய இரு நூல்களை முதலில் அச்சிட்டுத் தமிழறிஞர்களிடையே புகழ்பெற்றார்.

அதன் பின் தமிழிசையில் அவர் கொண்ட ஈடுபாட்டின் காரணமாகச் சிலப்பதிகார ஏழிசை, தமிழிசையில் சாமகானம் போன்ற தமிழிசை ஆய்வு நூல்களைப் படைத்தார். பண்டைத் தமிழிசையே இன்றுள்ள கர்நாடக இசைக்குக் காரணம் என்பதை இந்நூல்களில் நிறுவியுள்ளார். தமிழிசை வரலாறு, செங் கோட்டியாழ் என்ற இசை ஆய்வு நூல்கள் அச்சிலுள்ளன.

தம் நாற்பதாண்டுத் திரைப்படத்துறை அனுபவத்தை சினிமாவும் அரசியலும் என்ற நூலில் திறம்படத் தீட்டியுள்ள புரட்சியார், அரசியலில் தமக்கு இருந்த ஈடுபாட்டையும் அதில் விளக்கிஉள்ளார்.

இடையில் இலக்கணக் கட்டுக்கோப்பு பிறழாது பாட்டெழு தும் தம் புலமையைப் பின்னணியாகக் கொண்டு இப்போது யாப்பிலக்கண நூலையும் படைத்துள்ளார்.

முன்னெழுந்த யாப்பிலக்கண நூல்கள் பிற ஆசிரியர்களின் செய்யுள்களையே மேற்கோள்களாகக் காட்டிச் சென்றன. கவிஞர் புரட்சியாரோ தாமே பாட்டிலக்கணத்தையும் படைத்து உதாரணச் செய்யுள்களையும் தாமே படைத்துள்ளார். ஈரடிக் குறளிலிருந்து எண்சீர்க் கழிநெடில் விருத்தம் முதலான பதின் சீர்விருத்தம் வரை எல்லா உதாரணப் பாடல்களையும் அவரே புனைந்துள்ளார். பாடல் யார் வேண்டுமானாலும் எழுதிவிட லாம். ஆனால் பாட்டிலக்கணம் எழுதுவது என்பது கடின மானது. யாப்பருங்கலக் காரிகைகூட பிறர் உதாரணச் செய்யுள் களையே கொண்டதாம். யாப்பிலக்கணத்தைப் புரட்சியார் மேலும் ஒரு புதிய யுத்தியைக் கொண்டு படைத்துள்ளார். நூற்பா, உதாரணச்செய்யுள், குறிப்புரை, விளக்கவுரை என்று பழமையான முறையில் எழுதாது உரைநடை நூல் போல் எழுதி நூற்பாக்களையும் உதாரணச் செய்யுள்களையும் இடையிடையே பொருந்த எழுதியுள்ளார்,

செய்யுளுறுப்பின் இலக்கணத்தை விளக்க முற்படும் புரட்சியார்

''சொல்லினைக் கூட்டும் தொடரெழுத் தத்துடன்
நல்லசைச் சீரும் நடைத்தளையும்—வல்ல
அடிதொடை ஆறும் அருந்தமிழ்ப் பாவின்
முடியும் உறுப்பும் முதல்''

என்ற நூற்பாவை அருமையாக அமைத்திருக்கிறார்.

பாவினங்களுக்குரிய ஓசையைக் கீழ்க்கண்ட நூற்பாவினால் விளக்குகிறார்,

''அகவலில் ஆசிரியம் அவ்வாறே செப்பல்
புகழ்வதில் வெண்பாப் புனைந்து—மகிழ்வதில்
துள்ளல் கலிப்பாவாம் தூங்கலில் வஞ்சிப்பா
தெள்ளுதமிழ் ஓசைத் திறம்''

ஒவ்வொன்றுக்கும் இலக்கணம் கூறுகையில் முதலில் நூற்பாவை இயற்றி அதன்பின் மேற்கோள் செய்யுள் கொடுத்திருப்பின்நூலின் பெருமை மேலும் கூடியிருக்கும். நூற்பா எழுதுவதில் வல்லவர் புரட்சியார். எல்லாவற்றுக்கும் நூற்பா இயற்றி நூலை மேலும் விரிவுபடுத்தினால் நலம் பயக்கும்.

நூற்பா எழுத விட்டிருப்பினும் எல்லா இலக்கண வகைகளுக்கும் பாவினங்களுக்கும் உதாரணச் செய்யுள் எழுத புரட்சியார் தவறவில்லை. அவற்றில்கூட ஒரே பொருள் பற்றிப் பாடல் இயற்றாது பல்வகைப் பொருள் பற்றிச் சுவையான பாடல்களை யாத்துள்ளார். தமிழ் மொழி, ஆடற்கலை, நாட்டு நடப்பு, அரசியல், சீர்திருத்தம் போன்ற பல பொருள்கள் பற்றிப் பாடல்கள் புனைந்துள்ளார்.

தமிழைப் பற்றி

''குமரியந் தமிழே
அலைவாய் ஊழிக்குமரியந் தமிழே நீந்திச்
சிலையாய் நின்றாய்க் குமரியந் தமிழே''

என்ற பாடல் நிலைத்த தன்மையுடைய தமிழின் பெருமையை எடுத்துக் கூறுகிறது.

''சின்னச் சின்ன மழலைகள்
வண்ண வண்ண எழில்வகை
கண்ணில் ஒற்றத் தரும்.
கையைத் தட்டிச் சிரிப்பதும்
கண்கள் எங்கோ இமைப்பதும்
தையத் தவழ்வதும்
தத்தித் தத்தி நடப்பதும்
முத்து வாய்நீர் இழைவதும்
கத்தி அழுவதும்
தொட்டில் கொள்ளத் துவள்வதும்
தூங்கும் போது சுழிப்பதும்
கட்டிக் கொள்ளத் தகும்.

என்ற வெண்டாழிசைப் பாடல் குழந்தைக் கவிஞரோ புரட்சியார் என்று வியக்குமளவிற்குச் சுவையாயுள்ளது.

இன்றைய உலகியலில் 'குடும்பத்தார் பாசம் பற்றி

''மாளிகை மஞ்சம் மனைமக்கள் சுற்றமும்
வாணிகம் அவ்வழி வாரிபோற் செல்வமெல்லாம்
தூங்குகையில் வாங்கும் சுழிமூச்சு நின்றுவிட்டால்
சொந்தமின்றிப் போகும் சுமை''

என்று இன்னிசை வெண்பாப் பாடலைப் பாடியுள்ளது புரட்சியாரின் பட்டினத்தார் உளப்பாங்கைக் காட்டுகிறது.

இவ்வாறு இலக்கணத்திற்கு இலக்கணமும் சுவைக்குச் சுவையுமாக உதாரணச் செய்யுள்களை இயற்றியிருப்பது புரட்சியாரின் கவிதை வளத்தைக் காட்டுகிறது.

பாவகை இலக்கணம் கூறுமிடத்து முன்னோர் மொழிபொருளைப் பொன்னேபோல் போற்றும் பாங்கை விடுத்து; வெண்பா, அகவல், வஞ்சி, கலிப்பா என்ற காலம்காலமான வரிசை முறையை உடைத்து அகவல், வெண்பா, கலிப்பா, வஞ்சி என முறைமாற்றி அகவலுக்குப் புரட்சியார் முதலிடம் கொடுத்துள்ளார். வெண்பாவைப் பிராமண வகையென்றும் அசவலைச் சத்திரிய இனம் என்றும் பிரித்திருப்பதைச் சாடுகிறார் அவர். முதலில் அகவலே வைக்கப்பெற வேண்டும் என்று வாதிடும் புரட்சியார்'

''பாவிரி மருங்கினைப்
பண்புறத் தொடுப்பின்
ஆசிரியப்பா, வெண்பா''

எனத் தொல்காப்பியர் (செய்-103) ஆசிரியப்பாவிற்கு முதலிடம் கொடுத்துள்ளதைத் தம் வாதத்திற்கு மேற்கோளாகக் காட்டி அதனை நிறுவுகிறார்.

இந்த நூற்றாண்டில் இவர்க்கு முன் யாப்பிலக்கணம் இயற்றிய புலவர் குழந்தை, இலக்கியச் செம்மல் இரா. இளங்குமரனார் ஆகியோரின் நூற்பாக்களைத் தக்க இடங்களில் சான்றாகக் காட்டுகிறார்.

இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் புரட்சியார் யாப்பிலக்கணம் படைப்பதால் இந்த நூற்றாண்டின் பாவினமான புதுக்கவிதைக்குத் தம் நூலில் இலக்கணம் கூறும் கடப்பாடு கொண்டு விளங்குகிறார், ''செப்பலோசை நயத்தில் மோனை எதுகை கொண்டு புதுக்கவிதைகளைச் சொல்லலாம். பாட முடியாது. பாடினால் தாளக்கட்டுக்குள் அடங்காது. சொற்களைப் பிய்த்துப் பிய்த்துக் கட்டி ஒழுங்குபடுத்தும் வேண்டாத திணிப்பு எற்படும்'' இதுவே புதுக்கவிதை பற்றி புரட்சியாரின் கணிப்பு.

யாப்பிலக்கணம் பயில்வார்க்குச் சீர் பிரிப்பது என்பது மிகக் கடினமான பணி. தக்க முறையில் சீர் பிரிக்கப் பழகிவிடின் எப்பேர்ப்பட்ட செய்யுளையும் எளிதாசப் படித்து விடலாம். அவ்வகையில் எல்லாப் பாவினங்களையும் மிகச் செம்மையாகச் சீர் பிரித்துக் காட்டியுள்ள புரட்சியாரின் திறனைப் பாராட்ட வேண்டும். குறிப்பாகப் பள்ளி மாணவர்களுக்கு இம்முறை பெரிதும் பயன்படும்.

மொத்தத்தில் 20ஆம் நூற்றாண்டின் இறுதியில் புதிய யாப்பிலக்கணம் படைக்க வேண்டுமென்று முனைந்து பெருவெற்றியுடன் எடுத்த பணியை முடித்துள்ள புரட்சிதாசன் அவர்களை வாழ்த்திப் பாராட்டி அவர்தம் படைப்பை வரவேற்கிறேன்.

**டாக்டர் இரா. முத்துக்குமாரசாமி**
எம். எ, பி. லிப், டி. லிட்.
ஆட்சியாளர் : சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.

# இலக்கணம்

அருந்தமிழ் ஆற்றல் மிகு செய்யுளியல் கூறும் தொல்காப்பியர் ;

அங்கதம் என்பது ; உண்மைப் பொருளை வழக்கில் தலைப்படுத்துவதாக,

''அங்கதம் தானே அரில்தபத் தெரியின்
செம்பொருள், கரந்தது என இருவகைத்தே''
—தொல்—செய்—120

என்றார். ஆனால் அதனைப் பழிப்புக் குற்றமென்றார்.

''மொழிகரந்து மொழியின் அது பழிகரப்பு ஆகும்'' என்றார்.

செய்யுள் வகை இரண்டு கூறும் தொல்காப்பியர்,

''துகளொடும் பொருளொடும் புணர்ந்தன்று ஆயின்
செவிவுறைச் செய்யுள்''
—தொல்—செய் 124

''வசையொடும் நசையொடும் புணர்ந்தன்று ஆயின்
அங்கதச் செய்யுள்''
—தொல்—செய்—125

என்றார்.

குற்றத்தோடும், அது இல்லாமலும் புனைவது செவியுறைச் செய்யுள். வெறுப்பு, விருப்புமாகப் புனைவது அங்கதச் செய்யுள் என்றார்.

தொல்காப்பியர் காலச் செய்யுள் புனையும் மரபு அவ்வா றானாலும், அதன் குறை, நிறை, பா, அதன் இனம், வகை, பொருள், விரிப்பு, சுருக்கம் என்ற, அடிப்படைச் செய்யுள் இயல் அனைத்தையுமே அவர் கூறியிருக்கிறார்.

பிற்கால வழக்கான பல பாவினங்களுக்குத் தொல்காப்பியத்தில் இலக்கணமில்லை. ஆனாலும், தொல்காப்பியச் செய்யுளியல் கொண்டே, வகைவழி நூல்களாகப் பலரால் பல காலங்களில், அவிநயனார், காக்கை பாடினியார், சிறுகாக்கை பாடினியார், கையனார், நத்தத்தனார், பல்காயனார், பல்காப்பியனார், மயேச்சுரர் ஆகியவர்களால் செய்யுள் யாப்பு சொல்லப்பட்டன

அருக சமய அமுதசாகரரால் யாப்பருங்கலம், அதன் வழியாக யாப்பருங்கலக் காரிகை கூறப்பட்டன. இதற்குப் புராண இலக்கிய மேற்கோள் பாடல்கள் காட்டினார் உரையாசிரியர் குணசாகரர்.

பாட்டுடைய நூல் தொல்காப்பியம், உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் சிலப்பதிகாரம். முற்பட்ட இலக்கிய இலக்கணம்,மக்கள் வாழ்வியல் முறைமையைப் புனைந்தமையால் அது செய்யுள் வழக்காயிற்று. சில எழுத்தில் பல பொருளாக எண் வகை மெய்ப்பாட்டுணர்வு நிரம்பச் சொல்லணி, பொருளணி என்ற இருவகை, இவற்றைச் சுருங்கச் சொல்லி விளங்க வைத்து ஆழமுடைய கருத்தினைக் கற்பனைச் செறிவுடன் அமைத்துக் கூறுதல், அலங்கார அணிச் செய்யுள் இனிமை நெறியும் கூட.

''பாட்டும் பொருளும் பொருளில்
பொருந்தும் பயனும்''

என்பார் குமரகுருபரர்.

''பல்வகைத் தாதுவின் உயிர்க்குடல் போற்பல
சொல்லாற் பொருட் கிடனாக உணர்வினின்
வல்லோரணி பெறச் செய்வன செய்யுள்''
—67

என்பார் நாடகவியல்; (1901)

பரிதிமாற்க் கலைஞர் வி. கோ. சூரியநாராயண சாத்திரியார். செய்யுள் இயக்கத்திற்குரிய முதல் நடை, வாரம், கூடை, திரள், என்ற வகை விளக்கத்தையும் அந்தக் கலைஞரே ;

''மிகவும் தாழ்ந்தும் சென்முதனடையும்
சொல்லிசை யொழுக்கமுடைய வாரமும்
சொல்லிசைச் செறிவுகளுடைய கூடையும்
ஒன்றிமுடுக்கிய நடையுறு திரளும்
என்ற நான்கு இயக்கமும் ஒன்றுமச் செய்யுள்'' —69

என்றார்,

சிலப்பதிகார இளங்கோவடிகள் கூறியவாறே, வரிப்பாட்டுச் செய்யுள்களான; ஆற்றுவரி, சார்த்துவரி, கானல்வரி, சாயல்வரி, முகமுடைவரி, திணை நிலைவரி, படைப்புவரி, ஆகியவற்றின் செய்யுள் பொருள் விளக்கம் எவ்வாறு, எப்படி இருக்க வேண்டு மென்று கூறும் பரிதிமாற் கலைஞர் :

''உருட்டு வண்ணம் ஓங்கப்
புனைவது முரிவரி''

''கருப்பொருள் மயங்கக் காட்டி
உரிப்பொருள் எரிப்பது
மயங்கு திணை நிலைவரி''

என்பனவோடு (நாடக இயல்-77)

''மூன்றடி முதலாக ஏழடி யிறுவாச்
சிந்து நெடிலும் சேர்ந்தும் சேராதும்
வந்து முகம்பெறும் 'முகமுடைவரி'

எனவும்.

''வெள்ளையானும் ஆசிரியமானும்
கொச்சகம் பெற்றும் பெறாதும் வேறாகிய
உறுப்பெலாமுடைய 'படைப்புவரி'

எனவும்,

முகமுடை வரிக்குச் சிறப்பான சிந்தியல் அடி, ஏழடி இறுவாய் எனப் பஃறொடை வெண்பா, அகவலாசிரியம், கொச்சகம் என அவை பெற்றும், பெறாமலும், அச்செய்யுள் இறுப்புகள் அதனதற்கு வருமென்றார். அதாவது கிடைத்த உலக்கியங்கண்டு, இலக்கணம் இயம்பியமுறை, ஆனாலும் அவ்வழிகளின் கையாளப்பட்ட பொருள் வழக்கு, செய்யுள் உறுப்பு வழக்கினைத் தெளிவாகக் கூறுகிறார்.

தொல்காப்பியப் பழைய உரையாசிரியர்கள், பூரணர், நச்சர், சேனா வரையர், பேராசிரியர் அனைவரும், பிற்பட்ட உரையாசிரியர்கள்; வேங்கடசாமி நாட்டார், சங்குப்புலவர், பாவாணர், கோவிந்தராச முதலியார், இராமலிங்கத் தப்பிரான் பெருமழை சோமசுந்தரனார், வித்வான் சுந்தரமூர்த்தி ஆகியோர் பலரும் நம்பியசப் பொருளுரை யாப்பருங்கலக் காரிகை, தண்டியலங்காரப் பழைய உரை, சிவஞான முனிவர் விளக்கிய நன்னூல், சங்கர நமச்சிவாயர் உரை, நேமிநாதர் உரை பன்னிரு பாட்டியல் உரைமுடிய, மத இலக்கியச் செய்யுள் இலக்கண மேற்கோள் பாவிலும், உரையிலும், அதனையே பின்பற்றி, வழிமொழிந்திருக்கின்றனர்.

ஆனாலும், செய்யுள் இலக்கண உரைகளில் புலவர் குழந்தை மதுரை இளங்குமரனார், கி.வ. ச., அ. கி. பரந்தாமனார் ஆகியோர் எடுத்தாண்ட எளிய இலக்கண விளக்கந்தான், அவைகள் படிப்பவர்களுக்குத் தெளிவாக இருந்ததால், அதைப் படித்துக் கவிதை எழுதும் ஆர்வலர் மிகவாக முனைந்தனர்.

அந்த எளிய முறையைத் தழுவிப் பலராலும் மேற்கோளாகக் கொள்ளப்பட்ட மத இலக்கியப் பாடல்களை அகற்றி அனைத் திற்கும் புதுச் செய்யுள் இயற்றி, பகுத்தறிவிற்குப் பொருந்திய செய்யுள்களை வரிசைப்படுத்தி இருக்கிறேன்.

பாவினவகை முழுவதற்கும் பாடல் இலக்கணமும், இலக் கியமும் முறைப்படுத்தி இருக்கிறேன்.

நில அடிப்படையில்; குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என; அதில் செய்யப்படும் தொழில், அப்பெயர், இனமான குறவர், ஆயர், உழவர், மீனவர் எனச் சிறப்பும், வளமும் கூறும் இலக்கண இலக்கியப் பாடல்களை, யாப்பிலக்கணமாக எளிய நடையில் இயற்றி விளக்கி இருக்கிறேன். மேற்கோள்களும் எடுத் தாண்டிருக்கிறேன்.

'கவிஞர்' என்ற பெயரில் இன்று தமிழ்ச் செய்யுள் இயற்று பவர்கள், நமது பழந்தமிழ்ப் புலவர்கள் பல இலக்கண வகைச் செறிவுகளுடன் எவ்வாறெல்லாம்; எப்படி எல்லாம் செய்யுள் இயற்றிப்பாடினார்கள் என்பதை நன்கு அறிந்து ஆய்ந்து தெளிவு பெற்றுச் செயல்பட வேண்டும்.

மோனை, எதுகையில் சொற்களை அடுக்கினால், செப்ப லோசையில் வார்த்தைகளை அழுத்தியும் அகட்டியும் பேசினால் எந்த மொழியிலும், அது கேட்பதற்குக் கவர்ச்சியாகவே இருக்கும். அதனால் நாம் பயின்று கடைப்பிடிக்க வேண்டிய மரபுக் கவிதைகளைப் புனையாது, வெகு சுலபமாக, ஓசை நயப் புதுக்கவிதை புனைவதால், காக்கப்பட வேண்டிய நமது இலக்கணப் புலமைமிகு செய்யுள் இலக்கணம், அதன் இனவகைகள், அனைத்தும் நாளடைவில் தேடுவாரற்றதாகி விடும்.

மரபுக் கவிதைகளைத் தமிழ் எழுத்துலகில் வளர்ப்பதன் வாயிலாக நமது இலக்கணப் புலமைச் செறிவில் நாம் முழுமை யாக இருக்கிறோம் என்பதை உறுதிப் படுத்திக் கொள்ள முடியும்.

## கரு

செய்திகளை மிகையாகச் சொல்ல முடியும் என்பதற்காகச் எண்சீர் விருத்தம், நெடுங்கதை சொல்லும் அகவலாசிரியம், ஆகியவற்றில் கவிதை என்ற பெயரில் இயற்றுகின்றனர். வாழ்க!

ஆனாலும், வெண்பா, கலிப்பா, கட்டளை வகை, வஞ்சிப்பா குறட்பா,—என அனைத்து வகையிலும், அனைத்துக் கவிஞர் களும் புலமைபெற்று விளங்க வேண்டுமென்பது எனது துடிப்பு.

மெய்ப்பாட்டின் அகவுணர்வு, புற உணர்வுகளை, எத்தகைய தமிழ்ச் சொல்லில், எப்படிப்பட்ட சீர்கள் அடங்கிய—செய்யுளில், இசையில், இத்தனை வரிகளில், இந்த நேரத்தில் இப்படித்தான் இயற்றிப்பாட வேண்டுமென்று தெளிவான வரம்புகள் சொல்லப் பட்டிருக்கின்றன. அவற்றை அறிந்து, நமது புலமையைத் தெளிவுபடுத்திக் கொள்வோமேயானால் நம் தமிழை, மொழியை, இலக்கணத்தை, பண்பாட்டைக் காப்பாற்றி உலகறியச் செய்யத் துணை நின்றவர்களாவோம்.

சிவனியத்தை, மாலியத்தைப்பாடிய நாயன்மார்கள், ஆழ்வார்களின் கருத்து, கடவுளர் பெருமையைச் சொன்னாலும் தமிழ்ச் செய்யுள் இலக்கண வகை அங்கே கொட்டிக் கிடப்பதைக் கூர்ந்து அறியவும்.

தமிழ்ச்செய்யுள் இலக்கணம் சிறக்கவும், அதன், செறிவு பயிற்றுவிக்கப்பட்டு, எளிமையாக அறிந்து கொள்ளத் தக்கவாறு பாடல் புனைந்து தொகுத்தமையில் அந்த யாப்பு அணிகள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆழ்ந்துகூர்ந்து அறிவதிலே அவை புலப்படும்.

''தொல்காப்பிய ஐந்திணை'' வெண்பா என்ற எனது நூலில் ''வெண்பா யாப்பமைதி'' என்ற தலைப்பில் சில இலக் கணக் குறிப்புகள் கொடுத்திருந்தேன். அது கண்டு, அதை விரிவாக்கி, ஒருஇலக்கண இலக்கியம், எழுதுங்கள் என, சென்னை புலவர் மன்றத் தலைவரும், நல்லாசிரியர். பெரும் புலவருமான ஐயா, இர. திருஞானசம்பந்தனார் அவர்கள் என்னைப் பணித் தார்கள். அன்னாரின் ஆணை ஏற்று இந்த நூலை இயற்றினேன்.

இந்த நூலை அழகிய முறையில் அச்சிட்டுத்தந்த, 'இலக்கியச் சுடர்' டாக்டர் மூவேந்தர் முத்து அவர்களுக்கும், சிறப்புரை தந்த பெரும்புலவர் மதுரை இளங்குமரனார் அவர்களுக்கும், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சியாளர், டாக்டர், திரு. முத்துக்குமாரசாமி அவர்களுக்கும் அவ்வப்போது நூலுக்கு அச்சுப்பிழை பார்த்து உதவிய டாக்டர் சேகரன் M.A. அவர்களுக்கும், டாக்டர். கவிஞர் மு. பாஞ்ச்பீர் அவர்களுக்கும்; பிரபாவதி கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கும் நன்றிக்கடன் பட்டி ருக்கிறேன்.

கவிதை எழுதும் ஆர்வமுடைய தமிழ் நெஞ்சங்கள் இந்த இலக்கண நூலைப் பயின்று தெளிவு பெற வேண்டுமென்பது எனது வேண்டுதல்.

**— புரட்சிதாசன்**

# உள்ளடக்கம்

# கன்னித்தமிழ்க் கவிதை பாடுவோம்

## 1. அடிப்படை விளக்கம்

**எழுத்து—13**

1. குற்றெழுத்து, 2. நெட்டெழுத்து, 3. உயிரெழுத்து, 4. குற்றியலிகரம், 5. குற்றியலுகரம், 6. ஐகாரக் குறுக்கம், 7. ஆய்தம், 8. மெய் எழுத்து, 9. வல்லினம், 10. மெல்லினம், 11. இடையினம், 12. உயிர்மெய், 13. அளபெடை.

**அசை—2**

1. நேரசை, 2. நிரையசை.

**சீர்—30**

4. ஈரசைச்சீர், 8. மூவசைச்சீர், 16. நாலசைச்சீர். 2. ஓரசைச்சீர்.

**தளை—7**

1. நேரொன்றாசிரியத்தளை, 2. நிரையொன்றாசிரியத்தளை, 3. இயற்சீர்வெண்டளை, 4. வெண்சீர்வெண்டளை, 5. ஒன்றிய வஞ்சித்தளை, 6. ஒன்றாத வஞ்சித்தளை, 7. கலித்தளை.

**அடி—5**

1. குறளடி, 2. சிந்தடி, 3. அளவடி, 4. நெடிலடி, 5. கழிநெடிலடி.

**தொடை—43**

1. அடிமோனை, 2. அடிஎதுகை, 3. அடிமுரண், 4. அடியியைபு, 5. அடியளபெடை, 6. அந்தாதித்தொடை, 7. இரட்டைத்தொடை, 8. செந்தொடை, 9. இணைமோனை 35. தொடை விகற்பம்.

**பா—5**

1. ஆசிரியப்பா, 2. வெண்பா, 3. கலிப்பா, 4. வஞ்சிப்பா, 5. மருட்பா.

**பாவினம்—3**

1. தாழிசை, 2. துறை, 3. விருத்தம்.

**பண்பியல்—10**

1. சுருங்கச் சொல்லல், 2. விளங்க வைத்தல், 3. நவின்றோர்க் கினிமை, 4. நன்மொழி புணர்த்தல், 5. ஓசையுடைமை, 6. ஆழமுடைமை, 7. முறையில் வைப்பு, 8. உலகமலையாமை, 9. விழுமியது பயத்தல், 10. விளங்குதாரணத்ததாகுதல்.

**கொள்கை விகற்பம்—7**

1. உடன்படல், 2. மறுத்தல், 3. பிறர் கொள்கை கொண்டு ஆய்தல், 4. தா அனாட்டித் தனாது நிறுத்தல், 5. இருமாறு கோளில் ஒருதலைத் துணிதல், 6. பிறநூற் குற்றங் காட்டல், 7. தமதாய்வினையே சிறப்பித்தல்.

**உரை—13**

1. நெறி தோற்றுவித்தல், 2. சொல் வகுத்தல், 3. சொற் பொருள் உரைத்தல், 4. தொகுத்துக் கேட்டல், 5. பதில் விடுத்தல், 6. புதியன காட்டல், 7. மேற்கோள் காட்டல், 8. பிற உரை காட்டல், 9. உறுதிப்படுத்தல், 10. தொகுத்து முடித்தல், 11. விரித்துக் காட்டல், 12. துணிந்தவை கூறல், 13. பயன்படச் சொல்லுதல்.

## 1. இலக்கணச்சுருக்கம்

தமிழ் மொழியில் காணப்படும் அசை, சீர், பொருட் சொற்கள்; அவை கருத்தாழம் கொண்டனவாக, சுவைமிக்கன வாக, அழுத்தமாக, சிறுசொல்; பெரும் விளக்கம் எனவாகத் திருவள்ளுவர் அவருடைய, அதாவது, நமக்குக் கிடைத்துத் தொகுக்கப்பட்ட 1330 குறள்களில், ஒன்றனுக்கு ஏழு சீராக மொத்தம் 9,310—அசை, சீர்ப் பொருட் சொற்றொகுப்புகள் இடம் பெற்றிருக்கின்றன.

அவை அனைத்தும் இலக்கணச் சீர்கள். குறளில் வந்த சீர்கள் உணர்த்துமிடத்து, அதற்கு அடிப்படை யாப்புகள் கீழ்க்கண்டவை களே, முன்னும் பின்னும் பரவலாகச் சட்டபூர்வமாக வர வேண்டியவை வந்திருக்கின்றன.

செய்யுள் ஆரம்ப இலக்கணம் கூறுமிடத்து :

## 1. இலக்கணம்

"எழுத்தசை சீர் தளை அடிதொடை ஆறும்
செய்யுள் உறுப்பெனச் செப்பினர் புலவர்"

—எனவாக உறுப்புகள் 6. அவை: எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை என்பதறிக.

தொல்காப்பியரும்,

"எழுத்து இயல் அசைவகை எனாஅ
யாத்த சீரே யாப்பு"

என்றார்.

## 2. இலக்கணம்

"குறிலே நெடிலே குறிலிணை குறினெடில்
தனித்தும் ஒற்றடுத்தும் வரின் நேர்நிரையெனும்
அசையாம் அவை நாள் மலர் வாய்ப்பாடே" என

அசைகள்—2

**நேர் : நாள்; நிரை : மலர்**

| அசை | வாய்ப்பாடு | சீர் |
|---|---|---|
| நேர் + நேர்<br>நிரை + நேர் | தேமா<br>புளிமா | மாச்சீர் |
| நிரை + நிரை<br>நேர் + நிரை | கருவிளம்<br>கூவிளம் | விளச்சீர் |
| நேர் + நேர் + நேர்<br>நிரை + நேர் + நேர்<br>நிரை + நிரை + நேர்<br>நேர் + நிரை + நேர் | தேமாங்காய்<br>புளிமாங்காய்<br>கருவிளங்காய்<br>கூவிளங்காய் | காய்ச்சீர் |
| நேர் + நேர் · நிரை<br>நிரை + நேர் + நிரை | தேமாங்கனி<br>புளிமாங்கனி | கனிச்சீர் |
| நிரை + நிரை + நிரை<br>நேர் + நிரை + நிரை | கருவிளங்கனி<br>கூவிளங்கனி | வஞ்சிச்சீர் |

அகவல் ஆசிரியம் நூற்பா :

தேமா, புளிமா, கருவிளம், கூவிளம் என்பன மாச்சீர் + விளச்சீர் என ஆசிரியப்பாவிற்கு வரும்.

"ஈரசை நாற்சீர் அகவற் குரிய" எனப்படும்.

ஆனாலும்,

''ஈற்றயலடி முச்சீராய் ஏனைய அடிகள் நாற்சீராய்''

வரும் என்பது இலக்கணம்.

அகநானூறு, புறநானூறு, குறுந்தொகை, நற்றிணை— ஆகியவை நானூறு பாடல்களாக அமைந்த அகவலாசிரியம் என்பது குறிப்பிடத்தக்கது. இவ் அகவலாசிரியப் பாக்களின் முடிவில்; ஏ, என், என முடிவது சிறப்பு.

பண்டைய இலக்கியங்களில் கீழ்வருமாறு சீர்வகை அமைந் துள்ளன.

**காய்ச்சீர், மாச்சீர், விளச்சீர்,** — திருக்குறள்
**கனிச்சீர்** — பட்டினப்பாலை

இவையன்றி, கலிப்பாவில் காய்முன் நிரை நின்று கலித்தளை வரும்.

### 3. இலக்கணம்

''நேர்நேர் தேமா நிரைநேர் புளிமா
நிரைநிரை கருவிளம் நேர்நிரை கூவிளம்
எனுமிவை நான்கும் ஈரசைச் சீரே''

**தேமா புளிமா கருவிளம் கூவிளம்**
**தேமா புளிமா கூவிளம் கருவிளம்**

தேமா—மாச்சீர், கருவிளம்—விளச்சீர். இவை முறையே இயற்சீர், ஆசிரிய உரிச்சீர் எனவும் பெயர் பெறும்.

மேற்கண்ட அகவல் ஆசிரிய நூற்பா கூறுமிடத்து ஈற்றயலடி மூன்று சீராக இல்லாமல், நான்கு சீராக வருவது **நிலைமண்டில** ஆசிரியப்பா. முதலடி நாற்சீர், இறுதியடி நாற்சீர், இடையடிகள் இருசீர், முச்சீர் கொண்டு வருவன **'இணைக்குறள் ஆசிரியப்பா'** என வகைபிரியும்.

நமக்குக் கிடைத்த நூற்பாக்களின் அடி, சீர் முதலியன கொண்டே பிறபட்ட இலக்கண வகைத் தலைப்பும், அதன் வகைப் பிரிப்பும் என்பதறியவும்.

### 4. இலக்கணம்

''மா விள முன்னர்க் காய் கனி யடையின்
வெண்பா வஞ்சி யுரிச்சீராமே''

வெண்பா, வஞ்சிப்பா :

தேமாங்காய் : காய்ச்சீர், வெண்சீர் வெண்பாவிற்குரியது.
தேமாங்கனி : கனிச்சீர், வஞ்சிச்சீர் வஞ்சிப்பாவிற்குரியது.

## 5. இலக்கணம்

''நாள் மலர் காசு பிறப்பு எனும் நான்கும்
வெண்பா ஈற்றில் மேவிடுஞ் சீரே''

நாள், மலர், காசு, பிறப்பு—ஆக நான்கு சீர். இந்த வாய்ப்பாடுகள் பின்பற்றப்பட்ட கருத்துச் சொற்றொகுப்புகள் இறுதிச் சீரில், திருக்குறள், நாலடியார், வெண்பாமாலை, கீழ்க்கணக்கு நூல்கள், நளவெண்பா, புறப்பொருள் வெண்பாமாலை முதலிய நூல் பார்த்து அறிக.

நேர் —நாள்
நிரை—மலர் } அசைச்சீர்

காசு, பிறப்பு—என்ற எழுத்தின் கடை எழுத்துப் பற்றி,

''இருவகை உகரமொடு இயைத்தவை வரினே
நேர்பும் நிரையும் ஆகும்,என்ப
குறில் இணை உகரம் அவ்வழியான''

என்பது தொல்காப்பிய நூற்பா,

நேர்பு —காசு
நிரைபு —பிறப்பு } தொல்காப்பியர் கூறும் வெண்பா ஈற்றுச் சீர்இது

மேற்கூறியவற்றைச் சுருக்கமாகக் கீழ்வருமாறு சுருக்கி அறியலாம்.

**தே, மா, கூ, காய், நாள், கா—நேர் (சீர்)**

**புளி, கரு, விளம், கனி; மலர், பிற(ப்பு)—நிரை (சீர்)**

**சு, பு, என்பது உகர ஈறு.**

**சீர்கள்**

தே மா — நேர் நேர்
புளி மா — நிரை நேர்
தே மாங் காய் — நேர் நேர் நேர்
புளி மாங் காய் — நிரை நேர் நேர்
கூவிளம் — நேர் நிரை
கருவிளம் — நிரை நிரை
கூவிளங்காய் — நேர் நிரை நேர்
கருவிளங்காய் — நிரை நிரை நேர்

மேற்கண்ட சீர்கள் தவிர வெண்பாவில் வரும் ஈற்றுச் சீர்கள் மீண்டும் வருமாறு :

| | | | |
|---|---|---|---|
| நாள் | காசு | மலர் | பிறப்பு |
| நேர் | நேர் நேர் | நிரை | நிரை நேர் |

என்ற சீர்க்கணக்கில் வந்தாலும் கு, சு, டு ,து, பு, று, — என்ற ஈற்றெழுத்துகளைக் கொண்டு முடிய வேண்டும். இந்த விளக்கம் பிறகும் தொடர்வதறியவும்.

தொல்காப்பியச் சிறு சொற்தலைப்புகளுக்குப் பலவகைப் பொருள்கள் அதாவது, சூழலுக்கேற்பப் பெரும் பொருள், சிறு பொருள் கொள்ளலாம். அவ்வாறே நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறு நூறு. அவற்றின் பிறகு வரும் பதிற்றுப் பத்து, பரிபாடல், கலித்தொகை ஆகியவற்றில் மலிவுத்திணிப்புகள் மிகையாக இருக்கின்றன. ஒரு கதையைச் சொல்லும் சிலப்பதி காரப் பாடற்பொருட் சொற்கள் ஒரு சார்பு விளக்கத்தில் செல்கின்றன. ஆனால் கி.மு. 7ஆம் நூற்றாண்டுத் தொல் காப்பியத்திற்கும். கி. பி. இரண்டாம் நூற்றாண்டுச் சிலப்பதி காரத் திற்கும் இடைப்பட்ட திருக்குறள் இயற்றிய திருவள்ளுவர் வடமொழி வழக்கை அறிந்தவராக இருந்தாலும் திருக்குறள் தனித்தமிழில் இயன்றுள்ளது. அதாவது, மற்ற நூல்களில் காணப்படாத பலபொருட் தமிழ்ச் சொற்களைத் தாங்கியதாகத் திருக்குறள் அமையவேண்டும் என்பதில் திருவள்ளுவர் தமது புலமைத் தெளிவைப் பயன்படுத்தியுள்ளார். திருக்குறளின் தமிழ்ச்சொல் வளமே அதற்குச் சான்று.

ஆழ்ந்த புலமையுடன் இலக்கணம் பெற்ற தமிழ்ச் செய்யுள் வடிவங்களே, இசைச்சொற்களே—அவற்றைக்கொண்ட இலக்கியங் களே மீண்டும் இலக்கணத்திற்குக் கொண்டுவரப் பெற்றன. தமிழ்ச் சொற்கள் எனக்கொள்ளப் பெற்ற முன்மாதிரியான அருமை, பெருமை, வாழ்வு, தாழ்வு, இன்பம், துன்பம், அழகிய, இளகிய, முதலான எழுத்து, சொல், பொருள்: உணர்த்தும் போது அசைச்சீர் என வாய்ப்பாடு பெற்றன.

ஓரெழுத்து, இரண்டெழுத்து, மூன்றெழுத்து, நான் கெழுத்துக் கொண்டவையே சொற்றொகுப்புகளாகச் சங்க இலக்கியங்களில் அறியக் கிடைக்கின்றன. வினையால் அளந்து அவை இணையும்போது விரிந்த பொருள் உணர்த்தும், அந்த

வெண்பாட்டுக்களே சீர் வடிவம் பெற்றன. அகவலாசிரியங்களாகவும், கட்டளைக் கலித்துறைகளாகவும் பரந்த காதைகள் உரைத்தன.

இக்காலத்திலும் நாம் பேசும் நடைமுறைப் பேச்சுத் தமிழிலும்—எழுத்துத் தமிழிலும் வரம்புக்கு உட்பட்ட சீர் அசைச் சொற்றொகுப்புகளே இருக்கின்றன. எடுத்துக்காட்டாக,

'நான்வந்தால் உன்னைப் பார்ப்பேன்'—என்ற வரியில்,

| | | |
|---|---|---|
| **நான் வந் தால்** | — | தே மாங் காய் |
| **உன் னைப்** | — | தே மா |
| **பார்ப் பேன்** | — | தே மா |

'அதற்காக நான் என்ன செய்யவேண்டும்?'

—என்ற வரியில்,

| | | |
|---|---|---|
| **அதற்காக** | — | புளி மாங் காய் |
| **நான்** | — | நாள் |
| **என் ன** | — | தே மா |
| **செய்'ய வேண்டும்** | — | கூவி ளங்காய் |

—என இவ்வாறு எழுத்து, பேச்சு அனைத்தையும் சீர் பிரிக்க முடியும்.

'சீர்'ச் சொற்களே தமிழ்மொழியின் உரைநடைச் சொற்கள் என்பதறியவும்.

ஓரடிக்கு இத்தனை சீர்கள்; இத்தனை சீர்கள் கொண்டது ஈரடி, நாலடி—என்ற வரையறை வரும்போது, அவை எதுகை, மோனை; தாளச்சந்தம் என்றிவற்றின் கட்டுப்பாட்டிற்குள் வந்து விடுகின்றன. இத்தகைய பாக்களை இசை விருத்தங்களாகவும், தாளக்கருவி யாழ்வகை கொண்ட வாய்ப்பாட்டுப் பாடலாகவும் கொள்ள முடியும்.

தமிழ்ச் சொற்களின் அமைப்பை, அவ்வாறு தொல்காப்பியர் கூறும் 20—வண்ணங்களும் அந்த விரிப்பு வகைகளில் அடங்கும்.

செப்பலோசை நயத்தில் மோனை எதுகை கொண்டு புதுக் கவிதைகளைச் சொல்லலாம். பாட முடியாது, பாடினால் தாளக் கட்டுக்குள் அடங்காது. சொற்களைப் பிய்த்துப் பிய்த்துக் கட்டி ஒழுங்குபடுத்தும் வேண்டாத திணிப்பு ஏற்படும். சீர்ச் சொற்கள் புதுக்கவிதை வரிசையில் வந்தாலும் இத்தனை சீர்கள்—இந்த இந்த அடி வகைக்கு என்ற தாளக்கட்டுடன் கொண்ட வெண்டளை, இயற்றளைச் சொற்கள், வரும் நெறி மாறி அவை பிடிபடாது நழுவிக் கூடுதலாக நின்று பிழைப்படும். தமிழும்

சந்தமும் மணக்கும் தேவாரம், திருப்புகழ் ஆகியவை இசைத் தாளம், பதம் அனைத்திற்கும் கட்டுப்பட்ட க்ளஞ்சியங்களாகும்.

உலக மனித இன வாழ்வியல் அடிப்படைக்குத் தேவையான அறம், பொருள், இன்பம் என்ற கருத்தின் விரிவாக்கத் தொகுப்பினை இரண்டு அடிகளில் ஒவ்வொரு பொருள் விளக்கம் கூறிய திருவள்ளுவரின் பாடல் இலக்கணப் புலமை, தமிழில் எவ்வாறெல்லாம் படிப்பிக்கப்பட்டிருந்தது, அதை மற்றவரும் பயின்றனர், வள்ளுவரும் அதில் தெளிவு பெற்றார் என்பதை அறிய வேண்டும்.

### 7 இலக்கணம்

மேற்கண்ட இலக்கணச் சீர்களில்,

''மாமுன் நிரையும் விளமுன் நேரும்
வருவ தியற்சீர் வெண்டளை''

### 8. இலக்கணம்

''காய்முன் நேர் வருவஃது
வெண்சீர் வெண்டளை''

என்றவாறு பரவி வரும்.

### 9. இலக்கணம்

''மாமுன் நேரும் விளமுன் நிரையும்
வருவது ஆசிரியத் தளை யாமே''

### இயற்சீர் வெண்டளை

**மா னே மயி லே** — மா முன் நிரை
மா + நிரை

**மர கதப் பூ ணே** — விளம் முன் நேர்
விளம் + நேர்

### வெண்சீர் வெண்டளை

**தூங் கா த கண் என் ன** — காய் முன் நேர்
காய் + நேர்

### ஆசிரியத்தளை

**பொன் னே பூ வே** — மா முன் நேர்
மா + நேர்

**புலர்ந் தது பொழு தே** — விளம் முன் நிரை
விளம் + நிரை

**கலித்தளை**

நீ ரோ டைக் •கரை யில் — காய் முன் நிரை
காய் + நிரை

**10. இலக்கணம்**

''காய் முன் நிரை வருவது கலித்தளை''

**வஞ்சித்தளை**

படர் கொடி யதில் பனி நீர் — கனி முன் நிரை
கனி + நிரை (ஒன்றிய வஞ்சித்தளை)

மடல் அவிழ் முகம் கண் டேன் — கனி முன் நேர்
கனி + நேர் (ஒன்றாத வஞ்சித்தளை)

**11. இலக்கணம்**

''கனி முன் நிரையும் நேரும் வருதல்
ஒன்றிய ஒன்றாத வஞ்சித் தளை''

''அடியின் சிறப்பே பாட்டு''—எனவாக

''நாற்சீர் கொண்டது அடி''

என அளவும் கூறுகின்றார் தொல்காப்பியர்.

''நால் எழுத்து ஆதியாக ஆறு எழுத்து
ஏறிய நிலைத்தே குறளடி''

தொல்—செய் : 35

''ஏழ் எழுத்து என்ப சிந்தடிக்கு அளவே
ஈர் எழுத்து ஏற்றம் அவ்வழி யான''

—மேலது : 36

''பத்துஎழுத் தென்ப நேரடிக்கு அளவே
ஒத்த நால் எழுத்து ஒற்றலங் கடையே''

—மேலது : 37

''மூ-ஐந்து எழுத்தே நெடிலடிக்கு அளவே
ஈர் எழுத்து மிகுதலும் இயல்புஎன மொழிப''

—மேலது : 38

''மூ-ஆறு எழுத்தே கழிநெடிற்கு அளவே
ஈர் எழுத்து மிகுதலும் இயல்புஎன மொழிப''

—மேலது : 39

மேற்கண்ட விளக்கத்தோடு பாவகை விரிப்பாகத் தொல்காப்பியர்;

"ஆசிரியம் வஞ்சி வெண்பா கலி என
நால் இயற்று என்ப பாவகை விரியே"

—மேலது : 101

என்றார். இதனைப் பின்பற்றியே,

"இயற்சீர் குறளடி முச்சீர் சிந்தடி
நாற்சீர் அளவடி ஐஞ்சீர் நெடிலடி
அறுசீர் முதலன கழிநெடி லடியே"

என யாப்பிலக்கண நூல், குறளடி, சிந்தடி, அளவடி, நெடிலடி கழிநெடிலடி—என்றவாறு ஐந்து வகை அடிகள் கூறிற்று.

"ஆசிரியப் பாட்டின் அளவிற்கு எல்லை
ஆயிரம் ஆகும். இழிபு மூன்றடியே"

தொல்—செய் : 150

என, ஆசிரியப்பாவின் அடி இலக்கணம் கூறினார். எனவே, ஆயிரம் அடிகள் உயர்ந்தும், மூன்றடிகளில் குறைந்தும் வருவது ஆசிரியப்பாவின் அடி இலக்கணம்.

ஆசிரிய மண்டலிப்புகளில் பலவகை உண்டு. அவற்றில் ஒன்றிரண்டு எப்படி இலக்கணச் சீர் கொண்டு இயங்குவன என்பதறிவோம். நான்கு சீர்களை ஓர் அடியாகக் கொண்டு அமையும் நேரிசை ஆசிரியம் கீழ் வருமாறு :

## 1. செய்யுள்

**"கொண்ட உறுப்புகள் குழைந்தே ஆடினும்
நின்றே ஆடும் நேரசை தேசிகம்
தொன்றும் புதுமையும் துலக்குவ தாக
கடிசரி மண்டலம் கரணம் வர்த்தனை
கட்டுப் புரியம் களியம் உள்ளாளம்
வாங்குதல் குஞ்சிப்பு வாசிப்பு குத்துதல்
கட்டுதல் கம்பித்தல் சுற்றி வாங்குதல்
இட்டுப் புகுதல் நடுக்கல் நெளிநல்
ஆபிடம் கீற்றே அப்புதல் அனுக்குதல்
மாறுகால் உடற்புரி ஊர்தல் என இவை
இருபத்து நான்காம் இதற்கெனக் கால்கள்
வரம்பாம் இலக்கணம் வரைந்தோ தினரே"**

**— புரட்சிதாசன்**

மேற்கண்ட நேரிசை ஆசிரியப்பாவின் முதல் அடிக்குரிய நான்கு சீர்களும், கீழ்வருமாறு அமைந்துள்ளன.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| கொண் | ட | உறுப் | புகள் | குழைந் | தே | ஆ | டினும் |
| நேர் | நேர் | நிரை | நிரை | நிரை | நேர் | நேர் | நிரை |
| தே | மா + | கரு | விளம் + | புளி | மா + | கூ | விளம் |

## நிலைமண்டில ஆசிரியம்

### 2. செய்யுள்

''தேசிகம் வடுகு சிங்களம் மூன்றும்
திரிசொல் இயற்சொல் திசைச்சொல் கொண்டு
பேசும் பலநிலப் பரப்பை யுணர்த்தும்
பிற்பட முற்படப் பிணைத்தே அகப்புறக்
கற்பனை நளிநயம் கணித்தே இயங்கும்
வகையென மூன்று வரைந்தோ தினரே''

—புரட்சிதாசன்

இப்பாடலின் முதலடி கொண்டு சீர்களுக்கு இலக்கணம் கீழ் வருமாறு கூறலாம்.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| தே | சிகம் | வடு | கு | சிங் | களம் | மூன் | றும் |
| நேர் | நிரை | நிரை | நேர் | நேர் | நிரை | நேர் | நேர் |
| கூ | விளம் + | புளி | மா + | கூ | விளம் + | தே | மா |

## 3. பொழிப் பெதுகை ஆசிரியம்

### 3. செய்யுள்

''நடுவண் ஐந்திணைப் படிவம் பாலை
இடமில் லாத உடைமை போன்று
சிங்களம் என்பது தன்தளம் கொண்ட
அங்க உறுப்புகள் பங்கய மாக
அவிநயம் காட்டிச் சுவைதரும் பாட்டின்
புவிநயம் உணர அவையுணர்த் துதலே
கைத்தொழி லமைத்து மெய்த்தொழில் காட்டல்
மெய்யினைச் சாய்த்தல் கையினைத் தூக்கல்
அசைத்தல் அணைத்தல் இசைத்திடை நெரித்தல்
சுழித்தல் பற்றல் குவித்தல் விரித்தல்
ஒன்பது நளிநயம் என்பது இலக்கே''

—புரட்சிதாசன்

இப்பொழிப் பெதுகை ஆசிரியப்பாவின் இலக்கணமாவது ;

"ஒருசீர் இடையிட்டு, எதுகை ஆயின்
பொழிப்பு என மொழிதல் புலவர் ஆறே"
—தொல். செய்—94

என்பதாகும். இவ்இலக்கணத்திற்கு ஏற்ப மேற்கண்ட எடுத்துக் காட்டில் முதல் இரண்டடிகளில் இலக்கணச் சீர்கள் அமைந் துள்ளதைக் கீழ்வருமாறு அறியலாம்.

முதலடி :

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| **நடு** | **வண்** | **ஐங்** | **திணைப்** | **படி** | **வம்** | **பா** | **லை** |
| நிரை | நேர் | நேர் | நிரை | நிரை | நேர் | நேர் | நேர் |
| புளி | மா + | கூ | விளம் + | புளி | மா + | தே | மா |

இரண்டாம் அடி :

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| **இட** | **மில்** | **லா** | **த** | **உடை** | **மை** | **போன்** | **று** |
| நிரை | நேர் | நேர் | நேர் | நிரை | நேர் | நேர் | நேர் |
| புளி | மா + | தே | மா + | புளி | மா + | தே | மா |

கிடைத்த தமிழ் இலக்கிய இலக்கணங்களில் தனித்தமிழ்ச் சொற்களுடைய ஒன்பது பகுதிகளைக் கொண்ட சாத்தனாரின் கூத்தநூல் அகவற்பா, சமணம் பௌத்தம் தழுவிய கி.பி. இரண்டாம் நூற்றாண்டுச் சிலப்பதிகாரமும், மணிமேகலை யும் கொங்குவேளின் பெருங்காதையும் எனப்பண்டை இலக்கியங் களில் அகவலாசிரியப் பாக்களே மிகுதி என்பதறியவும். சங்கத் தொகை நூல்களோ அகவற்பாவின் முழுதுறு முகிழ்ப்புகளே என்பது வெளிப்படை. நிறைந்த செய்திகளை ஓசை நயத்துடன் சொன்ன போகர் புலிப்பாணிகளின் மருத்துவ சிந்தாமணிகள் அறுசீர் மண்டலிப்பு, எண்சீர் மண்டலிப்பு என்பன குறிப்பிடத் தக்கவை. எளிதாக இருப்பதால் எண்சீர், அறுசீர், விருத்தங்கள் எழுதுவதில்தான் இன்றைய கவிஞர்கள் அதிக ஈடுபாடு கொள் கின்றனர். அவ் அறுசீர் எண்சீர் விருத்த வகையில் பல வழக்கொழிந்து விட்டன. அனைத்துவகை இலக்கணப் பாடல் களையும் இயற்றுவதில், புலமை உள்ளவர்கள் சீர் இலக்கணங் களை நிறையப் பயின்று, அதில் தெளிவு பெறவேண்டும். அதுவே தமிழ்மரபுக்கு, இலக்கணத்திற்கு, வளரும் கவிஞர்கள் ஆற்ற வேண்டிய மாபெருந் தொண்டு!

அறுசீர்; ஆறுசீர்ச் சொற்களை உடையது, அறுசீர் மண்டலிப்பு என்ற அறுசீர் விருத்தம் மாச்சீரும் விளச்சீரும்

நிரம்பியவை. ஆனாலும், அவைவழி விருத்தங்களில் காய்ச் சீரும் கொள்ளப்பட்டிருக்கின்றன.

கம்பராமாயண அறுசீர் விருத்தங்களில் **விளச்சீர்** மிக மிகச் சிறப்பிடம் பெற்றுள்ளன. சில பாடல்களின் அடிகளைக் கீழ்வருமாறு எடுத்துக்காட்டுவதால் அதை அறியலாம்.

1. இந்திரன் செம்மல் பண்டோ
   கூவிளம் தேமா தேமா
2. ஆழிசூழ் உலகம் எல்லாம்
   கூவிளம் புளிமா தேமா
3. தண்டலை மயில்க ளாடத்
   கூவிளம் புளிமா தேமா

இவ்வாறு விளச்சீர் கையாளப்பட்டஇடங்கள் மிகுதி. கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையும் 'புத்தரும் மகனை இழந்த தாயும்—என்ற' தலைப்பில் அறுசீர் விருத்தத்தில் விளச்சீர் கையாண்டு உள்ளார். எடுத்துக்காட்டாக, அடியில் மூன்றாம் சீர், மாச்சீரில் தேமாச்சீர் கொண்டதாக இயற்றிய விருத்தம்:

1. சந்திர மதிபோல் நின்ற
   கூவிளம் புளிமா தேமா
2. தையலை நோக்கி ஐயன்
   கூவிளம் தேமா தேமா
3. வெந்துயர் விளைந்த தென்னை
   கூவிளம் புளிமா தேமா
4. விளம்புக எனலும் அன்னார்
   கருவிளம் புளிமா தேமா
5. நைந்துநொந் துருகி உள்ளம்
   கூவிளம் புளிமா தேமா
6. நயனத்தின் வழியாய் ஓட
   கருவிளம் புளிமா தேமா
7. மைந்தனைக் காட்டி அந்த
   கூவிளம் தேமா தேமா
8. மறுமொழி கூற லுற்றாள்
   கருவிளம் தேமா தேமா

## குறள் வெண்பா

ஒன்றே முக்கால் அடியும், ஏழு சீர்களும் கொண்ட குறைந்த அளவுள்ள வெண்பாவே குறள். மேற்கண்ட இலக்கணத்துடன் அந்தக் குறளை, கி.மு.32-ல் 'வள்ளுவர் திருக்குறள்' எனப் பெருமைப் படுகிறோம். அதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே, அந்த இலக்கண மரபு, தொகுப்பு, இயற்றப்பட்டிருந்த பாடல், கி.மு. 668 தொல்காப்பியத்தில் அவர் கூறும் பாடல் சான்ற புலனெறி வழக்கிலும்' நாடக வழக்கு, உலகியல் வழக்கு இவற்றின் கலி பரிபாட்டில் (கலி—42, 63—பாடல்களில்)

"ஞாயிற்று முன்னர் எரிபோல மாய்ந்ததென்
ஆயிழை மேனிப் பசப்பு"

"தமக்கினி தென்று வலிதின் பிறர்க்கின்னா
செய்வது நன்றாமோ மற்று"

"மையில் மதியின் விளங்கும் முகத்தாரை
வெளவிக் கொளலும் அறன்"

—என இயற்றப்பட்டிருப்ப தறியவும். அதாவது, தொல்காப்பியத்திற்கு முன்னரே குறள் இலக்கணப்பா இருப்பதறியவும்.

ஈரடி வெண்பாக் குறள் என்பதற்கு, அதன் உறுப்புக்கூறி,

"தொடையொன் றடியிரண்டாகி வருமேற்
குறளின் பெயர்க்கொடை கொள்ளப் படுமே"

எனக் காக்கை பாடினியம் விளக்கும்.

"ஈரடி இயைந்தது குறள் வெண்பாவே"

—என்று அவிநயனாரும் கூறினார்.

சீர் ஒழுங்கு பெற்ற அந்தச் செறிவான குறள் இலக்கணம் கூறுமிடத்து, வெண்பா இலக்கண அடிப்படையில் கீழ்வருமாறு அறியலாம்.

ஞா யிற் று முன் னர் இருள் போ ல
நேர் நேர் நேர் நேர் நேர் நிரை நேர் நேர்
தே மாங் காய்+தே மா + புளி மாங் காய்
காய் முன்நேர். மா முன் நிரை

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| இருள் | போ | ல | மாய்ந்த | தென் | ஆ | யிழை | |
| நிரை | நேர் | நேர் | நேர் | நிரை | நேர் | நிரை | |
| புளி | மாங் | காய் | கூ | விளம் + | கூ | விளம் | |

காய் முன் நேர். விளம் முன் நேர்

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆ | யிழை | மே | னிப் | பசப் | பு | |
| நேர் | நிரை | நேர் | நேர் | நிரை | நேர் | |
| கூ | விளம் | தே | மா | புளி | மா | பிறப்பு |

விளம் முன் நேர். மா முன் நிறை

| | | | |
|---|---|---|---|
| தமக் | கினி | தென் | று |
| நிரை | நிரை | நேர் | நேர் |
| கரு | விளம் + | தே | மா |

விளம் முன் நேர்

| | | | | |
|---|---|---|---|---|
| வலி | தின் | பிறர்க் | கின் | னா |
| நிரை | நேர் | நிரை | நேர் | நேர் |
| புளி | மா + | புளி | மாங் | காய் |

மா முன் நிரை

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| செய் | வது | நன் | றா | மோ | மற் | று | |
| நேர் | நிரை | நேர் | நேர் | நேர் | நேர் | நேர் | |
| கூ | விளம் | தே | மாங் | காய் | தே | மா | (காசு) |

விளம்முன் நேர்

| | | | |
|---|---|---|---|
| மை | யில் | மதி | யின் |
| நேர் | நேர் | நிரை | நேர் |
| தே | மா + | புளி | மா |

மா முன் நிரை

| | | | | |
|---|---|---|---|---|
| விளங் | கும் | முகத் | தா | ரை |
| நிரை | நேர் | நிரை | நேர் | நேர் |
| புளி | மா | புளி | மாங் | காய் |

| | | | | |
|---|---|---|---|---|
| வெள | விக் | கொள | லும் | அறன் |
| நேர் | நேர் | நிரை | நேர் | நிரை |
| தே | மா | புளி | மா | மலர் |

மா முன் நிரை

மேற்கண்ட பாடலடிகளில் குறள் வெண்பாவிற்குரிய சீர் இலக்கணம் ஒழுங்காகப் பின்பற்றப்பட்டிருப்பது அறியவும். இதனிலும் சிறப்பாகத் திருவள்ளுவர் 1330 குறளிலும் இலக்கணம் சிறப்பாக அமைந்துள்ளதோடு, வாழ்வியல் படிப்பினைப் பொருளும் சிறப்புறக் கூறியிருக்கிறார். அதன் பொருட் சிறப்பையே.

''கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தரித்த குறள்'

என்று இடைக்காட்டரும்.

''அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தரித்த குறள்''

என்று ஔவையாரும் கூறியிருக்கின்றனர்.

கலி, பரிபாடலில் காணும் குறள் அடிகளில், அதாவது சிறப்புக்குரிய மோனை, எதுகை பின்பற்றப்படவில்லை. ஆனாலும்.

''எழுத்து முதலா ஈண்டிய அடியின்
குறித்த பொருளை முதல் நாட்டல்
யாப்பு''

எனத் தொல்காப்பியம் கருத்துரைக்கின்றது-

## 4. செய்யுள்

**''வைத்திருந்தால் நம்பிறப்பை வாழ்த்துவார் இல்லையெனப்
பொய்த்திருந்தால் பாரார் புறம்''**

**—புரட்சிதாசன்**

மேற்கண்ட குறள் நான்கு காய்ச்சீர்களும், ஒரு விளச்சீரும் ஒருமாச்சீரில் புளிமாவும், ஈற்றுச்சீர் மலர் (புறம்) என்னும் வாய் பாட்டையும்பெற்று முடிகிறது. மூன்றாம் சீரில்மோனை என்னும் நயமாக மேற்கண்ட எடுத்துக் காட்டில், மூன்றாம் சீரான 'வாழ்த்துவார்' என்பதில் மோனையும்,எதுகையாக பொய்ந்திருந் தால்'-என்பது இரண்டாமடி முதற்சீராகி வந்து அமைந்திருப் பதைத் தெளியலாம். பொருள், எழுத்தோட்டம் இவற்றின் காரணமாக மோனையும், எதுகையும் இடம்பெயர்ந்து மாறியும், இல்லாமலும் வரும் பாடல்கள் நிறைய அறியக் கிடக்கின்றன. குறிப்பாக வள்ளுவத்தின் முதல் குறள்,

"அகர முதல வெழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு"

மேற்கண்ட குறளில் நான்காம் சீரில் மோனை, 'ஆதி' என்றும்; எதுகையாக 'அக'வுக்குப் 'பக' என்றும் வந்துள்ளது. ஆனால், இரண்டாமடியின் இறுதிச் சீர் மோனை இன்றி 'உலகு' என முடிந்துள்ளது.

இறுதிக் குறள்,

"ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின்"—(1330)

இதில், மூன்றாம் சீரிலோ, நான்காம் சீரிலோ மோனை வரவில்லை. எதுகையாக, 'ஊடுதல்' என்பதற்கு 'கூடி' என வந்திருக்கிறது. இது தவறன்று. இதற்கு இலக்கணத்தில் விதி விலக்கு உண்டு.

கலித்தொகை, பரிபாடலில் இடம் பெற்றுள்ள குறள் வெண்பாவிற்கான இலக்கணம் பெற்ற பாடலடிகள் ஆங்காங்கே எதுகை, மோனைகள் குறைந்தே வருகின்றன.

'இலக்கியம் கண்டு இலக்கணம் இயம்பினர். பிரிக்கப்பட்டு, கணிக்கப்பட்டு, ஒழுங்கு செய்யப்பட்டது—என்பதற்குச் சான்றாக முன்னர்க் கூறியவாறு நாலடியார் தொடர்ந்து,

கி. பி. ஏழாம் நூற்றாண்டு ஐயனாரிதனார்
(புறப்பொருள் வெண்பா மாலை)

கி. பி. பத்தாம் நூற்றாண்டு அறிவனார்
(பஞ்சமரபு)

கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு சின்னூல்
வெண்பா

நேமிநாதர், ஒட்டக்கூத்தர், புகழேந்தி, காளமேகம், பெருந்தேவனார், ஏன்? தனிப்பாடற்றிரட்டுப் புலவர்கள், ஞானக்கோவைச் சித்தர்கள் கூட, அந்தப் பா இலக்கணக் கூறுகளான மோனை, எதுகையில் 'அறம்' என்பதற்கு 'மறம்' என்றும், 'அழகு' என்பதற்குப் 'பழகு' என்றும், ர-வுக்கு—ர-வும்; ழ-வுக்கு—ழ-வும் ண-வுக்கு—ண-வும் என இன்னவாறே எதுகையாகக் கொண்டு, அம்முறை பிறழக் கூடாது என்பதில் கண்டிப்புடன் இருந்தனர். இலக்கண அளவை நூல்களுள் ஒன்றான கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டுத் திருத்தக்க தேவரின் சீவக சிந்தாமணியைப் பின்பற்றியதே கம்பரின் இலக்கணக் கவித் திறன் என்பர்.

"திருத்தக்க மாமுனிசிந் தாமணிக் கம்பர்
விருத்தக் கவித்திறம்"

என்ற பாடலும் உண்டு. ஆனால், அதே சீவக சிந்தாமணியிலும் மேற்கண்ட எதுகை மோனை பற்றிய கட்டுப்பாடுகள் தளர்ந்திருக்கின்றன. இந்தக் கட்டுப்பாடுகளுக்கு விதிவிலக்கென, இனமோனை, கிளைமோனை—என இலக்கண வெண்பா ஒன்று கூறுமிடத்து :

நேரிசை வெண்பாவில்,

"அகரமோ டாகாரம் ஐகாரம் ஔகாம்
இகரமோ டீகாரம் எஏ—உகரமோ
டூகாரம் ஒஓ ஞநமவ தச்சகரம்
தோகாய் கிளையெழுத்தாச் சொல்"

(ஆகாத வல்லவ நூ)—எனப்படும்.

யா—இ, ஈ, எ, ஏ—ஓரினம்
யா—அ, ஆ, ஐ, ஔ—ஓரினம்

அடி, இணை, பொழிப்பு, ஒரூஉ, கூழை, மேற்கதுவாய், கீழ்க்கதுவாய், முற்று—என இவ் எட்டு வகைகளும், ஐந்து தொடைகளோடு இயைந்து விரிவடையும்.

அகர ஆகார ஐகார ஔகாரங்கள்
தம்முள் இனம்
இகர ஈகார எகர ஏகாரங்கள்
தம்முள் இனம்
உகர ஊகார ஒகர ஓகாரங்கள்
தம்முள் இனம்

சகர தகரங்கள் தம்முள் இனம்
ஞகர நகரங்கள் தம்முள் இனம்
மகர வகரங்கள் தம்முள் இனம்

இவற்றை மேற்கண்ட வெண்பாவில் வந்தவாறு 'அனு' என்று கூறுவதும் வழக்கு. இந்த 'வழியெதுகை' யை வடநூலார் 'அநுப்பியாசம்' என்று மாற்றுப் பெயர் வைத்துக் கொண்டனர்.

இவ்விலக்கணத்திற்கேற்பத் திருக்குறளில் எதுகை, மோனைகள் இடம் பெற்றுள்ளன.

"ஈத்துவக்கு மின்ப மறியார்கொ றாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்"

"அமிழ்தினு மாற்ற வினிதேதம் மக்கள்
சிறுகைய ளாவிய கூழ்"

இவற்றில் இனவெழுத்துப் பெற்ற எதுகைகள் இடம் பெற்று உள்ளன. இவ்வாறே மோனையும் இடம் பெற்றுள்ளமை அறியவும்.

இங்ஙனம், வர்க்க மோனை எதுகையாக இன எழுத்துக்கள் ஒன்றிவரத் தொடுத்தலின் வல்லின, மெல்லின, இடையினத் தோடு, மோனை—எதுகையைச் சார்த்தி மூன்று வகைப்படுத்து வதும் உண்டு.

அவ்வகை அமைப்பில் ர-வுக்கு எதுகையாக ரி என்று வரும். இவ்வாறு வர்க்க இன எழுத்து வரும் வகைக்குத் தொல்காப்பிய இளம்பூரணர் உரை மேற்கோள் வெண்பாவைச் சான்றாகக் காட்டலாம் :

"தருமர் மணக்குடவர் தாமத்தர் நச்சர்
பரிமேல் அழகர்..."

என்பதில், ரு-வுக்கு எதுகையாக ரி வந்தமை அறிக.

தொல்காப்பியப் பொருளதிகாரக் களவியல் 100-வது பாடலில்,

"பண்பிற் பெயர்ப்பினும் பரிவுற்று மெலியினும்
அன்புற்று நகினும்..."

என்ற அகவலில் ண-வுக்கு—ன வந்தமை அறிக.

"கொளற் கரிதாய்க் கொண்டகூழ்த் தாகிஅகத்தார்
நிலைக்கெளிதாம் நீர தரண்" —(குறள் : 745)

"தள்ளா விளையுளுந் தக்காரும் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு" —(குறள் : 731)

இக்குறள்களில் 'ள'-க்கு 'ல' எதுகையாய் வந்துள்ளமை அறியவும்.

"கண்ணொடு கண்ணினை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல" (குறள் :1100)

இதில், 'ண'வுக்கு 'ன' வந்துள்ளமை காண்க. இவை போல, நாலடியாரில் 'சென்றிரப்பர்' என்பதற்கு 'உண்டாக' என 'ன' கரத்திற்கு 'ண'கரம் எதுகையாயிற்று.

ஐயனாரிதனாரின் புறப்பொருள் வெண்பா மாலையில்,

"கழகத் தியலுங் கவற்று நிலையும்
அளகத் திருநுதலார் ஆய்ந்து" —(பாடல் : 359)

என 'ழ' கரத்திற்கு 'ள' வந்துள்ளது.

சங்கத் தொகை நூல்களிலும்,
தோழி—வீழ்ப; வெறிகொள்—குறைய; உய்ந்தோ—முந்த என்றார் போல,

டு வுக்கு ட, டி
ல வுக்கு லீ
ன வுக்கு ந, ண
ழ வுக்கு ள, ல

என்ற வகையில் எதுகை இடம் பெற்றுள்ளது.

யாப்பருங்கலக் காரிகையில் கண்டவாறு மூன்று வகைப்படும். இன எதுகைகளான வல்லின, மெல்லின, இடையின எதுகை வகையைக் கீழ்வரும் எடுத்துக் காட்டுகளால் அறியலாம்.

"தக்கார் தகவில ரென்ப தவரவர்
எச்சத்தாற் காணப் படும்"

தக்கார்—எச்சத்தால் : இது வல்லின எழுத்தால் வந்த வல்லின எதுகை,

"அன்பீனும் ஆர்வ முடைமை யதுவீனும்
நண்பென்னு நாடாச் சிறப்பு"

அன்பீனும்—நண்பென்னும் : இது மெல்லின எழுத்தால் வந்த மெல்லின எதுகை,

"எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு"

எல்லா—பொய்யா—இது இடையின எழுத்தால் வந்த இடையின எதுகை. இவை போலவே வல்லின, மெல்லின, இடையின மோனைகள் அமையும்.

தலை. இடை, கடை எதுகைகள் அமையுமாறு வருமாறு :

"கலை நவின்ற பெரும் புலமை
நிலை நவின்ற பன்னூல்கள்"

இது, தலையாய எதுகை யாகும்.

"அகர முதல வெழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு"

இது, இடையாய எதுகை யாம்.

"தக்கார் தகவிலர் என்ப தவரவர்
எச்சத்தால் காணப் படும்"

இது, கடையாய எதுகை யாகும்.

மெய் எழுத்துக்களில் ய, ர, ல, ழ, என எதுகையின் இடையே ஒன்றி நின்றால் அவை ஆசிடையிட்ட எதுகை எனப் பெயர் கொள்ளப் பெறும்.

வருக்க மோனை வருமாறு :

பகரமெய் வருக்க மோனை :

"ப கலே பல்பூங் கானற் கிள்ளை யோப்பியும்
பா சிலைக் குளவியொடு கூதளம் விரைஇப்
பி ன்னுப் பிணியவிழ்ந்த நன்னெடுங் கூந்தல்
பீ ர்க்கப் பெய்து தேம்படத் திருகிப்
பு னையீ ரோதி செய்குறி நசைஇப்
பூ ர்ந்தார் மார்ப புனத்துட் டோன்றிப்
பெ ருவரை யடுக்கத் தொருவே லேந்திப்
பே யுமறிய மாவழங்கு பெருங் காட்டுப்
பை ங்க ணுழுவைப் படுபகை வெரீஇப்
பொ ங்குசினைத் தணியாப் பூநுத லொருத்தல்
போ காது வழங்கு மாரிரு ணடுநாள்
பௌ வத் தன்ன பாயிரு ணீந்தி
(இ)ப்பொழுது வருகுவை யாயின்
நற்றார் மார்ப தீண்டலெங் கதுப்பே' '

(பாடல் : யாப்பருங்கலம் — குணசாகரர் உரையில்,
அமுத சாகரர் மேற்கோள்)

ப, பா, பி, பீ, பு, பூ, பெ, பே, பை, பொ, போ, பௌ, பகர ஒற்று(ப்) எனப் பதின்மூன்று எழுத்துகளில் அமைந்த இந்த வகையே **வருக்கமோனை** என்றறியவும்.

'வெண்பா இலக்கணத்தில் வர்க்க மோனை வைத்து எழுதுவது கடினம் என்று என் புலவ(ர்) நண்பர் ஒருவர் விட்ட அறைகூவலை ஏற்று, அப்பொழுதே, வேடிக்கைக்காக அவர் சொன்ன சிவனியக் காப்பாகவே தொடங்கி நான் எழுதிய வெண்பா வருக்க மோனை இதோ.

## 5. செய்யுள்

அ ருட் பெரும்
ஆ தி
இ றையுமை
ஈ சன்
உ ருப்பெற
ஊ ட்டி
எ டுத்த—கருப்பொருள்
ஏ டவன்
ஐ ங்கரன்
ஒ ப்பிலா
ஓ ம்க்ரன்
ஔ டதன்
அஃ ஃணன் காப்பு

—புரட்சிதாசன்

அகர முதல் ஆய்த எழுத்து வரை அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ. ஏ, ஐ, ஒ, ஓ, ஔ, ஃ, கொண்ட வருக்க மோனை வெண்பாவை மேற்கண்டு அறியவும்.

இவற்றையே,

"வருக்க நெடிலினம் வந்தால்
எதுகையும் மோனையுமென்
றொருக்கப் பெயரா னுரைக்கப்
படுமுயிரா யிடையிட்
டிருக்கு மொருசா ரிரண்டடி
மூன்றா மெழுத்து மொன்றி
நிரக்கு மெதுகை யென்னாலுஞ்
சிறப்பில நேரிழையே"

—யாப்பருங்கலக் காரிகை—43

என்றார், காரிகையார்.

"ய,ர,ழ,ல, வென்னு மீரிரண் டொன்றும்
வரன்முறை பிறழாது யுயிர்ப்பின.:.
தாசிடை யெதுகையென் றறைதல் வேண்டும்"

என்றார் காக்கைப் பாடினியார். அவ்வாறே யகர ஒற்றின் வந்த ஆசெதுகையாகக் கலித்துறை;

"காய்மாண்ட தெங்கின் பழம்வீழக் கமுகி னெற்றிப்
பூமாண்ட தீந்தேன் தொடைகீறி வருக்கை போழ்ந்து"
—சீவக சிந்தாமணி—31

"மன்பெரும் பவழக் குப்பை வாலணிகலம் செய்குப்பை
நண்பகல் இரவு செய்யும் நன்கலம் கூப்பினாரே"
—சீ. சி மணி—144

"தாய்முலை தழுவிய குழவி போலவும்
மாமலை தழுவிய மஞ்சு போலவும்"
—சீ. சி. மணி—100

"நுண்டுவி யிளஞ் சேவனோக்கோடு விளிபயிற்றித்
தன்சிறகாற் பேடை தழுவத் தலைவந்த திளவேனில்"
—சீ. சி. மணி—640

யகர, ணகர, மகர இனங்களில் ஆசிடை, வல்லோசை, விட்டிசை, வழி எதுகை என அனைத்தும் விரியும். பண்ணத்தி பாடிய இராமலிங்க அடிகளார் குறிலுக்குக் குறிலே எதுகையாகி, மதி என்பதற்குக் கொதி என்றே எதுகை பாடினார்; சீர்திருந்தப் பாடலாக,

"மதித்தமையாத மதவழக் கெல்லாம் சாய்ந்தது
வருணாசிரம மென்னும் மயக்கமும் மாய்ந்தது
கொதித்த உலகாசாரக் குதிப்பெல்லா மொழிந்தது
கொலையுங் களவுமற்றைப் புலையு மழிந்தது"

அருணகிரிநாதர் திருப்புகழில், குறிலும் குறிலிணையும் மெல்லின மெய்பெற;

"மருவே செறித்த குழலாற் மயக்கின்
மதனா கமத்தின் விரகாலே"

| | | | |
|---|---|---|---|
| புளிமா | புளிமா | புளிமா | புளிமா |
| புளிமா | புளிமா | புளிமாங்காய் | |

என மாச்சீர் முன் நிரை அசை வருமாறே பாடினார்.

மெல்லின மெய்யெழுத்தாக வந்த வெண்சீர் வெண்டளை நெடிலாக,

"மன்றலங் கொந்துமிசை
தந்தனந் தந்தவென
வண்டினங் கண்டுதொடர்
குழல் மாதர்"

கூவிளம் கூவிளங்காய்
கூவிளம் கூவிளங்காய்
கூவிளம் கூவிளங்காய்
புளிமாங்காய்"

என அமைந்துள்ளது.

வெண்டளையில் நேர்பு பெற்று நிரையாகக் காய்ச்சீரில் முடிந்த நெடில் பெற்றமை அறிக. இயற்சீர்க் குறிலுக்கு அந்தக் குறியே எதுகை. வெண்சீர் நெடிலுக்கு அந்த நெடிலே எதுகை.

நான்கு சீர்களைக் கொண்ட அடி ஒன்றாக, நான்கடிகளைக் கொண்டவற்றில் குறைந்த இரண்டடிக் குறளுக்கும், பன்னிரண்டு அடிவரை கொண்ட வெண்பாவிற்கும் உரிய எதுகை மோனை, வர்க்கமோனை, கிளைமோனை ஆகிய இலக்கண வகை அனைத்தையும் முன்கண்ட குறட்பாக்களில் எடுத்துக் காட்டியமையைக் கூர்ந்து அறிக.

திருக்குறளில் வெண்பாவிற்குரிய இலக்கணவகை பொழிப்பு, சிறப்பு, மோனை, எதுகை கொள்ளும் சீர்தாவி வரும் பெரும் புலமை, பொருள் செறிவு முதலிய சிறப்பனைத்தும் நிறைந்த யாப்புச் செய்யுள் திருவள்ளுவரின் தமிழ்க்குறள் களஞ்சியம்.

பொருள் வகையோடு 1330—குறள்களிலும் பொதிந்திருக்கும் யாப்புவகை விதி- இலக்கணப் புலமையின் மகுடமாகும். அவ்இலக்கணச் சிறப்பைக் கூர்ந்து அறியுங்கால், நமக்குத் தமிழ்ச் சான்றோர் புடம் போட்டுக் காத்துவைத்த இலக்கணப் பெருமையை அறிவது கடினமானாலும், அழித்திட முடியாது. கட்டிக் காப்போம்! அக்கருத்துப் புலமைகளைப் பயின்று பயின்று வெளிக் கொணர்வோம்,

# 1. இலக்கண இலக்கியம்

## 1. எழுத்து

### கட்டளை வெண்பா

### 6. செய்யுள்

''சொல்லினைச் சுட்டும் தொடரெழுத் தத்துடன்
நல்லசைச் சீரும் நடைத்தளையும்—வல்ல
அடிதொடை ஆறும் அருந்தமிழ்ப் பாவின்
முடியும் உறுப்பும் முதல்!''

—புரட்சிதாசன்

(இது, முதல் மூன்றடிளும் தனித்தனிப் 12 எழுத்துக்களைப் பெற்று வந்த கட்டளை வெண்பா)

'அகர முதல எழுத்தெல்லாம்'— என்று வழி மொழிந்த திருக்குறளுக்கு முன்னரே, தொல்காப்பியம் அதன் காலத்திற்கு முற்பட்டு வழக்கிலிருந்த இலக்கணச் செய்திகளை—தமிழ்ச் சொற்றொகுப்புகளை, அதன் அடிப்படை ஆழங்களைத் தெளிவாகத் தொகுத்துரைக்கின்றது. வழி நூல்களும் அவற் றையே கூறி, அந்தந்தக்கால இலக்கணத் தெளிவைச் சொல்லி நம்மை நிமிர்ந்து நிற்க வைக்கின்றன. மனிதனின் வாழ்வு பெறும் ஒழுங்கை—வரலாற்றைக் கற்காலம், பொற்காலம் எனப் பிரித் தனர். கற்கால மனிதன் பறவை விலங்கிடமிருந்து அதன் செயல் களைத் தன் இனத்திற்கு வியந்து, சுட்டிக்காட்டி உணர்த்தியதை சுட்டுச் சொற்கள் என்ற வரையறை நமக்கு உணர்த்துகின்றது.

''அ, இ, உ—அம்மூன்றும் சுட்டு''

தொல்—எழுத்ததிகாரம்—31

அ,இ,உ என்பதன் விளக்கமாகத் தன் உடம்பு, உறுப்புகள் நளிநயம் எனக் குரலொலித்து; அ—என்று வாய் திறந்தும், இ—ன்று பல்லை இளித்தும், உ—என்று உதடுகள் குவித்தும் ஒலி, கூட்டி மனிதன் கூவினான்—சுட்டினான். அவ்வாறே,

"ஆ, ஏ, ஓ—அம் மூன்றும் வினா"

தொல்—எழுத்ததிகாரம் : 32

ஒன்றை உணர்ந்தவனாகவும், வியந்தவனாகவும், வினாவும் வகையிலும் ஆ, ஏ, ஓ; என்று கூவினான். அந்த ஒலிகளையே தொல்காப்பியர்,

"அளபு இறந்து உயிர்த்தலும் ஒற்றுஇசை நீடலும்
உரிய"

தொல்—எழுத்ததிகாரம் : 33

—என்றார்.

இதில், அ, இ, உ என்ற சுட்டெழுத்துகளும், ஆ, ஏ, ஓ, என்ற வினா எழுத்துகளும் நீண்ட ஓசையுடன் கூவப்பட்டதைக் கூறுகிறார். இவ்வாறே, ஒலியைச் சுருக்கிக் கூவியதையும் கூறியுள்ளார்.

மனிதன் குரலால் குறியுணர்த்தினான். பறவை, விலங்கினங்களை அவற்றின் வரை படமாகக் குகைகளிலும், மரங்களிலும் பிற அனைத்துப் பொருள்களிலும் வரைந்து, அதன் மூலம் தன் எண்ணங்களைப் பரிமாறிக் கொண்டான். அந்த ஓவியமே எழுத்து என்றானது.

மனிதன் பேசிய சொற்கள் மனித உறுப்புகளில் எங்கெல்லா மிருந்து பிறந்தன என்பதைத் தொல்காப்பியர் தெளிவாகக் கூறுகிறார்.

"உந்தி முதலா முந்துவளி தோன்றி
தலையினும் மிடற்றினும் நெஞ்சினும் நிலைஇ
பல்லும் இதழும் நாவும் மூக்கும்
அண்ணமும் உளப்பட எண்முறை நிலையான்
உறுப்புற்று அமைய நெறிப்பட நாடி
எல்லா எழுத்தும் சொல்லுங்காலைப்
பிறப்பின் ஆக்கம் வேறுவே றியல"

தொல்—பிறப்பியல் : 1

அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ என்ற இவற்றை உயிர் எழுத்துகள் என்றார்.

"ஔகார இறுவாய்ப்
பன்னீர் எழுத்தும் உயிர்"

தொல்—எழுத்ததிகாரம் : 8

'க,ங,ச,ஞ,ட,ண,த,ந,ப,ம,ய,ர,ல,வ,ழ,ள,ற,ன, என்ற இவற்றை 'மெய் எழுத்து' என்றார்.

"னகர இறுவாய்ப்
பதினெண் எழுத்தும் மெய்"

தொல்—எழுத்ததிகாரம் : 9

இத்தகைய உயிர், மெய் எழுத்துகளும் அவற்றைச் சார்ந்து வரும் மரபுடைய எழுத்துக்களும் பிறக்கும் முறைமையும் கூறியுள்ளார்.

"அ,ஆ, ஆயிரண்டும் அங்காந்து இயலும்"

தொல்—பிறப்பியல் : 3

வாய் திறக்கும் முயற்சியில் உந்தியிடத்துத் தோன்றிய ஒலி அ, ஆ என்று வெளிப்படும்.

"இ, ஈ, எ, ஏ, ஐ—என இசைக்கும்
அப்பால் ஐந்தும் அவற்று ஓரன்ன;
அவைதாம்
அண்பல் முதல்நா விளிம்புறல் உடைய"

தொல்—பிறப்பியல் : 4

இ, ஈ, எ, ஏ—இவை நான்கும்இதழ்களை அகட்டிய நிலையில் மேல் கீழ்ப் பற்களின் நடுவில் வெளிப்படும் காற்றின் முயற்சியில் பிறக்கின்றன. 'ஐ'—என்பது மட்டும் அடிநா ஓரங்கள் கடைவாய்ப் பற்களோடு பொருந்திய நிலையில் இடைநாவில் வடிவம் பெற்று நாநுனி விளிம்பில் ஒலிக்கும் என்பதைநீங்களே சொல்லிப் பார்த்து அறியலாம்.

"உ, ஊ, ஒ, ஓ, ஔ, என இசைக்கும்
அப்பால் ஐந்தும் இதழ்குவிந்து இயலும்"

தொல்—பிறப்பியல் : 5

இவ் உகரம் முதலான எழுத்துகள், குவிந்த உதடுகளை முகப்பாகக் கொண்டு வெளிப்படும்.

ககார ஙகாரம் அடிநா அண்ணம் (நாக்கு)
சகார ஞகாரம் இடைநா அண்ணம் ''
டகார ணகாரம் நுனிநா அண்ணம் ''
தகார நகாரம் நுனிநா மேற்பல் ஒற்றப்பிறக்கும்
—என

க-ங முதலானவை நாக்கின் நுனி, இடை, கடைப் பகுதிகள் அண்ணத்தை முறையே ஒற்றும் பொழுது பிறக்கின்றன. த, ந, இரண்டும் மேற்பல்லை நுனி நாக்குப் பொருந்தும் பொழுது பிறக்கின்றன.

அவ்வாறே,

ர, ற — நுனி நா நுனி அண்ணத்தை வருடும் பொழுதும்,
ல, ன — நுனி நா நுனி அண்ணத்தைப் பொருந்தும் பொழுதும்

ழ — நா வளைந்து நிலைக்கும் போதும்
ள — நா வளைந்து நடு அண்ணம் தடவி மீண்டும் கீழே வரும் பொழுதும்

பிறக்கின்றன.

ப, ம — இரு உதடுகள் ஒட்டப் பிறக்கும்
வ — மேற்பல் கீழ் உதட்டைக் கௌவப் பிறக்கும்
ய — நா ஓரங்கள் கடைவாய் பல் வரிசையில் சார, குரல் வளையில் தோன்றி நடு நாக்கில் ஒலிக்கும்.

இவ்வாறு பல்வேறு நிலைகளில் உறுப்புற்று அமைய உயிர், மெய் எழுத்துகள் பிறக்கும் என அறியலாம்.

இனி, மெல்லெழுத்துகள்

ங, ஞ, ண, ந, ம, ன—என்ற ஆறும் மூக்கின் வழி ஓசையாக ஒலிக்கும்.

எல்லா ஒலிகளும் எழுத்துக்களாக உருப்பெற்றன. ஆனால், அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ — என்ற பன்னிரு அடிப்படைச் சுட்டு, வினா என்ற உயிர் எழுத்துகளே முதன்மை.

''பன்னீர் உயிரும் மொழி முதலாகும்''

என்றார் தொல்காப்பியர்.

உயிர் ஒலிகளும் மெய் ஒலிகளும் அவற்றின் இனமும் தழுவித் தொகுக்கப்பட்டனவே சொற்கள்.

''செய்யுள் மருங்கினும் வழக்கியல் மருங்கினும்
மெய்பெறக் கிளந்த கிளவி எல்லாம்
பல்வேறு செய்தியின் நூல்நெறி பிழையாது
சொல் வரைந்து அறியப் பிரித்தனர்''

தொல்—எழுத்ததிகாரம் : 67

இவ்வாறே, பாவினங்களுக்கும், பேச்சு, எழுத்து, நடை வகைக்கும் பல செய்தி கொண்டு நூல் நியதி பிழைபடாது சொற் கருத்துத் தொகுத்து வரம்புபடுத்தினர்.

சொற்களை அசை, சீர் என்று ஒழுங்குபடுத்தியதைத் தொல்காப்பியர்,

"அசையும் சீரும் இசையொடு சேர்த்தி
வகுத்தனர் உணர்த்தல் வல்லோர் ஆறே"

தொல்—செய்யுளியல் : 10

என்றுரைத்தார். அவ்வாறே எழுத்தும், அசையும், சீரும், தளையும், அடியும், தொடையும்—என ஆறும் செய்யுள் உறுப்புகள் ஆயின.

பாட்டு என்பது,

"யாப்பும் தூக்கும் தொடர்பும் செய்யுளை
நோக்கிற் றென்ப நுணங்கி சினோரே"

என்றார். எழுத்து முதலியவற்றின் பெயர் நிலைகளையும், இயக்க நிலைகளையும்,

"எழுதப் படுதலின் எழுத்தே; அவ் வெழுத்து
அசைத்திசை கோடலின் அசையே; அசையியைந்து
சீர்கொள நிற்றலின் சீரே சீரிரண்டு
தட்டு நிற்றலின் தளையே; அத்தளை
அடுத்து நடத்தலின் அடியே; அடியிரண்டு
தொடுத்தல் முதலாயின தொடையே; அத்தொடை
பாவில் நடத்தலிற் பாவே; பாவொத்து
இனமா நடத்தலின் இனமெனப் படுமே"

என்றார். இதன் பொருளாவது :

எழுதப்படுவதற்கு எழுத்து என்றார். அந்த எழுத்துகளை அசைத்து இசைபட ஒத்தனவாகக் கொள்ளுதலில் அசை. அந்த அசைகள் ஒருங்கிணைந்து சீர் பெற்று நிற்பதால் சீர். சீர்கள் இரண்டு ஒன்றி நிற்பது தளை. அந்தத் தளைகளைக் கொண்டு இயங்கி வரிசைப்படுவது அடி. அடி இரண்டு முறையே தொடுத்தல் தொடை. அந்தத் தொடை விளங்குவது பா. பாவினை ஒத்த அதன் சார்பு அதற்குரிய இனம்.

முதலில், இது பற்றிய தெளிவினை நாம் மனத்தில் கொள்ள வேண்டும்.

குறில் எழுத்து என்பது குற்றெழுத்து. அவை : அ, இ, உ, எ, ஒ—5. இவை ஒரு மாத்திரை அளவு(இமை நொடிக்கும் நேரம்) ஒலிக்கும் என்பதால்,

"ஓர் அளபு இசைக்கும்
குற்றெழுத்து"

என்றார் தொல்காப்பியர்.

நெடில் என்பது நெட்டெழுத்து. அவை : ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ—7. இவற்றை,

"ஈர்அளபு இசைக்கும் நெட்டெழுத்து"

என இரண்டு மாத்திரை அளவு ஒலிக்கும் என்றார்.

அகரம் முதல் ஔகாரம் முடியப் பன்னிரண்டும் உயிர் எழுத்துகள்.

'க'கரம் முதல் 'ன'கரம் முடிய பதினெட்டும் மெய் எழுத்துகள்.—மெய், உடம்பு, உறுப்பு, புள்ளி ஒற்று—இவை ஒரு பொருள் சொற்கள்.

குறுகிய ஓசை கொண்ட மூன்று உயிர் எழுத்துகள்;

1. குற்றியலுகரம் — லு
2. குற்றியலிகரம் — லி
3. ஐகாரக் குறுக்கம் — ஐ, ஔ

ஆய்தம் என்பது அஃகேனம். அஃகேனம் என்றாலும் தனி நிலை, புள்ளி, ஒற்று என்றாலும் ஒன்றே.

மூன்று இனங்களும் அவற்றுக்கான எழுத்துகளும்;

வல்லினம் : க, ச, ட, த, ப, ற
மெல்லினம் : ங, ஞ, ண, ந, ம, ன
இடையினம் : ய, ர, ல, வ, ழ, ள

**அளபெடை**

அளபு, அளபெடை, புலுதம்—என்ற மூன்றும் ஒரு பொருளே.

மேலே கூறப்பட்ட குறுகிய மூவுயிர்க் குறுக்கமும் அளபெடைகளும் பற்றிக் கீழ்வருமாறு அறியலாம்.

## 1. குற்றியலுகரம்

1. ''எழுவகை இடத்துங் குற்றிய லுகரம்; வழுவின்றி வரூஉம் வல்லா றூர்ந்தே.

2. ''நெடிலே குறிலிணை குறில் நெடில் என்றிவை ஒற்றொடு வருதலொடு குற்றொற் றிறுதி என் ஏழ் குற்றுகரக் கிடன் என மொழிப''

என்றவாறு ஒரு நெடிலொடு குறில் வரும்.

1. நெடில் எழுத்தோடு வந்த குற்றியலுகரம்;
நாகு, காசு, காடு, காது, காபு, சாறு—என 6.

2. நெடிலோடு அடுத்து ஓர் ஒற்று வந்து அதன் பின்வரும் குற்றியலுகரம் :
நாக்கு, காச்சு, காட்டு, காத்து, காப்பு, சாற்று—என 6,

3. இரு குறில் இணைந்து வர அதை அடுத்து வரும் குற்றியலுகரம் :
வரகு, முரசு, முருடு, மருது, முடிபு, வயிறு—என 6.

4. இரு குறில் இணைந்து ஒற்று பெறப் பின்வரும் குற்றியலுகரம் :
அரக்கு, பொரிச்சு, தெருட்டு, குருத்து, பொருப்பு, கழற்று —என 6.

5. குறில், நெடில் இணைந்து அடுத்து வரும் குற்றியலுகரம் :
அசோகு, பலாசு, மலாடு, கெடாது, புதாபு, விராறு—என 6.

6. குறில் நெடில் இணைந்து அடுத்து ஒற்று வரும் சொல்லில் வரும் குற்றியலுகரம் :
தமாக்கு, தடாச்சு, பனாட்டு, கடாத்து, புதாப்பு, விராற்று —என் 6.

7. குறில் அடுத்த ஒற்றுக்குப் பின்வரும் குற்றியலுகரம்:
அக்கு, கச்சு, கட்டு, கத்து, கப்பு, கற்று—என 6.

என்ற வரிசையிட்ட ஏழுவகைத் தலைப்புகளில் அடங்கிய அவ் ஆறு வல்லெழுத்துகளை இணைத்து வந்த குற்றியலுகரம் அறிக.

மேற்கண்ட குற்றியலுகர வகை ஆறு வகைப்படும் எனவும் கூறுவர்.

1. ஈரெழுத்தொரு மொழி
2. உயிர்த் தொடர் மொழி
3. இடைத் தொடர் மொழி
4. வன்றொடர் மொழி
5. மென்றொடர் மொழி
6. ஆய்தத் தொடர் மொழி

"ஈரெழுத் தொருமொழி உயிர்த்தொடர்இடைத் தொடர்
ஆய்தத் தொடர்மொழி வன்றொடர் மென்றொடர்
ஆயிரு முன்றே உகரங் குறுகிடன்"
தொல்—குற்றியலுகரப் புணரியல், 1

என்பது தொல்காப்பியர் கூற்று.

## 2. குற்றியலிகரம்; லி

"யகரம் வருவழி இகரம் குறுகும்
உகரக் கிளவி துவரத் தோன்றாது"
தொல்—குற்றியலிகரப் புணரியல், 5

"வல்லெழுத் தாறே எழுவகை யிடத்தும்
உகரம் அரையாம் யகரமோ டியையின்
இகரமும் குறுகும் என்மனார் புலவர்"

என்று கூறும் அவிநய நூற்பா.

அதாவது, உகரம் வந்தும் வராமலும் யகரத்தோடு இயைந்து வந்த இகரம் குற்றியலிகரம்.

உகரம் வந்த குற்றியலிகரம் :

1. நாகியாது, காசியாது, காடியாது—3
காதியாது, காபியாது, காறியாது—3
உகரம் வராத குற்றியலிகரம் :
2. கேண்மியா—சென்மியா

## 3. ஐகாரக் குறுக்கம்; ஐ, ஔ.

அளபெடுத்தற்கும் தனியே சொல்லுதற்கும் அன்றிச் சொல்லில் வந்த ஐகாரம், தன் அளவில் சுருங்கி ஒரு மாத்திரை யாகவும் குறுகும். அவை, குறுகுமிடத்துச் சொல்லுக்கு; முதலில், இடையில், இறுதியில்—என மூன்று இடங்களிலும் குறுகி வரும்.

இதனையே,

> “அளபெனீட தனியிரண்டல்வழி ஐ, ஔ
> உளதாம் ஒன்றரை தனிமையும் ஆகும்”

என்பது அவிநய நூற்பா.

ஐப்பசி, மைப்புறம், மடையன், இடையன், குவளை, தவளை, தினை, பனை.

முதல் — ஐ, மை
இடை — டை. டை
கடை — ளை, ளை, னை, னை

## அளபெடை

அளபெடை என்பது இரண்டு வகைப்படும் :

1. உயிரளபெடை, 2. ஒற்றளபெடை

### 1. உயிரளபெடை

ஆ, ஈ. ஊ, ஏ, ஐ, ஓ, ஔ—7—என்ற உயிர் நெட்டெழுத் தேழும் நீண்டொலிப்பது உயிரளபெடை, இவற்றில் ‘ஐ’ காரம் இகரத் தோடும், ஔகாரம் ‘உ’கரத்தோடும் தம் இனமாகியகுற்றெழுத் தோடும் அளபெடுக்கும்.

> “ஐ ஔ என்னும் ஆயீரெழுத்திற்கும்
> இகரம் உகரம் இசை நிறை வாகும்”

தொல்—எழுத்து மொழி மரபு—9

### 1. தனிநிலை அளபெடை

ஆஅ—ஈஇ—ஊஉ—ஏஎ—ஐஇ—ஓஒ—ஔஉ இவை ஏழும் தனிநிலை அளபெடை,

### 2. முதல் நிலை அளபெடை

ஆ அரிடம்—ஈ இரிலை—ஊ உரிடம்
ஏ எரிகள்—ஐ இயவி—ஓ ஒரிகள்
ஔவிவியம்— என ஏழு.

இவை சொல்லின் முதலில் வந்த அளபெடை,

முதல்நிலை எழுத்துக்கள்.

ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ,

இவை சொல்லின் முதலில் வருபவை.

## 3. இடைநிலை அளபெடை

ப டா அகை—ப ரீ இயம்—க ழுஊ மணி
ப ரே எரம்—வ ளை இயம்—பு ரோ ஓசை
அ நௌ உகம்—என ஏழு.

இவை, சொல்லின் இடையே அளபெடுத்ததனால் இடைநிலை அளபெடை ஆயின.

## 4. கடைநிலை அளபெடை

கடா அ —குரீ இ —கழு உ —மிலே எ
கடை இ — அரோ ஓ — அநௌ உ —என ஏழு

இவை சொல்லின் இறுதியில் அளபெடுத்ததனால் கடைநிலை ஆயின.

அளபெடை நிலைவகை நான்கும்;
(தனிநிலை, முதல், இடை, கடை)

எழுத்துவகை ஏழும்; 1,2,3,4,5,6,7, என
(ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ)

மேற்கண்ட நிலவகை நான்கினில் எழுத்துவகை ஏழினைப் பெருக்கி ($7 \times 4 = 28$) இருபத்து எட்டு எனக் கொள்க.

## 2. ஒற்றளபெடை

ஒற்றெழுத்துக்களான புள்ளி எழுத்துகளில் சில இரகசியங்கள் அடங்கியுள்ளன.

இள்—ள்
ள் ள—ளா

ஒரு புள்ளி எழுத்தின் ஓசையை உச்சரிப்பது கொண்டு கணக்கிட்டால், இசைப்பாடலில் கூட அதாவது,

'என் மீது'—என்ற ஒரு தலைப்பினைப் பண்ணுடன் பாடும் போது, அதைப் பிரித்த வகையில் 'என்ன்' என நீண்டுவிடும்.

மீ ஈ து—என எழுதினால் அவ்வோசை இருமடங்காய் வரும், அதற்கான சுர எழுத்துகள் கூடும்போது, நீண்ட ஓசை உடைய பெரிய, 'ரீ' குறைந்த ஓசை உடைய சிறிய

'ரீ' என இலக்கணம் உள்ளது. ஆகவே, ஒற்றெழுத்தின் ஓசை மிகுவது ஒற்றளபெடை.

**ஒற்றளபெடை**

ங, ஞ, ண, ந, ம, ன, வ, ய, ல, ள, அஃ
1 2 3 4 5 6 7 8 9 10 11

ங்ங், ஞ்ஞ், ண்ண், ந்ந், ம்ம், ன்ன், வ்வ், ய்ய், ல்ல், ள்ள், ஃஃ ஒலி அழுத்த நிறுத்த அளவில் மேற்கோள்.

ங, ஞ, ண, ந, ம, ன, வ, ய, ல, ள; ஃ என்ற

பதினொரு ஒற்றுகளும் ஒவ்வொன்றும் குறில் எழுத்தின் கீழும், இருகுறில் (இணை) எழுத்தின் கீழும் வரும். அதன் விளக்கம் கீழ்வருமாறு;

## 1. குறில் அடுத்த ஒற்றுக்கள்

மங்ங்கலம், மஞ்ஞ்சு, பண்ண்ணு, பந்து,
அம்ம்பு, மின்ன்னு, தெவ்வ்வர், வெய்யர்;
செல்ல்க, கொள்ள்க, எஃஃகு—11.

—இப்பொருட் சொற்களுக்கு இடையில்,

ங, ஞ, ண, ந, ம, ன, வ, ய, ல, ள, ஃ

—என்ற இந்த வரிசை எழுத்துக்கள் ஒற்றுக்களாக அதாவது 'ங' என்றாற் போலப் புள்ளி பெற்று அடுத்தடுத்து இரண்டிரண்டாக வந்திருப்பது அறியவும்.

## 2. இருகுறில் இணை அடுத்த ஒற்றுக்கள்

அரங்ங்கம், முரஞ்ஞ்சு, முரண்ண்டு. பருந்ந்து,
அரும்ம்பு, முதன்ன்று, குரவ்வ்வை, அரைய்ய்யர்,
குரல்ல்கள், திரல்ல்கள், வரஃஃகு—11

(அர) ங்ங் (கம்)—என மேற்கண்ட பதினொரு பொருட் சொற்களிலும் இரண்டிரண்டு ஒற்றுகள் வந்ததறியவும். மேற் கண்ட இரண்டு வகைக்கும் ஆன, 11+11=22 புள்ளி; அளவும் எடையும் கொள்ளப்பட்டிருக்கும் முறைமை அறியவும்.

இதனையே,

"ஙஞண நமன வயலள வாய்தம்
எனுமிவை ஈரிடத் தளபெழு மொரோவழி"—என்றார்.

யாப்பு பிழைபடக் கூடாது. தளை தட்டக்கூடாது—என்பதற்கு அதனதற்குரிய மாத்திரை (அலகு) வகை கொண்டு அளபெடை காக்க வேண்டுமென்றார்.

''மாத்திரை வகையால் தளைதம கெடாநிலை
யாப்பழி யாமையென் றளபெடை வேண்டும்''

## 1—அலகு

''கண்ணிமை கைந்நொடி யளவே மாத்திரை
நுண்ணிதின் உணர்ந்தோர் கண்ட வாறே''

கண்ணிமைகள் இமைப்பதையும், கைவிரலால் நொடிப்பதையும் ஓர் அலகு எனக் கணித்திருக்கின்றனர். தமிழிசையிலும் இந்த அலகினை அழகாகக் குறிப்பிட்டிருக்கின்றனர்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| கு, | து, | கை, | உ, | இ, | வி, | தா |
| 4, | 4, | 3, | 2, | 4, | 3, | 2. |
| ச, | ரி, | க, | ம, | ப, | த, | நி |

குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம்— என்ற ஏழிசை வரிசைக்கு முறையே மாத்திரை கூறுமிடத்து! 4,4,3,2,4. 3,2—என 22 அலகுகள் சொல்லி வரம்பெடுத்து, அவ்வாறே செறிவாகப் படிப்பிக்கப்பட்டு வந்திருக்கின்றன. அந்த அலகுகளே (மாத்திரை) இங்கு எந்த எழுத்திற்கு எவ்வளவு என்று அதனதன் இனத்திற்கென்று தெளிவுபடுத்தி இருக்கின்றனர்.

### அலகு (மாத்திரைகள்)

| | | |
|---|---|---|
| குற்றெழுத்து ஒற்றளபெடை | 1 | மாத்திரை |
| நெட்டெழுத்து | 2 | ,, |
| உயிரளபெடை | 3 | ,, |
| ஆய்தம், மெய், என | | |
| குற்றியலிகரம். குற்றியலுகரம் | ½ | ,, |
| ஐகாரக் குறுக்கம். ஔகாரக்குறுக்கம் | 1 | ,, |
| மகரக் குறுக்கம், ஆய்தக்குறுக்கம் | ¼ | ,, |

குறில் 1, நெடில் 2, உயிரளபெடை 3, ஒற்று ½, ஒற்றளபெடை 1, குற்றியல் இகரம், உகரம் ½, ஆய்தம் ½, ஆய்தக் குறுக்கம் ¼, ஐ (ஐகாரம்) ஔ (ஔகாரம்) 1½, அய்காரக் குறுக்கம் ஔகாரக் குறுக்கம் 1.

## 2—அசை

### நேரசை (நேர்)—ஓரலகு

குற்றெழுத்துத் தனியே வந்தாலும், நெட்டெழுத்துத் தனியே வந்தாலும், குற்றெழுத்தை அடுத்து ஒற்று வந்தாலும், நெட்டெழுத்தை அடுத்து ஒற்று வந்தாலும் அது **'நேசை'** என அலகு பெறும்.

### நிரையசை (நிரை)—ஓரலகு

குறில் இணைந்து வந்தாலும், குறில் நெடில் இணைந்து வந்தாலும், குறிலிணைந்து ஒற்றுப் பெற்று வந்தாலும், குறில் நெடில் இணைந்து ஒற்றடுத்து வந்தாலும் நிரையசையாம்.

இதனையே,

> ''நெடில்குறில் தனியாய் நின்றும் ஒற்றடுத்தும்
> நடைபெறும் நேரசை நால்வகை யானே''

> ''குறிலிணை குறில்நெடில் தனித்தும் ஒற்றடுத்தும்
> நெறிமையில் நான்காய் வரும் நிரையசை யே''

—என்றார் காக்கைபாடினியார்.

குறில் நெடில் என்ற இரண்டனை அடிப்படையாகக் கொண்டே அசைகள் பிறக்கின்றன.

நே ர் என்ற அசையில் ஒற்று என்ற புள்ளி எழுத்து 'ர்' எழுத்தை நீக்கினாலும் 'நே' என—ஓசை குறையாமல் நிற்கும். ஆனால், 'நிரை' என்ற அசையில் இரு குறில் வந்திருப்பதை அறியவும்.

நேர் : ஆ, என்
நிரை : இது இடர்

—இடர் என்ற பொருட் சொல்லில் கடைசிப் புள்ளி எழுத்தான 'ர்' என்பது இல்லையானாலும் 'ர்' என்றே ஒலிக்கும்.

நேர் நேர்—ஆகா

நிரை நிரை-இது இடர், எனக் கென்ன, நேர் நேர் என அலகு பிரிக்க 'என்ன' என்று வந்த எழுத்தில், நடுவில் உள்ள 'ன்' என்பதை எடுத்துவிட்டால் 'என' என்ற நிரை அசையாக மாறி விடும். ஆனால், அந்த 'நேர் நேர்' என்பதற்கு; கண்டேன்,

கொண்டேன், நின்றேன் என்று கொண்டால்; இறுதி எழுத்தான 'ன்' என்ற புள்ளி எழுத்தினை எடுத்துவிட்டால் கண்டே, கொண்டே, நின்றே என்று ஒழுங்குபடும். நேர் நேர் என்று அலகு பெறும் தன்மை கொண்ட 'பாட்டு' என்பதில் 'ட்' என்ற புள்ளி எழுத்தை நீக்கினால், 'பாடு' என்று ஒழுங்கில் வரும். ஆகவே, 'கண்மை' என்ற சொல்போல நேரசைக்கு முதலில் குறில் வந்து, அடுத்து ஒற்றெழுத்து வருமாயின், அந்த ஒற்று நீக்கப்பட்டால் 'கமை' என்று நிரையசை ஆகிவிடும்.

ஆகவே, நேரசைக்கு நெடில் எழுத்து முதலில் வருமாயின் ஒற்றெழுத்தினை நீக்கலாம். குறில் வருமாயின் ஒற்றெழுத்தை நீக்கக் கூடாது என்பது அறியவும். ஆனாலும், மேற்கண்ட நெடிலுக்கு, சீர்க்கணக்கில் அது பொருந்துமே தவிர, பாடலில் ஒரு குறிலை அடுத்து ஒரு புள்ளி எழுத்து வந்து, அதை அடுத்து ஒரு குறிலோ நெடிலோவந்தால் அது நேரசையே.

கண்டேன்—என்பது நேர் நேர் (தேமா) என்பதறியவும்.

நேரசை—நேர் : ஆ, ழி, வெள், வேல்

நிரையசை—நிரை : வெறி, சுறா, விளம், விளாம்
மேற்கண்ட அசைகளுக்குரிய பொருட்சொற்கள் இலக்கண விரிவுரைக்குக் கொள்ளப் பட்டவை. விளக்குமிடத்து :

நேரசை எனத் தனிநெடில்—ஆ
நேரசை எனத் தனிக்குறில்—ழி
நேரசை எனக் குறிலும் புள்ளியும்—**வெள்**
நேரசை என நெடிலும் புள்ளிபும்—**வேல்**
நிரையசை என இணைந்தகுறில்—**வெறி**
நிரையசை என இணைந்த குறில்நெடில்—**சுரா**
நிரையசை எனக் குறில் இணைந்த புள்ளி—**நிறம்**
நிரையசை எனக் குறில் நெடில் இணைந்த புள்ளி—**விளாம்**

என்றவாறு அமைந்துள்ளது.

நேரசையில் இரண்டு நேர் அலகு பெற்ற நேர்நேர் (தேமா) என்பதற்கு ஒரு செய்யுள்.

## 7. செய்யுள்

### நேரிசை ஆசிரியப்பா

''வீடு வாசல் வீதி என்று
நாடி நிற்கும் ஆசை
கூடி வாழும் போதில் தானே!''

—புரட்சிதாசன்

இது, 'நேர்' அசைகள் கொண்டு வந்துள்ளது.

## 8. செய்யுள்
### (நேரிசை ஆசிரியப்பா)

''பனிமலர் முகமெனப் பவளநல் நிறமெனக்
கனியிதழ் கரும்பெனக் கவர்ச்சியில்
இனியநற் பருவமார் எழில்மகள் இவளே''

—புரட்சிதாசன்

இது 'நிரை'யசைகள் கொண்டு வந்துள்ளது.
இந் நேர், நிரை அசைகள் பற்றித் தொல்காப்பியரும்,

''குறிலே நெடிலே குறிலிணை குறிநெடில்
ஒற்றொடு வருதலொடு மெய்ப்பட நாடி
நேரும் நிரையும்''

தொல்—செய்யுளியல் : 8

என்றார்.

## 3. சீர்

**அசை** — என்ற நிலையில்

**நேர்** — என்பது ஒரெழுத்து (புள்ளி நீக்கி)

**நிரை** — என்பது இரண்டெழுத்து (இரு குறில்)

சீர் கணக்கில் மற்றோர் அசை சேர்த்து அதாவது, 'நேர் நேர்' — தேமா என்ற வாய்பாட்டில் இரண்டு அசைகள் ஒரு சீராகி வரும். நிரை நிரை — கருவிளம் என்ற வாய்பாட்டில் இரண்டு அசைகள் ஒரு சீராக வந்துள்ளன. ஆகவே, சீர்க் கணக்கில் கொள்ளும் போது, அசைகள் எத்தனை சேர்க்கப் படுகின்றன என்ற கணக்கில் கொண்டாலும் அவை, சீர்க் கணக்கிலே அடங்கும்.

''ஈரசை நாற்சீர் அகவற் குரிய''

என்றார் யாப்பருங்கலக் காரிகையார்.

அதாவது, நேர்நேர், நிரைநிரை, நிரைநேர், நேர்நிரை என்ற தேமா, கருவிளம், புளிமா, கூவிளம் என்னும் நான்கு சீர் களை அகவற்பாவிற்குரியன என்றார்.

அசை; சீர்களுக்கு, அதாவது நேர்நேர், நிரைநேர் என்று கொள்ளப்பட்டிருந்த அளவு எடைகளுக்கென, அதன் தொடர்பு

களுக்கெனத் தொல்காப்பியக் காலத்திற்குப் பிறகு, அமுதசாகர யாப்பருங்கலக் காரிகை எழுதப்பட்ட காலத்தில்தான் வழக்கில் மக்களுக்கு எளிதாகத் தெரிந்த காய், மா, விளம், கனி, பூ, நிழல் என்றவாறு முழுப்பெயர்களும் கொள்ளப்பட்டன என்பர். அவ்வகையில் கூறுங்கால், கீழ்வருமாறு அமையும்;

| | | | |
|---|---|---|---|
| ஈரசை : | நேர் நேர் | — | தேமா |
| | நிரை நேர் | — | புளிமா |
| மூவசை : | நேர் நேர் நேர் | — | தேமாங்காய் |
| | நிரை நேர் நேர் | — | புளிமாங்காய் |
| ஈரசை : | நேர் நிரை | — | கூவிளம் |
| | நிரை நிரை | — | கருவிளம் |
| மூவசை : | நேர் நிரை நேர் | — | கூவிளங்காய் |
| | நிரை நிரை நேர் | — | கருவிளங்காய் |
| | நேர் நேர் நிரை | — | தேமாங்கனி |
| | நிரை நேர் நிரை | — | புளிமாங்கனி |
| | நேர் நிரை நிரை | — | கூவிளங்கனி |
| | நிரை நிரை நிரை | — | கருவிளங்கனி |

**வாய்ப்பாடு**

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| **ஓரசை** | : | நேர் | — | நாள் | — | ஓரெழுத்து |
| **ஈரசை** | : | நேர்பு | — | காசு | — | ஈரெழுத்து |
| **ஓரசை** | : | நிரை | — | மலர் | — | ஈரெழுத்து |
| **ஈரசை** | : | நிரைபு | — | பிறப்பு | — | மூன்றெழுத்து |

இவற்றோடு நாலசைச் சீர்களும் உள. அவை வருமாறு:

**நாலசை**

தேமாந்தண்ணிழல்; தேமாந்தண்பூ; தேமாநறும்பூ
புளிமாந்தண்ணிழல்; புளிமாந்தண்பூ; புளிமாநறும்பூ
கருவிளந்தண்ணிழல்; கருவிளந்தண்பூ; கருவிளநறும்பூ
கூவிளந்தண்ணிழல்; கூவிளந்தண்பூ; கூவிளநறும்பூ
தேமாநறுநிழல் கருவிளநறுநிழல்
புளிமாநறுநிழல் கூவிளநறுநிழல்

எனப் 16 வகைத்து.

நேர்—நிரை என்ற அசைகளில் சிறுகச் சிறுகக் கூடின அசைகளாகச் சீர் என்றீ பெயரில் ஓரசைச்சீர், ஈரசைச்சீர், மூவசைச்சீர் என்ற வகையும் மேற்கொண்டு நாலசைச்சீர் என்று வந்தமையும் அறிக.

அவற்றில், இரண்டசையாகிய ஆசிரிய உரிச்சீர் 4. இவை மாமுன் நேரும் விளம்முன் நிரையுமாக வரும்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | நேர் நேர் | — | தேமா | இவற்றின் முன் நேரசை வரும் |
| | நிரை நேர் | — | புளிமா | |
| 2. | நிரை நிரை | — | கருவிளம் | இவற்றின் முன் நிரையசை வரும் |
| | நேர் நிரை | — | கூவிளம் | |

இவை, அகவலோசையுடைய ஆசிரியப்பாவுக்கு என்று அறியவும். இவ் இலக்கணத்தை,

''ஈரசை கூடிய சீரியற் சீரவை
ஈரிரண் டென்பர் இயல்புணர்ந் தோரே'' —என்றார்

வெண்பா உரிச்சீர் 4+2=6+4=10. மா முன் நிரையும், விளம் முன் நேரும், காய் முன் நேரும் என, இயற்சீர் வெண்டளையும், வெண்சீர் வெண்டளையும் வரும். இவை மூவசைச்சீர், ஈரசைச்சீர், ஓரசைச்சீர் என அலகு பெறும்.

| | | | |
|---|---|---|---|
| 1. | நேர் நேர் நேர் | — | தேமாங்காய் |
| 2. | நிரை நேர் நேர் | — | புளிமாங்காய் |
| 3. | நேர் நிரை நேர் | — | கூவிளங்காய் |
| 4. | நிரை நிரை நேர் | — | கருவிளங்காய் |
| 5. | நேர் நேர் | — | தேமா |
| 6. | நிரை நேர் | — | புளிமா |
| 7. | நேர் | — | நாள் |
| 8. | நேர்பு | — | காசு |
| 9. | நிரை | — | மலர் |
| 10. | நிரைபு | — | பிறப்பு |

மேற்கண்ட வெண்பா உரிச் சீர்கள் நான்குடன் தேமாவும், புளிமாவும்; நாள், காசு; மலர், பிறப்பு என்பனவும் வெண்பாவிற்கு உரிமையானதாகவும், சிறப்புடையனவாகவும் கொள்ளப்படும்.

## 4. வஞ்சி உரிச்சீர்

"கனி முன் நிரையும், நேரும் வருதல்
ஒன்றிய ஒன்றா வஞ்சித் தளை"

எனவாக மூவசைச்சீர் இலக்கணம் அமையும்.

1. நேர் நேர் நிரை — தே மாங் கனி
2. நிரை நேர் நிரை — புளி மாங் கனி
3. நேர் நிரை நிரை — கூவி ளங் கனி
4. நிரை நிரை நிரை — கரு விளங் கனி

இவற்றின் முன் நிரைவரின் ஒன்றிய வஞ்சித்தளை. நேர் வரின் ஒன்றாத வஞ்சித்தளை.

### ஏழுவகைத் தளைகள்

1. மா முன் நேர் வருவது **நேரொன்றாசிரியத்தளை**
2. விளம் முன் நிரை வருவது **நிரையொன்றாசிரியத்தளை**
3. மா முன் நிரை—
   விளம் முன் நேர் வருவது **இயற்சீர் வெண்டளை**
4. காய் முன் நேர் வருவது **வெண்சீர் வெண்டளை**
5. காய் முன் நிரை வருவது **கலித்தளை**
6. கனி முன் நிரை வருவது **ஒன்றிய வஞ்சித்தளை**
7. கனி முன் நேர் வருவது **ஒன்றாத வஞ்சித்தளை**

### நாலசைச் சீர் அல்லது பொதுச்சீர்

### பூச்சீர்—நிழற்சீர்

தேமாந்தண்ணிழல்; தேமாந்தண்பூ; தேமாநறும்பூ
புளிமாந்தண்ணிழல்; புளிமாந்தண்பூ; புளிமாநறும்பூ
கருவிளந்தண்ணிழல்; கருவிளந்தண்பூ; கருவிளநறும்பூ
கூவிளந்தண்ணிழல்; கூவிளந்தண்பூ; கூவிளநறும்பூ
தேமாநறுநிழல் கருவிளநறுநிழல்
புளிமாநறுநிழல் கூவிளநறுநிழல்

மேற்கண்டவற்றில் உள்ள நிழற்சீர்களும், பூச்சீர்களும் இரண்டசைச் சீர்களாயின.

1. தேமா
2. புளிமா
3. கருவிளம்
4. கூவிளம்

ஆகிய இவற்றை அடிப்படையாகக் கொண்டே (தேமாங்காய், புளிமாங்காய்,கருவிளங்காய், கூவிளங்காய் என்பன போல).

1. தேமாந்தண்ணிழல் — தண்பூ, நறும்பூ, நறுநிழல்
2. புளிமாந்தண்ணிழல் — தண்பூ, நறும்பூ, நறுநிழல்
3. கருவிளந்தண்ணிழல் — தண்பூ, நறும்பூ, நறுநிழல்
2. கூவிளந்தண்ணிழல் — தண்பூ, நறும்பூ, நறுநிழல்

இவ்வாறே அதிகாரத்தால் வந்த தேமா, புளிமா, கருவிளம், கூவிளம் என்பனவற்றோடு (4×4=16) பெருக்கினால் பதினாறு நாலசைச் சீர்கள் வருகின்றன என்பது 'யாப்பருங்கலக்காரிகை' நூல் தரும் கருத்து;

''தண்ணிழல் தண்பூ நறும்பூ நறுநிழல் தந்துறழ்ந்தால்
எண்ணிரு நாலசைச்சீர் வந்து அருகும்'' (8)

இவ்வாறு அவை நாலசைச் சீர்களாக இருந்தாலும் பொதுச் சீர்களாகக் கொள்ளப்பட்ட அந்த அசைச்சீர்கள் செய்யுளில் தளைப்படும் போது உரியனவாகவே ஒலிக்கும் என்றார்.

| | 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|---|
| | நேர் | நேர் | நேர் | நிரை |
| | தே | மாந் | தண் | ணிழல் |
| 1. | வந் | தே | நின் | றதில் |
| 2. | உன் | னைக் | காண் | பதில் |

மேற்கண்ட சீர்ப் பிரிப்புகளையும் அதன் எடுத்துக் காட்டு களான.

'வந்தே நின்றதில்
உன்னைக் காண்பதில்'

என்பவற்றையும் பொருளுணர்ந்து, கருத்திற் கொள்ளவும்.

மேற்கண்ட நாலசைச் சீர்களான பதினாறு சீர்களில் உள்ளடங்கிய,

நேர் ஈற்றுப் பொதுச்சீராகக் கொள்ளப்பட்ட எட்டுவகை பூச்சீர்கள்.

1. தேமாந்தண்பூ
2. புளிமாந் தண்பூ
3. கருவிளந் தண்பூ
4. கூவிளந் தண்பூ
5. தேமா நறும்பூ
6. புளிமா நறும்பூ
7, கருவிள நறும்பூ
8. கூவிள நறும்பூ

என்றிவை 'நேர்' என்ற அலகு பெறும் 'பூ' என்பதை இறுதியில் கொண்டுள்ளதால் (அதாவது தண்பூ நறும் பூ என நேர் நேர்; நிரை நேர்) காய்ச்சீரில் இறுதியாக வரும் வெண்பாவின் உரிச்சீர் (தேமாங்காய் என்பது) போலக் கொண்டு, வரும் சொல்லின் முதல் அசையோடு ஒட்டுவதால் வெண்டளையும் கலித்தளையும் பிறக்கும். காய்முன் நேர் வரின் வெண்டளை நிரை வரின் கலித்தளை,

இதனையே,

"அவற்றுள் கண்ணிய பூவினம்
காய்ச்சீர் அனைய''

என்று யாப்பருங்கலக் காரிகை கூறும்,

'நிரை' கொண்டு முடியும் நாலசைச்சீர் (பொதுச்சீர்) எட்டாகும். அவை நிழற்சீர் எனவும் கூறப்படும்.

1. தேமாந் தண்ணிழல்
2. புளிமாந் தண்ணிழல்
3. கருவிளந் தண்ணிழல்
4. கூவிளந் தண்ணிழல்
5. தேமா நறுநிழல்
6. புளிமா நறுநிழல்
7. கருவிள நறுநிழல்
8. கூவிள நறுநிழல்

இவை, மூவசைச் சீர்என கனிச்சீருடன் ஒத்த தன்மையுடையன. நிரை கொண்டு முடியும் கனிச்சீர்களின் முன் நேர் என எவை வரினும் அது வஞ்சித்தளை யாதல் போல் மேற்கண்ட நிழற் சீர்களும், வருமொழி முதலில் நேர் நிரை பெற்று வஞ்சித் தளையாகும். இவ்வாறு நிழற் சீர் கனிச்சீரோடு ஒத்ததன்மை உடையதாதலை,

"கனியொ டொக்கும் ஒண்ணிழற்சீர்''

என்பார் அமுதசாகரர் (8)

அவற்றையே,

"அசைச்சீர் ஒக்கும் இயற்சீர்''

என்றார்.

அதாவது, அசைச்சீர் இயற்சீர் ஆகும். ஓரசைச் சீர்களான நேர், நிரை என்பன அவ்வழி தேமா, புளிமா, கருவிளம், கூவிளம்—என உரிச்சீர் போல வரும் சீர், வருமொழி முதல் அசையுடன் ஒன்றுவது ஆசிரிய உரிச்சீர். இது வெண்சீர் வெண்டளை, இயற்சீர் வெண்டளை என இரண்டாகும்,

"இயற்சீர் எல்லாம் ஆசிரிய உரிச்சீர்"

என்பது நெறி,

இவ்வழி—வெண்டளை—ஆசிரியம் உள்ளிட்ட சீர்களைக் கொண்டது வெண்பா. அதற்குரிய மூவகைச் சீர்களில், கனிச்சீர் இல்லாது கொள்ளப்படும் வெண்பா, நாலசைகளில் வந்தால் தளையும், அளவு எடை, மாத்திரை, செப்பல் ஓசை அனைத்தும் பிழைப்படும். காக்கைப் பாடினியார், அமுதசாகரர் போன்றோர் இதனையே உறுதிப்படுத்துவர்.

| | | | |
|---|---|---|---|
| 1. ஓரசைச்சீர் | : | நேர் | — நாள் |
| | | நிரை | — மலர் |
| 2. ஈரசைச்சீர் | : | நேர் நேர் | — தேமா |
| | | நிரை நிரை | — கருவிளம் |
| | | நேர் நிரை | — கூவிளம் |
| | | நிரை நேர் | — புளிமா |
| 3. மூவசைச்சீர் | : | நேர் நேர் நேர் | — தேமாங்காய் |
| | | நிரை நேர் நேர் | — புளிமாங்காய் |
| | | நிரை நிரை நேர் | — கருவிளங்காய் |
| | | நேர் நிரை நேர் | — கூவிளங்காய் |
| 4. மூவசைச்சீர் | : | நேர் நேர் நிரை | — தேமாங்கனி |
| | | நேர் நேர் நிரை | — புளிமாங்கனி |
| | | நிரை நிரை நிரை | — கருவிளங்கனி |
| | | நேர் நிரை நிரை | — கூவிளங்கனி |

5. நாலசைச்சீர் :

| | |
|---|---|
| நேர் நேர் நேர் நிரை | — தேமாந்தண்ணிழல் |
| நிரை நேர் நேர் நிரை | — புளிமாந்தண்ணிழல் |
| நிரை நிரை நேர் நிரை | — கருவிளந்தண்ணிழல் |
| நேர் நிரை நேர் நிரை | — கூவிளந்தண்ணிழல் |
| நேர் நேர் நேர் நேர் | — தே மாந் தண் பூ |
| நிரை நேர் நேர் நேர் | — புளி மாந் தண் பூ |
| நிரை நிரை நேர் நேர் | — கருவிளந்தண்பூ |
| நேர் நிரை நேர் நேர் | — கூவிளந்தண்பூ |
| நேர் நேர் நிரை நேர் | — தேமா நறும் பூ |
| நிரை நேர் நிரை நேர் | — புளிமா நறும் பூ |
| நிரை நிரை நிரை நேர் | — கருவிள நறும் பூ |
| நேர் நிரை நிரை நேர் | — கூவிள நறும் பூ |
| நேர் நேர் நேர் நிரை | — தே மாந் தண்ணிழல் |
| நிரை நேர் நேர் நிரை | — புளிமாந் தண்ணிழல் |
| நிரை நிரை நேர் நிரை | — கருவிளந் தண்ணிழல் |
| நேர் நிரை நேர் நிரை | — கூவிளந் தண்ணிழல் |

மேற்கண்ட சீர்களில் ஓரசை, ஈரசை என்ற சீர்களையும் காய்வகை, கனிவகை என்ற மூவகைச் சீர்களையும் வெவ்வேறு பாவினத்திற்குக் கொண்டனர்.

## 1. அதிகாரத்தால் வந்த ஆசிரியப்பா

### 9. செய்யுள்

வேத நியதி விளம்பும் மடத்தவர்;
'வினைவலர் அடியோர் வருண சாதியர்
பொல்லார் அசுரர்கள் புலையர்
தீயவர் என்றனர்' திராவிடர் தமையே

—புரட்சிதாசன்

இந்த நேரசை ஆசிரியப்பாவில், ஆசிரிய உரிச்சீரான தேமா, புளிமா, கருவிளம், கூவிளம் நான்கும் வந்ததறியவும்.

## 2. அதிகாரத்தால் வந்த வெண்பா

### 10. செய்யுள்

பெண்கொண்டு வந்தபிறப்பெல்லாம் நெருப்புடன்
மண்கொண்டு போயினும் மற்றனவாய்—நின்று
தலைப்படும் நின்றனவும் தாம்முதிர்ந்து வீழ்ந்து
முளைப்படும் தோன்றல் முனைப்பு

—புரட்சிதாசன்

இந்த நேரிசை வெண்பாவில் அதற்குரிய சீர்களான தேமா தேமாங்காய், புளிமா, புளிமாங்காய், கூவிளம், கருவிளம், கூவிளங்காய், கருவிளங்காய் என வந்ததறியவும்.

## 3. அதிகாரத்தால் வந்த வஞ்சிப்பா

### 11. செய்யுள்

காயானது கனியாவதும்
கல்பொடிபட மணலாவதும்
பேயாமழை கரைபுரள்வதும்
பிழைத்தோரதில் உயிர்வாழ்வதும்
ஓயாமுறை உலகாவதும்
உயிர்போவதும் அதுவருவதும்

ஊழி

இதனைத் திரித்தே இயம்பி
அதனில் இகபரங் கூறும் மதமே

—புரட்சிதாசன்

இரண்டு சீர்கள் கொண்ட ஓரடி, குறளடி. மூன்று சீர்கள் கொண்ட ஓரடி, சிந்தடி என்பதை நினைவு கொள்ளவும். அவ்வாறே இக்குறளடி கடையடி இரண்டில் சிந்தடி, நான்கு சீர்கள் கொண்ட அவையடியும் விரவி வந்த இந்த வஞ்சிப் பாட்டில் அதற்குரிய இலக்கணத்தில் வஞ்சி யுரிச்சீர்களான தேமாங்கனி, புளிமாங்கனி, கருவிளங்கனி, கூவிளங்கனி—என்ற நான்கும் வந்திருப்பதும் அவை அனைத்தின்முன்னரும் நிரையசை களாகவே அமைந்திருப்பதும் கொண்டு, ஒன்றிய வஞ்சித்தளை யாலேயே வந்த குறளடி வஞ்சிப்பா எனத் தெளியலாம்.

## 4. குறள் வெண்பா

### 12. செய்யுள்

''உண்ணக் கொடுத்தும்உடை கொடுத்தும் கல்வியென்ற
கண்கொடுத்த கையன்றோ கை''

—புரட்சிதாசன்

—இந்தக் குறள் வெண்பாவில் ஏழு சீர்களாலான இரண்டடியில் இறுதிச்சீர் 'கை' என்ற ஓரசைச் சீர் கொண்டு 'நாள்' என்ற வாய்ப்பாட்டில் நேரசையாய் வந்ததறிக.

## 5. குறள் வெண்பா

### 13. செய்யுள்

''பிறப்பன வெல்லாம் பெருமை பெறுமோ
சிறப்பனவே நிற்கும் சிலை''

—புரட்சிதாசன்

—இந்தக் குறள் வெண்பாவின் இறுதிச்சீர் 'மலர்' என்ற வாய்ப்பாடாக 'சிலை' என ஓரசைச் சீராக வந்தமை காண்க.

#### நாலசைச்சீர்

குறள் அடி என்பது, இரண்டு சீர்களை உறுப்பாகக்கொண்ட ஓரடி என்பதை நினைவுபடுத்திக் கொள்க. முன் பகுதிகளில் கூறப்பட்ட நாலசைச் சீர்களான (பூச்சீர், நிழற்சீர்) பதினாறு வகைகளை உணர்த்துதற்குக் குறளடி வஞ்சிப் பாவில் அவற்றைக் கீழ்க் காணுமாறு கொண்டு வந்திருப்பதறியவும்.

## 6. வஞ்சிப்பா

### 14. செய்யுள்

சான்றோர்பாடிய தமிழின்தொன்மையில்
தகுதிகளற்றவர் தன்சுயதேவையை
வேண்டி; அதன்புகழ் விரும்பாமுறையினில்
வேய்ந்தபொய்யில் வெளியார் ஆய்வும்
விடுபடலின்றி வீழ்ந்தனஅதனில்
விரவியபழிப்புரை வீண்கதையதுவென
பகுத்தஅறிவால் பான்மைநிரம்ப
தொகுத்தவைவிளங்கச் சூளுரைவிடுப்போம்
விடுத்தால்
இளந்தலை முறையினர் இயற்றமிழ்
வளம்பெற் றிருந்த வகையறி வாரே

—புரட்சிதாசன்

—மேற்கண்டவாறு வந்த நாலசைச் சீர்களான நிழற்சீர்களை வகைப் பிரிக்குமிடத்து :

1. நிழற்சீர்

| 1 | 2 | 3 | 4 | |
|---|---|---|---|---|
| சான் | றோர் | பா | டிய | தேமாந்தண்ணிழல், |
| தே | மாந் | தண் | நிழல் | என்பதுகீழ்க்காணுமாறு |
| நேர் | நேர் | நேர் | நிரை | என இவ்வாறு விரியும். |

அதே நாலசையுடைய நிழற்சீர்,

| 1 | 2 | 3 | 4 | |
|---|---|---|---|---|
| சான் | றோர் | பா | டிய | தேமாந் தண்ணிழல், |
| தே | மா | கூ | விளம் | என்று |
| நேர் | நேர் | நேர் | நிரை | தேமா, கூவிளம் என இருசீர்களாகப் பிரிவதையும் அறியவும் |

2. நிழற்சீர்

| 1 | 2 | 3 | 4 | |
|---|---|---|---|---|
| தமி | ழின் | தொன் | மையில் | புளிமாந் தண்ணிழல் |
| புளி | மாந் | தண் | ணிழல் | என்பது |
| நிரை | நேர் | நேர் | நிரை | என இவ்வாறு வரும். |

அதே, நாலசையுடைய நிழற்சீர் :

| 1 | 2 | 3 | 4 | |
|---|---|---|---|---|
| தமி | ழின் | தொன் | மையில், | புளிமாந் தண்ணிழல் என்பது |
| புளி | மா — | கூ | விளம் | ஈரசை கொண்ட இரு சீர்களாகப் |
| நிரை | நேர் | நேர் | நிரை | பிரிவதையும் அறியவும் |

பொதுச் சீராகக் கொள்ளப்பட்டு (நிழற்சீர்—1) நான்கு அசைகளாக வந்த நிழற்சீர் என்ற தேமாந்தண்ணிழல், இரண்டு சீர்களாக; அதாவது தேமா, கூவிளம் என்று பிரிக்கப்படுவதில் மாமுன் நேர் என்று வந்தால், நேர் ஒன்றிய ஆசிரியத் தளையாகும். இவை பாவினத்தில் கொள்ளப்படும் இலக்கணம் கொண்டு ஒன்றிய, ஒன்றாத என இருவகைப்படும். ஒன்றாதது கலித்தளை என்பதறியவும்.

பொதுச்சீராக் கொண்ட (நிழற்சீர்—2) நான்கு அசைகளாக வந்த நிழற்சீர் என்ற 'புளிமாந் தண்ணிழல்' இரண்டு சீர்களாக அதாவது புளிமா, கூவிளம் என்று பிரிக்கப்படுவதில் இதுவும் மா முன் நேர் வந்த ஒன்றிய ஆசிரியத் தளையாகும்.

1. பூச்சீர்

| 1 | 2 | 3 | 4 | |
|---|---|---|---|---|
| வேய்ந் | த | பொய் | யில் | தேமாந்தண் பூ |
| தே | மாந் | தண் | பூ | என்பது |
| நே | நேர் | நேர் | நேர் | இவ்வாறு விரியும் |

இதே நாலசையுடைய பூச்சீர் இரண்டு நேரசையாக :

| 1 | 2 | 3 | 4 | |
|---|---|---|---|---|
| வேய்ந் | த | பொய் | யில் | தேமாந் தண்பூ |
| தே | மா | தே | மா | தேமா தேமா என்று |
| நேர் | நேர் | நேர் | நேர் | ஈரசைச் சீர்களாகப் பிரிவது அறிக. |

மேற்கண்ட பூச்சீர்வகை இரண்டிலும் இரண்டு இரண்டு சீர்களாகப் பிரித்த வகையில் :

| | | | |
|---|---|---|---|
| வேய்ந்த | பொய்யில் | வெளியார் | ஆய்வும் |
| தேமா | தேமா | புளிமா | தேமா |

இதில்—மூன்று 'தேமா'ச் சீர்களும், ஒரு புளிமாச்சீரும் வந்ததறியவும். தளை கூறுமிடத்து, இரண்டுமே மாமுன் நேர் வந்த ஒன்றிய ஆசிரியத்தளை ஆகும்.

தண்பூ, தண்ணிழல்; நறும்பூ, நறுநிழல் ஆகிய நான்கும் இரண்டிரண்டு அசைகள் கொண்டவை. இவை, தங்களுக்கு முன் இரண்டிரண்டு தேமா, புளிமா, கூவிளம், கருவிளம்—என்ற சீர்களையும் கொண்டதால் 'தேமாந்தண்பூ' என்ற வரிசைப் பட்டு, அதன் தொடர்பான அனைத்துச் சீர்களும் நான்கு அசை பெற்றன. அந்தச் சீர்களை இரண்டிரண்டாகப் பிரித்துக் கொண்டால் அனைத்தும் இரண்டு அசைகளுள்ள ஒருசீர் எனவாகும். அதாவது 16 + 16 = 52 சீர்கள். அவை அனைத்துமே பொதுச்சீர்கள் என்ற பெயரில் மேற்கண்ட பாவினங்களில் கொள்ளப்பட்ட ஆசிரிய உரிச்சீர்கள் என்பதைத் தெளிவாக அறியவும். இவற்றில் காய்ச்சீர்களும், கனிச்சீர்களும் வராது. அவை மூவசைச் சீர்கள் என்பதைக் கருத்தில் கொள்ளவும். அசைச்சீரின் தலைப்புகள் வேறு. எழுத்தெண்ணிக் கூறும் முறை வேறு. ஆகவே, ஒருசீர், இருசீர். முச்சீருடன் நான்கு சீர்களை இரண்டிரண்டாகப் பொதுச்சீர் எனக்கொண்டதால், அந்த நிழற் சீர்களும் பூச்சீர்களும் சிறப்புடையனவாகக் கூறப்படவில்லை என்பதறியவும்.

### சீர்களுக்கான எழுத்தெண் அளவு

| பழைய மரபு | இடைக்கால மரபு | | எழுத்தென் அளவு |
|---|---|---|---|
| நேர் | நாள் | ஒற்று நீக்கி | நே—1 |
| நேர்பு | காசு | ஒற்று நீக்கி | நேபு—2 |
| நிரை | மலர் | | நிரை—2 |
| நிரைபு | பிறப்பு | ஒற்று நீக்கி | நிரைபு—3 |

**ஈரசைச் சீர்கள்;**

| | | | |
|---|---|---|---|
| நேர் நேர் | தேமா | ஒற்று நீக்கி | நே நே —2 |
| நிரை நேர் | புளிமா | ஒற்று நீக்கி | நிரை நே —3 |
| நிரை நிரை | கருவிளம் | ஒற்று நீக்கி | நிரை நிரை—4 |
| நேர் நிரை | கூவிளம் | ஒற்று நீக்கி | நே நிரை —3 |

மூவசைச் சீர்கள்;

| | | | |
|---|---|---|---|
| நேர் நேர் நேர் | தேமாங்காய் | ஒற்று நீக்கி | தேமாகா —4 |
| நிரை நேர் நிரை | புளிமாங்காய் | ஒற்று நீக்கி | புளிமாகா—4 |
| நிரை நிரை நேர் | கருவிளங்காய் | ஒற்று நீக்கி | கருவிளகா—5 |
| நேர் நிரை நேர் | கூவிளங்காய் | ஒற்று நீக்கி | கூவிளகா —4 |

**கனிச் சீர்கள்;**

| | | | |
|---|---|---|---|
| நேர் நேர் நிரை | தே மாங் கனி | ஒற்று நீக்கி | தே மா கனி—4 |
| நிரை நேர் நிரை | புளி மாங் கனி | ஒற்று நீக்கி | புளி மா கனி—4 |
| நிரை நிரை நிரை | கரு விளங் கனி | ஒற்று நீக்கி | கரு விள கனி—6 |
| நேர் நிரை நிரை | கூ விளங் கனி | ஒற்று நீக்கி | கூ விள கனி —5 |

**நாலசைச்சீர்; தண்பூ, நறும்பூ**
**பூச்சீர்**

| | | | |
|---|---|---|---|
| நேர் நேர் நேர் நேர் | தே மாந் தண்பூ | (தே மா தபூ) | —4 |
| நிரை நேர் நேர் நேர் | புளி மாந் தண்பூ | (புளி மா தபூ) | —5 |
| நிரை நிரை நேர் நேர் | கரு விளந் தண்பூ | (கரு விள தபூ) | —6 |
| நேர் நிரை நேர் நேர் | கூ விளந் தண்பூ | (கூ விள தபூ) | —5 |
| நேர் நேர் நிரை நேர் | தே மா நறும்பூ | (தே மா நறுபூ) | —5 |
| நிரை நேர் நிரை நேர் | புளி மா நறும்பூ | (புளி மா நறுபூ) | —6 |
| நிரை நிரை நிரை நேர் | கரு விள நறும்பூ | (கரு விள நறுபூ) | —7 |
| நேர் நிரை நிரை நேர் | கூ விள நறும்பூ | (கூ விள நறுபூ) | —6 |

**நிழற்சீர் (தண்ணிழல், நறுநிழல்)**

| | | |
|---|---|---|
| நேர் நேர் நேர் நிரை | தே மாந் தண்ணிழல் | (தே மா தநிழ)—5 |
| நிரை நேர் நேர் நிரை | புளி மாந் தண்ணிழல் | (புளி மா தநிழ)—6 |
| நிரை நிரை நேர் நிரை | கரு விளந் தண்ணிழல் | (கரு விள தநிழ)—7 |
| நேர் நிரை நேர் நிரை | கூ விளந் தண்ணிழல் | (கூ விள தநிழ)—6 |
| நேர் நேர் நிரை நிரை | தே மா நறு நிழல் | (தே மா நறு நிழ)—6 |
| நிரை நேர் நிரை நிரை | புளி மா நறு நிழல் | (புளிமா நறு நிழ)—7 |
| நிரை நிரை நிரை நிரை | கரு விள நறு நிழல் | (கரு விள நறு நிழ)—8 |
| நேர் நிரை நிரை நிரை | கூ விள நறு நிழல் | (கூ விள நறு நிழ)—7 |

## 4. தளை

ஓர் அடிக்குக் கொள்ளப்படும் சீர்களில், நின்ற சீர் ஒவ்வொன்றும், வரும் சீரோடு ஒன்றி இணைவது தளை எனப் படும். ஒழுங்கின்றி இணைந்தால், 'தளை தட்டுதல்' என்பர். அதாவது, 'தளை' பிழையுடையது என்பதாம்.

நின்ற சீரின் ஈற்றசையும், வருஞ்சீரின் முதலசையும் தம்முள் ஒன்றுவதும் ஒன்றாததுமான ஏழு தளைகளைக் கீழ்க் காணுமாறு அறியவும்;

1. **நேர்** ஒன்றிய ஆசிரியத்தளை
2, **நிரை** ஒன்றிய ஆசிரியத்தளை
3. **வெண்சீர் வெண்டளை**
4. **இயற்சீர் வெண்டளை**
5. **ஒன்றிய வஞ்சித்தளை**
6. **ஒன்றாத வஞ்சித்தளை**
7. **கலித்தளை**

இவற்றின் வகையும் விளக்கமும் வருமாறு :

ஆசிரியத்தளை

இது, நேரசை ஒன்றுவதும் நிரையசை ஒன்றுவதுமாக இரண்டு தளைகள்.

''மா முன் நேரும்; விளம் முன் நிரையும்
வருவ தாசிரியத் தளையாமே'' —என்றார்

மா முன் நேர் — நேர் ஒன்றிய ஆசிரியத்தளை
விள முன் நிரை — நிரை ஒன்றிய ஆசிரியத்தளை

இதனையே,

''இயற்சீர் இரண்டு தலைப்பெயல் தம்முள்
விகற்பம் இலவாய் விரவி நடப்பின்
அதன்பெயர் ஆசிரியத் தளையாகும்''

என்றார் காக்கைப்பாடினியார்.

சொல்லப்பட்ட இயற்சீர் இரண்டில் நேர் ஒன்றிய ஆசிரியத் தளையாக;

## 1. ஆசிரியப்பா

### 15. செய்யுள்

**''குன்றில் நைவளம் கொண்ட பாணரோ
வெண்டளை பாடி விரவி யாழொடு
தந்தனத் தண்ணுமை தட்டினர்
அஞ்சனக் கொடிச்சியர் ஆடினர் ஆங்கே''**

**—புரட்சிதாசன்**

இது, குன்றில் நைவளம் என, மா முன் நேர் கொண்ட நேரொன்றாசிரியத் தளையாலே வந்த செய்யுள்.

## 2. ஆசிரியப்பா

### 16. செய்யுள்

''அருவியில் புதுப்புனல் அணியே ஆற்றிடை
பெருகிய செம்புலம் பிழையற
பொலிவுடன் பூத்ததே முல்லையம் புறவே''

—புரட்சிதாசன்

இது, அருவியில்—புதுப்புனல் என விள முன் நிரை கொண்ட நிரையொன்றாசிரியத் தளையால் வந்த செய்யுள்.

## 3. வெண்பா

### 17. செய்யுள்

''வில்லெடுத்தே அம்பெய்வோர் வீரரெனத் தோள்புடைப் போர்
சொல்தொடுப்போர் இம்மூவர் துல்லியமாய்—வல்ல
குறிப்பும் வலிமையும் கொள்கைப் பிடிப்பும்
நெருப்பெனக் கொள்ளல் நெறி''

—புரட்சிதாசன்

இது, வெண்சீர் வெண்டளையாலும் இயற்சீர் வெண்டளையாலும் வந்த செய்யுள்.

மேற்கண்ட வெண்பாவில் சிறப்புக்குரிய அதன் இலக்கணமாக, முதல் வரித் தொடக்கத்தில்,

| | |
|---|---|
| வில் லெடுத் தே | அம் பெய் வோர் |
| நேர் நிரை நேர் | நேர் நேர் நேர் |
| கூ விளங் காய் | தே மாங் காய் |

என்றார் போலக் காய் முன் நேர் வந்த வெண்சீர் வெண்டளை. அவ்வாறே மூன்றாவது அடித் தொடக்கத்தில்,

| | |
|---|---|
| குறிப்பும் | வலிமையும் |
| நிரை நேர் | நிரை நிரை |
| புளி மா | கரு விளம் |

என மா முன் நிரை வந்த இயற்சீர் வெண்டளை,

இதனையே,

“இயற்சீர் இரண்டு தலைப்பெயல் தம்முள்
விகற்ப வகையாகி வெண்டளை யாகும்”

என்றார் காக்கைபாடினியாரும்.

## 4. வஞ்சிப்பா

1. தேமாங்கனி புளிமாங்கனி
2. கருவிளங்கனி கூவிளங்கனி
3. தேமாங்கனி புளிமாங்கனி
(தனிச்சொல்) புளிமாங்காய்

புளிமா கருவிளம் கருவிளம்
கருவிளம் கூவிளம் கருவிளம் புளிமா என

வஞ்சிப்பாவிற்குரிய சீர்களைக் கொண்டு உணர்த்தும் தளைகள். இரண்டு சீர்கள் ஒரு அடி என்ற குறளடியில் மூன்று வந்து, இடையில் தனிச் சொல் பெற்று நான்காவது அடி மூன்று சீர், ஐந்தாவது அடி நான்கு சீர் கொண்ட ஆசிரியத்தளையில் முடிந்தமை அறிக.

1. கனி முன் நிரை வந்தது ஒன்றிய வஞ்சித்தளை.
2. கனி முன் நேர் வந்தது ஒன்றாத வஞ்சித்தளை.

1. தேமாங்கனி முன் புளிமாங்கனி என கனி முன் நிரை வந்தது ஒன்றிய வஞ்சித்தளை.
2. கருவிளங்கனி முன் கூவிளங்கனி எனக் கனி முன் நேர் வந்தது ஒன்றாத வஞ்சித்தளை. இதனையே,

“தன்சீர் இரண்டு தலைப்பெயல் தம்முளொத்(து)
ஒன்றினும் ஒன்றா தொழியினும் வஞ்சி”

என்றார் காக்கைப்பாடினியார்.

## 5. கலிப்பா

### 18. செய்யுள்

**“தென்னாடே திராவிடமே திசைமாறி நுழைந்தவர்கள்
உன்நாட்டில் உனைப்பழித்தே ஒருசார்பு நெறிஉரைத்து
தன்இனத்தைப் புகழ்வதற்கே தடம்சொல்லி மடம் எழுப்பி
உன்விழியைக் குருடாக்கி உதிரத்தைக் குடித்தனரே”**

**—புரட்சிதாசன்**

'தென்னாடே—திராவிடமே' என்பது
காய் முன் நிரை வந்த கலித்தளை.
இதனையே,

"வெண்சீர் இறுதி இணையசைப் பின்வரக்
கண்டன எல்லாம் கலித்தளை"

என்றார் காக்கைப்பாடினியார்.

## 6. வஞ்சி விருத்தம்

### 19. செய்யுள்

"உரிமை கேட்ட நேர்மையை
உதறிய மத வாதச்
சிறுமையைத் தூற் றாமையால்
வறுமை நம்மை வாட்டுதே"

—புரட்சிதாசன்

இது, மூன்று சீர்களுடைய சிந்தடி, நான்கு கொண்ட வஞ்சி விருத்தம். மேற்கண்ட விருத்தத்தின் இரண்டாவது அடியில், இரண்டாவதான 'மத' என்ற நிரையசைச் சீர் இயற்சீரைப் போல நின்று வருஞ்சீர் முதலசையோடு ஒன்றாததால், இயற்சீர் வெண்டளை ஆயிற்று. அவ்வாறே, மூன்றாமடி இரண்டாவது சீர் 'தூற்' என்ற நேரசைச் சீர் இயற்சீரைப் போலவே நின்று வருஞ் சீர் முதலசையோடு ஒன்றியமையால் நேரொன்றி ஆசிரியத்தளை ஆயிற்று.

## அடி

### 1. குறளடி

### 20. செய்யுள்

இருசீர் அடியொன் றிதுபோ லிரண்டு
வருமடி கொள்ளல் குறள்

### 2. சிந்தடி

### 21. செய்யுள்

"முச்சீர் அடியொன் றிதுபோல மூன்றடி
அச்சிறப் புள்ளது சிந்து"

3. அளவடி

22. செய்யுள்

''நாற்சீர் அடியொன் றதுபோல நான்கடி
பாச்சீர் தொடரும் பல''

4. நெடிலடி

23. செய்யுள்

''ஐஞ்சீர் அடியொன் றதன்பெயர் மிஞ்சிய
நெடிலடி சொல்லும் நிறைந்து''

5. கழிநெடிலடி

24. செய்யுள்

''மிகுசீர் கழிநெடில் மேல்பட ஆங்கு
தொகுப்பன கொண்டு தொடர்''

—புரட்சிதாசன்

**குறளடி 2—அடி**

இரண்டு சீர் கொண்ட அடி குறளடி,

இரண்டு அடிகளில் முதலடியில் நான்கு சீரும், இரண்டாமடியில்மூன்று சீர் பெற்றுவரும். இதற்கு வெண்பா என்ற பெயரும் உண்டு. மேற்கண்ட குறள் வெண்பாவின் குறைந்த அடிகள் இரண்டே. கூடுதலாக வருதலுக்கு வரம்பில்லை.

''வெள்ளைக் கிரண்டடி இழிபு'

என்றார்.

அடி என்பதில் குறளடிக்கும், பா, என்பதில் குறட்பாவிற்கும் தொடர்பில்லை.

**சிந்தடி 3—அடி**

அகவலாசிரியப்பாவிற்கும் வஞ்சிப்பா ற்கும் குறைந்த அடிகள் மூன்றே. கூடுதலுக்கு வரம்பில்லை என்பதறியவும். அடி என்பதில் சிந்தடி வேறு. பா என்பதில் சிந்தியற்பா. வேறு.

**அளவடி 4—அடி**

நான்கு சீர் கொண்ட ஓர் அடி.

**அளவடி, நேரடி**

நான்கு அடிகள் எனவும் பெயர் பெறும். இதனையே, ''கலிக்கு ஈரிரண்டாகும்'' என்பார், கலிப்பவிற்குக் குறைந்த அடிகள் நான்கு.

நெடிலடி —.5, சீர்களுடையது.

ஓர் அடிக்கு ஐந்து சீர்கள் கொண்டது நெடிலடி அடி மிகுந்து வருதற்கு வரம்பில்லை.

கழிநெடிலடி :

ஐந்து சீர்களுக்கு மேல் வரும் சீர்கள் கொண்ட அடிகளுக் கெல்லாம் கழி நெடிலடி என்றார்.

5, 6, 7, 8, 9, 10,—சீர்கள் வரைத் தொடரும் இதனை யாப்பருங்கலம்,

''குறளடி சிந்தடி இருசீர் முச்சீர்
அளவடி நெடிலடி நாற்சீர் ஐஞ்சீர்
நிரநிறை வகையான் நிறுத்தனர் கொளலே''

''கழிநெடில் அடியே கசடறக் கிளப்பின்
அறுசீர் முதலா ஐயிண்டீறா
வருவன பிறவும் வகுத்தனர் கொளலே''

என்று கூறும்.

## 1. வஞ்சித்துறை

### 25. செய்யுள்

''விடைத்த மீசையும்
புடைத்த தோள்களும்
அடைத்த தாழ்களை
உடைக்க வல்லவே''

—புரட்சிதாசன்

இருசீர்க் குறளடியால் வந்தது இது. நான்கடியாக புளிமா கூவிளம் என்ற சீர்களில் வந்தது.

## 2. வஞ்சி விருத்தம்

### 26. செய்யுள்

''துடித்தல் ஆற்றொணா துலக்கமாம்
வெடித்தல் தேற்றொணா விளக்கமாம்
படித்தல் தூற்றொணா பயிற்சியாம்
முடித்தல் மாற்றொணா வளர்ச்சியாம்''

—புரட்சிதாசன்

இது முச்சீர்ச்சிந்தடி இது புளிமா, கூவிளம், கருவிளம், என்ற சீர்களில் வந்த செய்யுள்.

## 3. கலிவிருத்தம்

### 27. செய்யுள்

''பொல்லன கயமையைப் போற்றல் ஆகுமா
நல்லன இடர்ப்படும் நலிதல் ஆகுமா
அல்லன பயனிலா ஆய்வுக் காகுமோ
வல்லன சிறுமதி வளர்ச்சிக் காகுமோ''

—புரட்சிதாசன்

இது அடி ஒன்றிற்கு நான்கு சீர்களென வந்த அளவடிச் செய்யுள்.

## 4. கலித்துறை

### 28. செய்யுள்

''நெஞ்சம் இனிக்க நெறிசொன்னார் நிமிர்ந்து நின்று
வஞ்சம் புரிந்தார் வகையறியார் வறுமை நொந்தே
அஞ்சி உழன்றார் அழலானார் அறிவு நீங்கித்
தஞ்ச மடைந்தார் தடம்புரண்டார் தவறி மாண்டார்''

—புரட்சிதாசன்

இது அடிஒன்றிற்கு ஐந்து சீர்களைத் கொண்டதால் நெடிலடி.

மேற்கண்ட செய்யுள் வகைக்குச் சற்று மாறுபட்ட இலக்கணத்தை மயேச்சுரர் சொல்கிறார்.

ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பா, வஞ்சியப்பா இவற்றிற்கு அதற்குரிய சீர்கள் ஒன்றுபட்ட ஒழுங்கில் வந்தாலும் அடிகளில் சற்று மாறுதல் கூறுகிறார். மேற்கண்ட பாவினத்தின் அடிகளை,

"இரண்டும் மூன்றும் நான்கும் இரண்டும்
திரண்ட அடியின் சிறுமைக் கொல்லை''

என அவர் விளக்குவதையும் அறியலாம்,

## 5. ஆசிரியப்பா

### 29. செய்யுள்

''குமரியந் தமிலே
அலைவாய் ஊழிகுமரியந் தழிழே நீந்திச்
சிலையாய் நின்றாய்க் குமரியந்தமிழே''

—புரட்சிதாசன்

இந்த ஆசிரியத்தளையில் மூன்று சீர்கள் கொண்ட ஒரு அடியாக, மூன்று அடிகள் என்று முன்னரே யாப்பருங்கலம் தெளிவு படுத்துகிறது. ஆனால் மேற்கண்ட அதே ஆசிரியப்பா விற்கு முதலடி நான்குசீர் பெற்றும் இரண்டாவதுஅடி மூன்றுச்சீர் பெற்றும் மூன்றாமடி நான்குசீர் பெற்றும் அமையும் என மாறி வந்த மரபும் சொல்லப்பட்டுள்ளது.

## 6. குறள் வெண்பா

### 30. செய்யுள்

மூன்று தமிழ்ச்சங்கம் முத்தமிழ் ஆய்வரங்கம்
ஆன்றோர் அதற்குரியோர் ஆங்கு''

—புரட்சிதாசன்

இரண்டு சீர்கள் கொண்ட ஒரு அடி குறளடி என்று முன்னர், சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் மேற்கண்ட குறள் வெண்பா வில் முதலடி நான்கு சீர் ஆகவே 'இரு சீர்க் குறளடி' நான்கு சீரிலும் மூன்று சீரிலும் பாடிய வழக்கு இருந்திருக்கின்றது. வள்ளுவரும் இந்த அடிப்படையில்தான் திருக்குறள் இயற்றினார் என்பதை அறியலாம்.

## 7. வஞ்சிப்பா

### 31. செய்யுள்

''நெய்தல் நிலம் கடலாடிய நிலையன்றோ
பெய்தல்மழை புயலால்அவை பிழையன்றோ

அதனால்

விடுபடத் தெறிபட விரவி
நொடிபட நோய்பட நுளைச்சியர் துடிப்பே''

—புரட்சிதாசன்

குறளடிக்கு இருசீர்—ஒரு அடி. அவ்வாறே வஞ்சித்துறைக்கு இருசீர் ஓரடிக் குறளடியும், வஞ்சி விருத்தத்திற்கு சிந்தடி என மூன்று சீர் ஓரடியும் வந்திருக்கிறது. மேற்கண்ட வஞ்சிப்பாவில் கனி முன் நிரை ஒன்றியும் காய்முன் நேர்வந்து ஒன்றாமையும் அறியவும். ஆனால் முச்சீர்சிந்தடி என்ற சணிப்பில் இது வந்திருக்கிறது.

## தொடை

தொடை என்றால் என்ன?

தமிழ்க்கவிதை இயற்றும் இலக்கண முறைகளில் எழுத்து, அசை சீர், தளை, அடி என்ற ஐந்தினையும் கொண்டதாய், அதற்கு மோனை, எதுகை, முரண், அளபெடை, என்ற ஐந்து விளக்க முறைகளையும் தன்னுள்ளே வரம்பு கட்டி விளக்கும் தொடர்புடைய தலைப்பு தொடை எனப்படும்.

அவற்றை விரிக்கும்போது **மோனைத் தொடை, இயைபுத் தொடை, எதுகைத் தொடை,** முரண்தொடை, **அளபெடைத் தொடை, அந்தாதித் தொடை, இரட்டைத்தொடை,** முதல் **தொடை,** என்ற ஏழுடன் தொடை விகற்பமான **செந்தொடை** சேர்த்து ஆக எட்டுத் தொடை விகற்பமும் கூறவேண்டும்.

தொல்காப்பியரும் :

"மோனை எதுகை முரணே இயைபு என
நால்நெறி மரபின தொடை வகை"

தொல் செய்—84

என்றார்.

### 1. அடிமோனைத் தொடை

"எழுவாயெழுத் தொன்றின் மோனை" என்னும் யாப்பருங் கலக்காரிகை. அதாவது அடிதோறும் முதல் எழுத்து ஒன்றிவரத் தொடுப்பது அடி. அதனால் அடியைக் கொண்டு மோனைத் தொடையைச் சேர்த்து அடி தொடை மோனை எனப் பெயர் பெற்றது. எழுவாய் முதல் மோனை எனில் அதனின் மூன்றாம் சீரில் மோனை வருதல் சிறப்பு.

இதனையே தொல்காப்பியர்.

**"அடிதோறும் தலை எழுத்து ஒப்பது மோனை"**

தொல்—செய்—88

என்றார்.

புல்காயனாரும் 'முதலெழுத் தொன்றின் மோனை" என்றார்,

## 2. அடி இயைபுத் தொடை

அடிதோறும் முடிவில் நின்ற எழுத்தாலும், சொல்லாலும் ஒன்றிவரத் தொடுப்பது '**அடி இயைபுத் தொடை**' எனவாகும். இதனைத் தொல்காப்பியர்.

**''இறுவாய் ஒன்றல் இயைபின் யாப்பே''**

தொல் செய் 92

என்றார்.

## 3. அடிஎதுகைத் தொடை

அடிதோறும் ஆரம்பத்தில் வரும் சீர் எழுத்தினைப் போல இரண்டாமடியின் முதற்சீர் எழுத்திலும், முன்னவை போல அசை பெற்றுப் பின்னவை துவங்குதல் எதுகை. இதனையே **அடி எதுகைத் தொடை** என்றார்.

அதாவது;

கட்டு— 1 ஆவது அடி (துவக்கம்)
பட்டு— 2 ஆவது அடி ''
அட்டு— ... ...
குட்டு— ... ... ''

எதுகை என்பதற்கு இவ்வாறு வருவது ஒழுங்கு,

கட்டு —1 இவ்வாறு முதலடி முதற் சொற்றொடரும்,
காட்டு —2 இரண்டாமடி இரண்டாவதடிச் சொற்றொடரும்
பட்டு — 1 வருவதும் வர்க்கமோனை எனப்படும்.
பாட்டு — 2
அட்டு — 1
ஆட்டு — 2
குட்டு — 1
கூட்டு — 2

எதுகை என்றால்

**நஞ்சு—பஞ்சு—நாக்கு—ஊக்கு**

தவளை—குவளை, **கருப்பு**—இருப்பு,

என இவ்வாறு வருதல், முன்னர், முதலில் கூறியவாறு எதுகை யாகும்.

இதனையே தொல்காப்பியர் :

''அடிதோறும் தலை எழுத்து ஒப்பது மோனை
அது இல்லாது ஒன்றிவருவது **எதுகை** ஆகும்''

என்றார்.

ஓர் அடியின் தலைப்பாக எந்தச் சீரில் துவக்கினாலும் அந்த அடியின் மூன்றாவது சீரில் முதலில் துவங்கிய எழுத்தின் சார்பு எழுத்துடன் வருவநும், அந்த அடியின் இரண்டாவது அடிக்கு வரும் அதே சார்பு எழுத்து குறிலாகவோ நெடிலாகவோ துவங்கினாலும், அது வர்க்க மோனை என்றே கொள்ள வேண்டும்.

## 4. அடிமுரண் தொடை

அடிதோறும் முதற்சொல்லாலும், எழுத்தாலும், பொருளாலும் மறுதலைப்பட்டு, அதாவது மாறுபட்ட தலைப்புக் கொள்ளத் தொடுப்பது **அடிமுரண் தொடை** என்றார்.

இதனையே தொல்காப்பியர் ;

''மொழியினும் பொருளினும்
முரணுதல் முரணே''

என்றார்.

—தொல். செய் 91

## 5. அடியளபெடைத் தொடை

அடிகள் தோறும் துவங்கும் தலைப்புகள், உயிர் எழுத்துக்களாலும், ஒற்றெழுத்துக்களாலும் அளபெடுத்து ஒன்றிவரத் தொடுப்பதே **அடியளபெடைத் தொடை** எனப் பெயர் பெறும்.

''அளபுஎழில், அவையே அளபெடைத் தொடையே''

என்ற தொல்காப்பியக் கருத்தினை, நத்தத்தனார் என்ற புலவரும்.

''அளபெடைத் தொடைக்கே அளபெடை ஒன்றும்''

என்றார்.

## 6. அந்தாதித் தொடை

ஓர் அடியின் கடைசி எழுத்து, அசை, சீர்தழுவி இரண்டாவது அடித்துவக்கத்தில் அதையே திரும்பக் கொண்டு வரத்தொடுப்பது அந்தாதி இதனையே **அந்தாதித் தொடை** என்றார்.

''அடியும் சீரும் அசையும் எழுத்தும்
முடிவு முதலாச் செய்யுள் மொழியின.ஃதந்தாதித்
தொடை''என்றார் புலவர் நத்தத்தனார்.

## 7. இரட்டைத் தொடை

"அடி முழுவதும் வந்த மொழியே வருவதிரட்டை
வரண்முறையான்"

என்னும் யாப்பருங்கலக்காரிகை

ஓர் அடி முழுவதும் ஒரு சொல்லே வரத் தொடுப்பது **இரட்டைத் தொடை** எனப்படும்.

"ஒரு சீரடி முழுவதும் வருவதிரட்டை" என்றார் புலவர் மயேச்சுரர்.

## 8. செந்தொடை

மேலே சொல்லப்பட்ட மோனை, இயைபு, எதுகை, முரண், அளபெடை, அந்தாதி, இரட்டை ஆகியவற்றிற் குரிய தொடை விகற்பம்போல இல்லாது, வேறுபடத் தொடுப்பது **செந்தொடை** என்பதாகும்.

"சொல்லிய தொடையொடு வேறுபட்டியலிற்
சொல்லியற் புலவரது செந்தொடை என்ப"

தொ.பொ.செய் 100

இவற்றையே பல்காயனாரும் :

"அசையினும் சீரினும் இசையினும் எல்லாம்
இசையாது ஆவது செந்தொடை" என்றார்,

அதாவது செய்யுளுக்குரிய உறுப்புகள், வரம்பு காட்டி இலக்கணத் தெளிவில் வராது, நேருக்கு மாறாக பிழைபட, ஏதோ சொல் லடுக்காக வருவது செந்தொடை.

## 1. நேரிசை யாசிரியப்பா

### 32. செய்யுள்

ஆ வும் கன்றும் அடைந்தன தொழுவில்
ஆ யன் மகளோ அங்கே வந்தாள்
ஆ ற்றுப் புறத்தில் ஊற்றெழும் புனலில்
ஆ டை தோய்த்த வாறே
ஆ டிப் பாடிக் கோவலன் நின்றான்

—புரட்சிதாசன்

மோனையை விளக்கும் தலைப்பு தொடை. அதுஅடிதோறும் தலைப்படும்போது அடி. அடி, மோனை, தொடை சேர்ந்தால் அடி மோனைத் தொடை. மேற்கண்ட வாறு 'ஆ' என்பது அடிதோறும் நேரிசை பெற்று முதற் கண் வந்து வெவ்வேறு பொருள் உணர்த்தினும் மோனையாக வந்ததறியவும்.

## 2. நேரிசையாசிரியப்பா

### 33. செய்யுள்

''வெண்குடை வள்ளல்கள் வேண்மாள் மறவர்
விரிகட லாடிய வேந்தரும் மறவர்
தென்திசைப் பாண்டியர் செழுந்தமிழ் மறவர்
ஆதித் தமிழர் மறவர்
சேதுபதிகளும் சிங்க மறவரே''

—புரட்சிதாசன்

இது அடிதோறும் மறவர், மறவரே என கடைசிச் சீர் ஒரே விதமாக வரத் தொகுத்த அடி—இயைபுத் தொடைச் செய்யுள்.

## 3. இன்னிசை வெண்பா

### 34. செய்யுள்

கொடி தாங்கி நின்றார் குறுநில மன்னர்
முடி தாங்கி நின்றார் முறைவழுதித் தோன்றல்
பிடி தாங்கி நின்றார் பெருமமைச்சர் கூட்டம்
இடி தாங்கி நின்றார் இயைந்து''

—புரட்சிதாசன்

இது அடிதோறும், கொடி, முடி, இடி என முதற்சீர் நிரையசைச் சொல்லில் தொகுக்கப்பட்ட அடி எதுகைத் தொகைச் செய்யுள்.

## 4. நேரிசையாசிரியப்பா

### 35. செய்யுள்

''பேச்சிருந் தென்ன பிடிப்பில் லாமலே
படிப்பிருந் தென்ன பகுத்தறி யாமலே
கொடியிருந் தென்ன கொள்கை இல்லையே
கூட்டம் சேர்ந்ததா கூட்டம்?
அடிதடிக் கூட்டம் அரசியல் இல்லையே''

—புரட்சிதாசன்

இது அடித்துவக்கு தலைப்பு; எழுத்து, பொருள் வெவ்வேறு மாறுபட்டு, மறுதலைப்பட்டு வந்த அடி முரண்தொடை.

## 5. பஃறொடை வெண்பா

### 36. செய்யுள்

''ஆ அ குரலை அனைவரும் கேட்டனர்
ஈ இ எனவே இதுஎன்ன என்றவர்
ஊ உ உமிழ்நீரைத் துப்பி நகைத்தனர்
ஏ எ எனவிரட்டி எக்காளம் இட்டனர்
ஓ ஒ வென் றுய்த்தே யுணர்ந்து''

—புரட்சிதாசன்

இது அடிதோறும் அளபெடை கொண்டு, அவையொன்றி வரத் தொகுத்த அடியளபெடைத் தொடைச் செய்யுள்.

## 6. நேரிசையாசிரியப்பா

### 37. செய்யுள்

''பிளிறும் துதிக்கைப் பெருங்குரற் களிறு
களிறும் அதனுடன் கணைக்கும் குதிரை
குதிரையும் வேந்தர் குடைசூழ் மறவர்
மறவரும் வில்வாள் மகுடமும் முரசும்
முரசுடன் கொம்பொலி முத்தமிழ் இசையும்
இசையுடன் படைநடை எழுப்பும் அதிர்ஒலி
ஒலியுடன் பகைவரை எதிர்த் து
துடித்தெழும் புறத்துறைத் துலக்கமும் பிளிரே''

—புரட்சிதாசன்

இது ஓரெழுத்து, ஈரெழுத்து, மூவெழுத்து, நான்கெழுத்து என, வகை வந்த அந்தாதித் தொடைச் செய்யுள்.

## 7. இன்னிசைச் சிந்தியல் வெண்பா

### 38. செய்யுள்

''பாடுவோம் பாடுவோம் பாடுவோம் பாடுவோம்
பழந்தமிழ் யாப்பினில் பாடுவோம் பாடிச்
செழுந்தமிழ் கொள்வோம் சிறந்து''

—புரட்சிதாசன்

இது முதல் ஓரடி முழுதும் 'பாடுவோம்' என்ற ஒரே சொல்லே வரத் தொகுத்த இரட்டைத் தொடைச் செய்யுள்.

## 8. நேரிசையாசிரியப்பா

### 39. செய்யுள்

''திருத்தம் பகையா சிந்தனை பிழையென
மதக்கதை சொல்லியே மனிதனைக்
கொன்றவர் வாழ்வதோ கொடிதூக் குவதோ?

—புரட்சிதாசன்

அடிமூன்றிலும் துவக்க மோனை ஒழுங்கில்லாது வேறுபடத் தொடுத்த செந்தொடைச் செய்யுள். மேற்கண்ட எட்டு வகைத் தொடைகளும் மாறுபட்டுத் தொகுக்கப்பட்ட விளக்க மறியவும், இவ்வாறே நான்கு வகைப் பாவிற்கும் அவை பொருந்த வரும், எதுகை, மோனை இயைபு முரண் அளபெடை ஆகிய எவையும் இல்லாமல் வருவது செந்தொடை.

## இணை மோனை

மோனை என்பதுகவிதையடியின் துவக்கத்திற்குக் கொள்வது. அதாவது எந்தப் பொருளுக்கு சீர்படுத்தி,—எழுத்தினைப் பொருள்படுத்தி அதனைத் தலைப்பாகக் கொள்கின்றோமோ அது மோனை. அத்தகைய சிறப்புத் தலைப்பிற்கு உள்ளடங்கிய தாக மேற்கண்டவாறு எட்டுவகைத் தொடைகள் அறிந்தோம். அதனிலும் அதற்கு உள்ளிட்டதாக;

**1. இணை, 2. பொழிப்பு, 3. ஒரூஉ, 4. கூழை, 5. மேற் கதுவாய், 6. கீழ்க்கதுவாய், 7,** முற்று என ஏழுவகை சொல்லப் படுகிறது.

**1. இணை**

நான்கு சீர் கொண்ட ஒரு அடியில் முதற் சீரும், இரண்டாம் சீரும், அடுத்தடுத்து, அதன் தலைப்பு எழுத்து ஒரே மோனையில் அமைவது **இணை**யாகும்.

| சீர்கள்: | 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|---|
| | அழகே | அமைதி | | |
| இதனையே | | | | |

இரு சீர் மிசைவர (அழகே, அமைதி எனக்)
தொடுப்பது யிணையே''

என்றார்.

2. பொழிப்பு:

முதற் சீரும் அடுத்து இரண்டாவது சீர்விட்டு மூன்றாம் சீரும் மோனை கொள்ளத் தொடுப்பது **பொழிப்பு** எனவாகும்.

| 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| அணிகலன் | | அணிவது | |

இதனையே

''முதலொடு மூன்றாம் சீர்தொடை
(அணிகலன் அணிவது) பொழிப்பே

என்றார்

3. ஒரூஉ:

ஓர் அடிக்குள்ள நான்கு சீர்களில் இரண்டாவது சீரையும் மூன்றாவது சீரையும் விட்டு விட்டு முதற் சீரிலும் கடைச் சீரிலும் மோனை முதலாயின வரத் தொடுப்பது ஒரூஉ எனப்படும்.

ஓர் அடிக்குள்ள சீர்கள் நான்கென;

| 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| அடைந்த | — | — | அகற்றி |

என்றவாறு.

இதனையே,

சீரிரண்டிடைவிட (அடைந்த, அகற்றி என)
தொடுப்பதொரூ உத்தொடை''

என்றார்.

4. கூழை:

ஓரடியைத் தொடர்ந்த நான்கு சீர்களில் தொடர்ந்து முதல் மூன்று சீர்கள் முடிய மோனை முதலாயன தொகுத்தல் **கூழை** எனப்படும்.

ஓர் அடிக்குள்ள சீர்கள் நான்கென:

| 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| அவனை | அடைந்த | அந்நாள் | — |

என்றவாறு.

இதனையே,

''மூவொரு சிரு முதல்வரத் தொடுப்பது கூழை''

என்றார்.

5. **மேற்கதுவாய்**

முதற் சீரில் தொடங்கி இரண்டாவது சீரினை விட்டு விட்டு, மூன்றாவது சீர், ஆகியவற்றில் மோனை வரத் தொடுப்பது;

**மேற்கதுவாய்.**

**கதுவாய்** என்பது கொறுவாய் (இல்லாதது) என வழங்குகிறது. ஓர் அடிக்குள்ள சீர்கள் நான்கென,'

| 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| அன்பு | — | அரும்பு | அதற்கு |

என்றவாறு

இதனையே,

''முதலயற் சீரொழித்தன்னல (அன்பு, அரும்பு,அதற்கு,என)
மூன்றின் மிசைவரத்தொடுப்பது மேற்கதுவாயே''

என்றார்.

6. **கீழ்க்கதுவாய்:**

முதற்சீர், இரண்டாவது சீர் கொண்டு மூன்றாவது சீர்விட்டு, நான்காவது சீரில் முடித்தலெனத் தொடுப்பது **கீழ்க்கதுவாய்** எனக் கொள்ளவும்.

ஓர் அடிக்குள்ள சீர்கள் நான்கென :

| 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| ஆண்டு | அனுபவித்து | | அதற்கென |

என்றவாறு. இதனையே,

''ஈற்றயற் சீரொழித் (ஆண்டு, அனுபவித்து, அதற்கென)
தெல்லாந் தொடுப்பதுகீழ்க்கதுவாயின் கிழமையதாகும்''

—என்றார்

7. **முற்று**

ஓர் அடிக்குள்ள நான்கு சீர்களிலும் மோனை வரத் தொடுப்பது **முற்று** எனப்படும்.

ஓர் அடிக்குள்ள நான்கு சீர்களென;

| 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| அ டிமேல் | அ டியாய் | அ டித்ததும் | அ வனோ |

என்றவாறு, இதனையே,

"சீர்தோறுந் தொடுப்பது (அடிமேல், அடியாய்,
அவனோ என) முற்றெனப் படுமே"

என்னும் யாப்பருங்கலம்

மேலே கூறப்பட்ட ஏழு வகைகளுக்கும் இணை மோனை முதலிய தலைப்பில் ஐந்து வகை கூறப்படுகிறது.

5×7=35—இவை தொடை விகற்பம் ஆகும்.

| | | |
|---|---|---|
| 1. | மோனை விகற்பம் | 7 |
| 2. | இயைபு விகற்பம் | 7 |
| 3. | எதுகை விகற்பம் | 7 |
| 4. | முரண் விகற்பம் | 7 |
| 5. | அளபெடை விகற்பம் | 7 |
| | | 5×7= 35 |

இவற்றிற்கு விளக்கம் கூறுமிடத்து நேரிசை ஆசிரியப்பாக் களில் தொடர்ந்து அதற்குரிய ஒவ்வொரு வகையிலும் அந்தச் செய்யுள் அடிகளில் தனித்தனியே அந்தந்த விகற்பங்களும் தொகுக்கப்பட்டதை கீழ்க்காணுமாறு அறியவும்.

---

## 1. மோனை

### (நேரிசையாசிரியப்பா)

### 40. செய்யுள்

1. அடைமழைஅதிர்புனல் பெறுகியமலைவளம் (இணைமோனை)
2. ஆ ர்ப்பொடு வழிவரும் ஆ ங்கென நீர்த்தொடர் (பொழிப்பு)
3. இ டையிடை அருவிகள் சிலவழி இ டுக்குகள் (ஒரூஉ)
4. ஈ ங்கை ஈ ர்த்தே ஈ ட்டிய தளிர்க்கொடி (கூழை)
5. உ யர்ந்த மரமென உ ச்சியில் உ யிர்த்தெழ (மேற்கதுவாய்)

6. ஊ ன்றி ஊ டிய பலமர ஊ ஞ்சலில் (கீழ்க்கதுவாய்)
7. எ ன்னே எ ழிலென எ ல்லாம் எ னக்கெனக் (முற்று)

8. குயிலும் குழலும் குறிஞ்சியில்
9. இசைபடத் தொகுத்த எம்தமிழ் வாழ்க

—புரட்சிதாசன்

அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, என்ற உயிர்ச் சொல் வரிசைத் தலைப்புகளில் இணை மோனை முதலான அவற்றின் ஏழு விகற்பங்களும், மேற்கண்டவாறு செய்யுளில் தொகுக்கப்பட்டிருப் பதறியவும்.

## 2. இயைபு

(நேரிசையாசிரியப்பா)

### 41. செய்யுள்

1. க திர்த்த செவ்வான் கடலே கனலே (இணை இயைபு)
2. கா ர்முகில் நிழலே முல்லையம் திடலே (பொழிப்பு)
3. கி டைத்தாய் முத்துச் சரமெனக் கிடைத்தாய் (ஒரூஉ)
4. கீ ழ்மை இலதாய் எளிதாய்க் கிடைத்தாய் (கூழை)
5. கு யிலே குயி லே செங்கண் குயிலே (மேற்கதுவாய்)
6. கூவிப் பறந்தனை தாவித் தாவிக் (கீழ்க்கதுவாய்)
7. கெ முமையில் நிழலில் மரத்தில் மண்ணில் (முற்று)
மகிழ்ந்ததை

8. ஆயர் பாடி முல்லையில்
9. வாரம் பாடிய எம்தமிழ் வாழ்க

—புரட்சிதாசன்

க, கா, கி, கீ, கு, கூ, கெ என்ற வரிசைத் தலைப்புகளில் இணை இயைபு முதலான அவற்றின் ஏழு விகற்பங்களும் மேற் கண்ட செய்யுளில் தொகுக்கப்பட்டிருப்பதறியவும். இயைபு என்பது முடிவுச் சீரை முதற் சீராகக் கொண்டு எதிரிடையாக எண்ணப்படும்.

## 3. எதுகை

(நேரிசையாசிரியப்பா)

### 42. செய்யுள்

1. ச லங்கை இலங்க சந்தன மகளிர் (இணை எதுகை)
2. சார்ந்த வயல்களில் தேர்ந்த உழவர்கள் (பொழிப்பு)
3. சிதைந்த கதிர்பொலிக் கெறுதுகள் உதைந்தன (ஒரூஉ)

4. சீறும் ஆறுகள் ஏறும் பெரும்புலன் (கூழை)
5. சுரந்த பசுமை கரந்த நிறங்கள் (மேற்கதுவாய்)
6. சூழ்ந்த வாழ்வினில் இன்பமென் றாழ்தனர் (கீழ்க்கதுவாய்)
7. செழித்துக் களித்ததில் புளிப்பெனப் பழித்ததை (முற்று)
8. களமார் மருதக் கழனியில்
9. கலித்தொகை பாடிய எம்தமிழ் வாழ்க

—புரட்சிதாசன்

ச, சா, சி, சீ, சு, சூ, செ என்ற வரிசைத் தலைப்புகளில் இணை எதுகை முதலான அவற்றின் ஏழு விகற்பங்களும் மேற்கண்ட செய்யுளில் தொகுக்கப்பட்டிருப்பதறியவும்.

## 4. முரண்

(நேரிசையாசிரியப்பா)

1. ப லகடல் சிலகடல் மீன்பிடி பரதவர் (இணை முரண்)
2. பா டெனும் உழைப்பிலும் ஓய்விலும் களிப்பர் (பொழிப்பு)
3. பி றதொழில் உப்பளம் மரக்கலம் உரித்தொழில் (ஒரூஉ)
4. பீ ழையும் அதுதவிர் நிகர்முகம் கொள்வர் (கூழை)
5. பு னலிடை முத்தா? பவனம் மணலிடை (மேற்கதுவாய்)
6. பூ ட்டிய தேர்களில் உலாவரும் திறந்த (கீழ்க்கதுவாய்)
7. பெ ரிய சிரிய குறுகிய விரிந்த (முற்று)
8. பேரலை நெய்தலைப் புகழ்ந்த
9. பைந்தமிழ்ப் பாட்டினைப் பாடுவோம் மகிழ்ந்தே

—புரட்சிதாசன்

ப, பா, பி, பீ, பு, பூ, பெ, பே, பை என்ற வரிசைத் தலைப்புகளில் இணை முரண் முதலான அவற்றின் ஏழு விகற்பங்களும் மேற்கண்ட செய்யுளில் தொகுக்கப்பட்டிருப்பதறியவும்.

## 5. அளபெடை

(நேரிசையாசிரியப்பா)

### 44. செய்யுள்

1. ம யிலூஉம் குயிலூஉம் மலையும் சாரலும் (இணை அளபெடை)
2. மா னூஉம் குறும்பை பூஉணார் முலையரும் (பொழிப்பு)
3. மி ளிரூஉம் எழில்வளர்ச் சோஒலைத் துளிரூஉம் (ஒரூஉ)
4. மீ இட்டவும் பாஅட்டவும் கேஎட்கவும் இசையும் (கூழை)

5. மு கீ இலில் பிறையும் அகீஇலில் துகீ இலில் (மேற்கதுவாய்)
6. முஉடிக் கூஉடிப் பனியும் ஆடி (கீழ்க்கதுவாய்)
7. மெ ல்லேஏ தெள்ளேஏ வல்லேஏ தொல்லேஏ (முற்று)

8. மேல் வரும் செங்கதிர் மேட்டுமை
9. மையிருள் நீக்கிய மாண்பமை சிறப்பே

—புரட்சிதாசன்

ம, மா, மி, மீ, மு, மூ, மெ, மே, மை என்ற வரிசைத் தலைப்புகளில் இணை அளபெடை முதலான அவற்றின் ஏழு விகற்பங்களும் மேற்கண்ட செய்யுளில் தொகுக்கப்பட்டிருப்ப தறியவும்.

---

## பாவினத்தின் ஓசைகள்

### 45. செய்யுள்

''அகவலில் ஆசிரியம் அவ்வாறே செப்பல்
புகழ்வதில் வெண்பாப் புனைந்து—மகிழ்வதில்
துள்ளல் கலிப்பாவாம் தூங்கலில் வஞ்சிப்பா
தெள்ளுதமிழ் ஓசைத் திறம்''

—புரட்சிதாசன்

ஆசிரியம், வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா ஆகியவற்றிற் குரிய பாவினம், ஓசைவகை, அடிவகை, அனைத்தும் விரிவாக அறியத்தக்கவை. நான்கு வகை ஓசைப் பிரிவுகள் அந்த அந்தப் பாவினத்திற்கென்றே தனித்தன்மை பெற்றவை. ஒன்று மாறி வந்து மற்றொன்றில் கொள்ள முடியாதவாறு இலக்கணங்களும், அதன் தன்மைகளும் வலியுறுத்தப்பட்டிருக் கின்றன. அவற்றைப் பின்பற்றிப் பாடல் புனைந்தவர்களில் தொகுக்கப்பட்ட சங்கப் புலவர்களின் பாடல்கள் தெளிவாக நிற்கின்றன.

நீண்ட கதைகள், நெடிய பொருள்கள், தோற்ற அலங்கார அணிகள், சொற்கள் விளையப் பாடும் புலமையில் அகவலாசிரியம், தொடர்ந்து வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா வகையில் சிவனிய சமயக் குரவர்கள் நாயன்மார்கள், வைணவ ஆழ்வார்கள், தனிப்பாடற்றிரட்டுப் புலவர்கள் சித்தர்கள், குமர குருபரர், அருணகிரியார், வடலூர் இராமலிங்க அடிகளார், கலம்பகம், கோவை, அனைவரிடத்தும், அனைத்திலும் அந்தப் பெரும் புலமை கொடிகட்டி நிற்கின்றன.

இருசீர்க் குறளடி, ஆத்திசூடி, அடிப்படையாக நிற்கின்றது சிந்தடிகளில் அந்தப் பாடல்களைத் தொகுத்த அண்ணாமலை ரெட்டியார், சங்கரதாசு சுவாமிகள் பலரும் தொடர்ந்து, பாரதியார், பாரதிதாசன் வரை, திரையுலகிலும் உடுமலை நாராயணகவி, மருதகாசி, கண்ணதாசன், பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம், வாலி, கங்கை அமரன், வைரமுத்து எனப் பலர் அந்த வரிசையில் இசைத் தமிழில் சந்தவண்ணம் பொழி கின்றனர். அடிப்படைத் தமிழின் இலக்கணக் கவிதைச் செய்தி களில் அதன் கட்டுக்கோப்பு, பலதுறையில், பலவாறாக விரிந்து சிறப்படைந்திருப்பதைப் பிறமொழியினரும் விரும்பும் வண்ணம் சொற்கட்டுகள், நழுவாதிருக்கின்றன. அவைகள் பாதுகாக்கப் பட்டு வந்திருக்கின்றன. அவற்றின் அடிப்படைகளைத் தொடர்ந்து, அறிந்து, ஆராய்வோம்.

## 1. ஆசிரியப்பா

### (அதன் வகையும் இனமும்)

| இனம் | ஓசை | வகை | அடிகள் |
|---|---|---|---|
| ஆசிரியத் தாழிசை | அகவல் | ஏந்திசை | நான்கு |
| ,, துறை | | தூங்கிசை | சீர்கள் |
| ,, விருத்தம் | | ஒழுங்கிசை | சில,பல |

## 2. குறள் வெண்பா

| இனம் | ஓசை | வகை | அடிகள் |
|---|---|---|---|
| குறள் வெண்பா | செப்பல் | ஏந்திசை | நான்கு |
| வெண்டாழிசை | | தூங்கிசை | சீர்கள் |
| வெண்டுறை | | ஒழுங்கிசை | கொண்ட |
| வெளிவிருத்தம் | | | ஓரடி |
| | | | சிலவும் பலவும் |

## 3. கலிப்பா

| இனம் | ஓசை | வகை | அடிகள் |
|---|---|---|---|
| கலித்தாழிசை | துள்ளல் | ஏந்திசை | நான்கு சீர்கள் |
| ,, துறை | | அகவல் | ஐந்து சீர்கள் |
| ,, விருத்தம் | | பிரிந்திசை | கொண்ட |
| | | | ஓரடியும்பலவும் |

## 4. வஞ்சிப்பா

| இனம் | ஓசை | வகை | அடிகள் |
|---|---|---|---|
| வஞ்சித்தாழிசை | தூங்கல் | ஏந்திசை | இருசீர் ஓரடி |
| ,, துறை | (மயக்கம்) | அகவல் | மூச்சீர் ஓரடி |
| ,, விருத்தம் | | பிரிந்திசை | வஞ்சிக்குறள் |
| | | | சிந்து எனப் பல அடிகள் |

## 5. மருட்பா

நான்கு சீர்கொண்ட ஓரடித் துவக்கமாகவும், வெண்பாச்சீர்களும், ஆசிரியச் சீர்கள் முறையே இரண்டுபட்ட தொகுப்புச் செய்யுளாக, புறப்பொருள் வாழ்த்து, கைக்கிளை, வாயுரை செவியறிவுறூஉ என்னும் நான்கு பொருள்மேல் வருவது மருட்பாவாகும்.

### 1. ஆசிரியப்பா

ஆசிரியப்பாவும் அதன் இனமும், வகையும் அளவடிகளால் வந்து எல்லாப் பொருள்களையும் சொல்வதாக அகவல் வெண்பாவோடு, ஒத்தும், வேற்றுத் தளையும் அடியும் விரவி வருதலால் முதன்மையாக **ஆசிரியப்பா** எனப் பெயர் பெற்றது.

### 2. வெண்பா

வெண்பாவும், அதன் இனமும் வகையும் இரண்டடிக் குறளாகத் துவங்கி நான்கு சீர் அடிகளால் எல்லாப் பொருள்க்ள் மேலும் சொல்லப்படுவதானும், உயர்ந்த ஓசையுடன் ஆசிரியத் தோடு ஒத்து வேற்றுத்தளைகளும், அடிகளும் விரவாமை கொண்ட பாவகை **வெண்பா** எனப் பெயர் பெற்றது.

### 3. கலிப்பா

கலிப்பாவும் அதன் இனமும் வகையும் ஆசிரியத்தோடு ஒத்தும், நேரடியால் விளங்கி, அயலடியும், பிற தளையும் விரவி வருதலாலும், துள்ள்ல் ஓசை என்ற சிறப்புடைய பாவாக **கலிப்பா** எனப் பெயர் பெற்றது.

### 4. வஞ்சிப்பா

வஞ்சிப்பாவின் இனமும் வகையும் நாற்சீரடி என வராது, புறநிலை வாழ்த்து முதலிய பொருள்மேல் புனைதலும், பிற தளைகளும், அயலடிகளும் விரவி வரும் "பா" **வஞ்சிப்பா** என்னும் பெயர் பெற்றது. இதில் மயக்கந்தருவதையே 'தூங்கல்' என்றார் என்பதறியவும்,

நேரிசை ஆசிரியப்பாவில் கடைசி அடிகள்; பிற அடிகளாக அதாவது ஈற்றயலடியும், வெண்பா அதற்குரிய இலக்கணம் கடைசி அடியும் இணைக்குறளாசிரியப்பாவின் இடையடிகள் இரண்டும், பலவும் குறளடியாலும் (இரண்டு சீர் கொண்ட ஓரடி) சிந்தடியாலும் (மூன்று சீர் கொண்ட ஓரடி) வரும்.

கலிவெண்பாவிற்குக் கடைசிச் சீரடி முச்சீரால் வரும். அப்போ தரங்க உறுப்புகளும், இரண்டு சீர் அடி, மூன்று சீரடி கொண்டு வரும் அது கலிப்பா என்பதறியவும்.

அளவடி என்ற அராக உறுப்புகள் எல்லா அடிகளிலும் வருமென மீண்டும் கூறுகிறேன்.

---

## ஆசிரியப்பா

''நேர்நேர் இயற்றளையான் வரும் அகவலும்,
நிரைநிரை இயற்றளையான் வரும் அகவலும்
ஆயிரு தளையுமொத் தாகிய அகவலும்
ஏந்தல் துள்ளல் ஒழுகல் என்றிவை
ஆய்ந்த நிரைநிரை ஆகும் என்ப''

என்றார் புலவர் இளங்குமரனார்.

அவ்வகைச் செய்யுள்களை கீழ்க்காணுமாறு அறியவும்.

### 1. நேரிசை ஆசிரியப்பா

#### 46. செய்யுள்

''நாடு நாடு நன்மை தேடி
நன்மை தேடி உண்மை
பாடு பாடு பாட்டுப் பாடே''

—புரட்சிதாசன்

இது நேரசைத் 'தேமா' மட்டும் அனைத்துச் சீர்களிலும் வந்த நேரொன்றாசிரியத் தளையால் வந்த ஏந்திசை அகவலோசை.

### 2. நேரிசை ஆசிரியப்பா

#### 47. செய்யுள்

''அகத்துறைப் படைப்பிலும் முகப்புள கலித்துறைச்
சிறப்பினை உரைப்பதில் செருக்குற
நிரப்பது தலைப்பது நெடுங்கவித் தமிழே''

—புரட்சிதாசன்

இது 'தமிழே' என்ற புளிமாச்சீர்தவிர நிரையசைக் கருவிளம் மட்டும் அனைத்துச் சீர்களிலும் வந்து நிரையொன்றிய ஆசிரியத்தளையால் வந்த தூங்கிசையகவலோசை, சந்தத்தில் 'தனதன' என்று ஒலிப்பதறியவும்.

## 3. நேரிசை ஆசிரியப்பா

### 48. செய்யுள்

**''குன்றோ குறிஞ்சிக் கோதைக் கொடிச்சியர்**
**மன்றலில் குறவர் மானுடன் வந்து**
**காந்தள் மலர்சூழ் கனிமர**
**ஊஞ்சலிற் கலப்பார் உறவிலே மகிழ்ந்தே''**

**—புரட்சிதாசன்**

இது 'தேமா, புளிமா, கூவிளம், கருவிளம்' என்ற ஆசிரிய உரிச்சீர் நான்கும் வந்த நேரொன்றாசிரியத் தளையும், நிரையொன்றாசிரியத் தளையும் விரவிவந்த ஒழுகிசை அகவலோசை.

## 1. குறள் வெண்பா

### 49. செய்யுள்

**''சொல்லாமல் நில்லாமல் தோள்பற்றிக் கொள்ளாமல்**
**அல்லாமோ உள்ளாளம் ஆங்கு''**

**—புரட்சிதாசன்**

இது ஆறுசீர்களும் 'தேமாங்காய்' என்ற காய்ச்சீரில் வந்து காசு (ஆங்கு) என்பதில் முடிந்த வெண்சீர் வெண்டளையில் வந்த ஏந்திசைச் செப்பலோசைக் குறள் வெண்பா.

இதனையே :

''வெண்சீர் வெண்டளையான் வரும் யாப்பை
ஏந்திசைச் செப்பலென்மனார் புலவர்''

என்றார்.

## 2. குறள் வெண்பா

### 50. செய்யுள்

**''பூண்முலை நேரிழை பொற்றேர் நடையினில்**
**மான்விழி ஏவினான் மாய்ந்து'**

**—புரட்சிதாசன்**

இது இயற்சீர் : கூவிளம், தேமா, கருவிளம், வந்து காசு (மாய்ந்து) என்பதில் முடிந்த இயற்சீர் வெண்டளையில் தூங்கிசைச் செப்பலோசை.

இதனையே ;

"இயற்சீர் வெண்டளை யான்வரும் யாப்பைத்
தூங்கிசைச் செப்ப லென்மனார் புலவர்"

என்றார்.

## 3. குறள் வெண்பா

### 51. செய்யுள்

''என்ன கொடுத்தும் கொடையாமோ நீகொடுத்த
அன்னக் கொடையே கொடை''

—புரட்சிதாசன்

இது வெண்சீர் வெண்டளையும், இயற்சீர் வெண்டளையும், விரவி வந்த ஒழுகிசைச் செப்பலோசைக் குறள் வெண்பா.

இதனையே :

"வெண்சீர் ஒன்றலும் இயற்சீர் விகற்பமும்
ஒன்றிய பாட்டே ஒழுகிசைச் செப்பல்"

என்றார்.

## கலிப்பா

(தரவு, கொச்சகக் கலிப்பா)

### 52. செய்யுள்

''திருக்குறளே தமிழ்மறையே செழுந்தமிழே சிறப்புரையே
பொருட்கடலே அறத்துறையே புகழ்நிறையே பொழிப்புரையே
கருப்பொருளே உள்வியலே களவியலே அதன் உறவே
உருப்பொருளே ஒளிவிளக்கே உலகியலே பகுத்தறிவே.

—புரட்சிதாசன்

இது அனைத்துச் சீர்களும் கருவிளங்காயில் அடிக்கு நான்கு சீர்களாக நானான்கு-16-சீர்கள் வந்தமை அறிக.

''ஏந்திசைத் துள்ளல், கலித்தளை இயையின், வெண்டளை தன்தனை ஒன்றிரண்டு இயையின், ஒன்றிய அகவல் துள்ளல் என்றோதுப'' என்றார் இளங்குமரனார்.

என்றவாறு இலக்கண நெறியால் வெண்டளைக் காய்ச்சீர் களில், கலித்தளைகளால் வந்து அனைத்துப் பதினாறு சீர்களும் நிரையில் தலைப்பாகத் துவங்கி ஏகாரத்தில் முடிந்த வகையி னாலே இது ஏந்திசை துள்ளலோசை என்ற பெயர் பெற்றது.

## 1. தரவு கொச்சகக் கலிப்பா

### 53. செய்யுள்

''கார்மேகம் பொழிந்ததனால் கால்வாயில் நீர்வளம்
ஏருழுத கழனியில் எழுச்சிமிகு பயிரினம்
ஊராண்மைச் செல்வநலம் ஓங்குபுகழ் மருதமாம்
பேராண்மை வேளாளர் பெருவிழா நடத்துவரே''

—புரட்சிதாசன

இது மயக்கமில்லாத கலித்தளைச் செய்யுள். வெண்சீர் வெண்டளையும், கலித்தளையும் விரவிவந்த அகவற்துள்ள லோசை.

## 2. கலிப்பா

### 54. செய்யுள்

''காமப் பெருந்திணைக் கலித்தொகை மருதத்தில்
சாம நடுநிசிச் சச்சரவும் ஊடல்களில்
ஆடவரும் பெண்டிரும் அகப்புரட்டை முடிவைத்துக்
கூடிக் குலவியும் குழந்தையுடன் பாடியும்''
—இருப்பினும்,
ஒருதலைக் கைக்கிளை உடன்படார் வெளிப்படத்
திரிதலில் நெய்தல்யாழ் திறனெடுத்த பாட்டே''

—புரட்சிதாசன்

இது பலதளையும் விரவிவந்த பிரிந்திசைத் துள்ளலோசைச் செய்யுள் எனப்படும்.

இதனையே;

''தன்றளை பிறதனை என்றிவை யனைத்தும்
பொருந்தி வரினே பிரிந்திசைத் துள்ளல்''

என்றார், புலவர் குழந்தை.

வஞ்சிப்பா

''ஒன்றிய வஞ்சித் தளையே வரினும்
ஒன்றா வஞ்சித் தளையே வரினும்
என்றிவை இரண்டும் பிறவு மயங்கினும்
ஏந்தல், அகவல். பிரிந்திசைத் தூங்கல் என்று
ஆய்ந்த நிரநிரையாகும் என்ப''

*என்றார் புலவர் இளங்குமரனார்.*

## 1. வஞ்சிப்பா

## 55. செய்யுள்

''பகுத்தாய்வது பயன்ஆவது
தொகுத்தாய்வது துணை ஆவது
மகத்தானது மதிகூர்ந்தது
ஆனால்
சிதைத்தார் ஏழைமைச் சிந்தனை
நசித்தார் எள்ளிநகைத்திட வகைத்தே''

— புரட்சிதாசன்

*இது* **'ஆனால்'** *என்ற வாங்கு சொல்லுக்கு மேல் வந்த மூன்று அடிகளிலும் புளிமாங்கனி என்ற வஞ்சியுரிச் சீர்வந்து கனிமுன் நிறை என்ற இலக்கணத்தில் ஒழுங்கு பெற்ற ஒன்றிய வஞ்சித் தளையால் வந்த ஏந்திசைத் தூங்க லோசைச் செய்யுள் ஆகும்.*

## 2. வஞ்சிப்பா

## 56. செய்யுள்:

1. ''கூடாதன கொண்டால் பிழை
2. தேடாதன தேர்ந்தால் பிழை
3. ஆடாதன ஆடுதல் பிழை

ஆனால்
பிழையாய் நிற்கும் பேதைமை
விளைவோ மூடப் பெரும்பிழை பிழையே''

—புரட்சிதாசன்

*மேற்கண்ட இரண்டாவது வஞ்சிப்பாவின் தொடக்கத்து இரண்டு அடிகளிலும் தேமாங்கனி என்ற சீர் வந்திருப்பதில் கனிமுன் நேர் வந்த ஒன்றாத வஞ்சித்தளை இருப்பதறியவும்.*

அவ்வாறே மூன்றாவது அடியில் 3, 'ஆடாதன—ஆடுதல் பிழை' என தேமாங்கனியின் முன், கூவிளங்கனி வந்து, கனிமுன் நேர் வந்த ஒன்றாத வஞ்சித் தளையினையும் அறியவும். இதுவே ஒன்றாத அகவல் தூங்கலோசை வஞ்சிப்பா என அறியவும்.

## 3. வஞ்சிப்பா

### 57. செய்யுள்

1. ''பொல்லாவழி போற்றுதற்கு
2. நல்லோர்நெறி நலிவடைந்திட
3. இல்லாததை ஏற்பதற்கென
—வேதம்
திணிக்கும் பிழையினில் செயல்படும்
கணிப்பில் திராவிடம் கடுமையாய் எதிர்ப்பே.''

—புரட்சிதாசன

மேற்கண்ட செய்யுளில்

1. ''பொல்லாவழி—போற்றுதற்கு''
நேர் நேர் நிரை—நேர் நிரை நேர்
தேமாங்கனி—கூவிளங் காய்

என்பனவற்றால் நிரைமுன் நேர் வந்து, அதாவது கனிமுன் நேர் வந்து ஒன்றாத வஞ்சித்தளை ஆகியது. அத்துடன் பிறதளையாக காய்ச்சீர் வந்திருப்பதையும் அறியவும்.

2. ''நல்லோர் நெறி—நலிவடைந்திட''
இந்த அடியில் கனிமுன் நிரை வந்து
தளை ஒன்றி இருக்கிறது.

3. ''இல்லாததை—ஏற்பதற்கென''
இந்த அடியில் கனிமுன் நேர் என்ற
தளை, அதாவது மேற்கண்ட

தததை—ஏற்ப
கனி—முன்—நேர் நேர்

என்ற தளை வந்து ஒன்றாமலிருக்கிறது. ஆகையால் இப்படிப் பட்ட வஞ்சிப்பாக்களில் தளை ஒன்றியும், ஒன்றாமலும் பிறதளை களும் விரவி (கலந்து) வந்தமையால் இதனைப் 'பிரிந்திசைத் தூங்கலோசை என்றார்.

# 2. இலக்கண இலக்கியம்

## 1. ஆசிரியப்பா

### 58. செய்யுள்

''மாமுன்னே நேரும் மரவிளமுன் அந்நிரையும்
பாவரிசை நான்கெனும் பான்மையில்—சீர்கொண்ட
தாழிசை அத்துறை சார்ந்த பலவிருத்தம்
ஏழிசையில் ஆசிரியப் பா''

—புரட்சிதாசன்

மாமுன்நேர் விளமுன் நிரை என்ற ஆசிரியப்பாவின் அடிப்படை இலக்கணத்தோடு அகவலோசையில் வருவது ஆசிரியப்பா.

இதனையே தொல்காப்பியரும்,

''அகவல் என்பது ஆசிரியம்மே''

தொல் செய்—77

என்றார். ஆசிரியப்பாட்டின் அளவிற்கு எல்லை ஆயிரம் ஆகும்,

''இழிபு மூன்றடியே''

—தொ. செய். 150

என்றார்.

ஆசிரியப்பாவின் உயர் அளவிற்கு எல்லை ஆயிரம் அடிகள். அதற்குக் குறைந்த அடிகள் மூன்று என்று கூறுகிறார்.

ஆசிரிய வகைப் பாக்களில் இயற்சீரும், வஞ்சிக்குரிய சீர்கள் வராமல் பிறசீர்களும் வரும். அடி, தொடை, ஓசை, பொருள் என்ற வகை வேறுபாட்டில்,

1. நேரிசை ஆசிரியப்பா,
2. இணைக் குறளாசிரியப்பா
3. நிலைமண்டில ஆசிரியப்பா
4. அடிமண்டில ஆசிரிப்பா

என்ற நான்கு வகையிலும் இசைபடு செல்வமாகிய மேற்கண்ட ஒவ்வொன்றுக்கும் முறையே தாழிசை, துறை, விருத்தமென முறையும், அதனதற்கு வரும் உறுப்பு வகைக் கூடுதலும் குறைவு மான சீர்களும் கணக்கிடப் பெற்றிருக்கின்றன.

புறப்பொருள் அல்லாத அகப்பொருள் இலக்கண நூல்களிலும், பிற்பட்ட நிகண்டுகளிலும் குறிப்பாக தொல்காப்பியத்தில் முல்லைத் திணையை முதன்மைப்படுத்த வாழ்வியல்,

இசை இலக்கணம் கற்பித்தது போல பன்னிரு பாட்டியல் இலக்கண யாப்பருங்கலம், அதன் காரிகை, பெரும்பான்மை அனைத்திலுமே ஆரிய சாதி வர்ணம் முதன்மைப்படுத்த பிழை படுத்தி இருக்கின்றனர்.

அதாவது, பாவகைகளை வெண்பா, ஆசிரியப்பா, வஞ்சிப்பா என பிராமண, சத்திரிய, வைசிய‘ சூத்திர, வகை பிரித்தனர். அதற்கு உறுப்புகள் படைத்து, அனைத்து உரையாசிரியர்களும் அதற்கே துணை போயிருக்கின்றனர்.

தொல்காப்பியரே,

''பாவிரி மருங்கினைப்
பண்புறத் தொடுப்பின்
ஆசிரியப்பா, வெண்பா''

தொல்.செய் – 103

என ஆசிரியப்பாவை முதலில் சொல்லி வெண்பாவை இரண்டாவது படுத்திய பாவகை வரிசை கூறியதறிந்தும் இருட்டடிப்புச் செய்திகளாக,

''வெள்ளைப்பாட்டு வேதியர்க் குரித்தே''

—பிங்கலம். 1363

என வெண்பாவை வேதம் ஓதும் பிராமணருக்குரிய தென்றார்.

''நேரிசை அகவலும் கொச்சகக் கலியும்
ஆராயுங்கால் அரசர்க் குரித்தே''

—பிங்கலம், 1364

என, அகவலாசிரியப்பா, கொச்சகக் கலிப்பா ஆகிய வகை சத்திரியருக்குரிய தென்றார்.

''வஞ்சியும் இன்னிசை வெள்ளையும்
வணிகருக்கு''

—பிங்கலம். 1365

வஞ்சிப்பாவும் வெண்பாவில் இன்னிசை வெண்பாவும் வணிகருக் குரிய தென்றார்.

''நெடுவெண் பாட்டும் நேரிசை அகவலும்
கடிய சூத்திரர்க்குக் கட்டுரைத்தனரே''

—பிங்கலம். 1366

என்றார்.

மேற்கண்டவற்றில் தொடர்புடையதும் விட்டுப் போனதுமாக நீண்ட பஃறொடை வெண்பாவையும், நேரிசையகவலில் சில வகையும் சூத்திரர்க் கென்றார்.

ஆனாலும் பிங்கல நிகண்டாசிரியர் மேற்கண்டவாறு அவற்றை திணித்துக் கட்டி உரைக்கப்பட்டிருக்கிறது என்றே உறுதிப் படுத்துகிறார். பிற்பட்ட நூல்களும் முன்னுக்குப்பின் முரணாக அந்த வரிசைகளைக் குழப்பி இருக்கின்றன.

ஆனாலும்,

## 59. செய்யுள்

''அந்தணர்க்கு வெண்பா அரசருக் காசிரியம்
வஞ்சியிசை வெண்பா வணிகருக்குத்—தஞ்சமென்ற
சூத்திரர்க்கோ வெண்பாட்டு சொன்னவர் யார், ஆசிரியக்
கூத்தர்கள் என்பதைக் கொள்''

—புரட்சிதாசன்—(தொல். கா. ஐந் 114)

பிழைபட; வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி, மருட்பா, என நாலுசாதி, பஞ்சம சாதி சொல்லி திவாகர சூடாமணி நிகண்டுகளும், அதற்குரிய மத இலக்கியப் பாடல் மேற்கோள் களை காட்டி பிழையை ஒப்புக் கொள்கின்றன.

| | | |
|---|---|---|
| வெண்பா | — | பிராமணர் |
| ஆசிரியம் | — | அரசர் |
| கலிப்பா | — | வணிகர் |
| வஞ்சிப்பா | — | வேளாளர் (சூத்திரர்) |

என்ற பட்டியல் மரபே அனைத்துப் பாவின் இலக்கணங் களிலும் பிழையாகக் கொள்ளப்பட்டிருக்கின்றன.

இலக்கணச் சீர்த் தொகுப்புகளுக்குக் கட்டுப்பட்ட நெடும் பாட்டுகளே, பிறகு வரிக்கணக்குகளுக்கும் வகையும், கூடுதல் குறை உறுப்புகளும், அதற்குப் பாடுபொருளும் ஒழுங்கு படுத்தப் பட்டிருக்கின்றன. இடைச்செருகல்களில், அனைத்தும் பாவின வகையான தாழிசை, துறை விருத்தங்களில் வர்ண சாதிக் கருத்துள்ள பாடற் பொருள்கள் திணிக்கப்பட்ட பழைய மேற்கோள் பாடல்களை நீக்கி, இலக்கண இலக்கியமாக அதனதன் உறுப்புகள் பின்பற்றி கீழ்க்காணுமாறு குறிஞ்சித் திணைக்குரிய முதன்மையான அகப்பொருள்; புறப்பொருள்; தொடுத்து தமிழர் வாழ்வில் நில அடிப்படை; களவு; கற்பு; கைக்கிளை, பெருந்திணை; பாடாண் திணை; பரவுதல்;

புகழ்ச்சி என்ற இலக்கண அடிப்படைப் பாடல்களும் கீழ்காணுமாறு இயற்றி ஒழுங்குபடுத்திச் சொல்லப் பட்டனவற்றை அறியவும்.

ஆசிரியப்பாக்களில் கதைகளைச் சொல்வதற்குப் பல அடிகளும், குறிப்பிட்ட கருத்துகளைச் சொல்வதற்குச் சில அடிகளும் பின்பற்றி இயற்றி இருக்கிறேன்.

''அந்த அடியில் அயலடி சிந்தடி
வந்தன நேரிசை ஆசிரியம்மே''

என்ற காக்கைப் பாடினியப் (71) பொருள் விளக்கமாக அடிவகையில் குறளடி என்பது ஒரு சீர்த் தொடுப்பென, இரண்டு சீர் அடி இரண்டு குறளடியாகும். அவ்வாறே முச்சீர் கொண்ட அடி சிந்தடியாகும்.

இதனையே,

''ஈற்றயலடி மூன்று சீரால் வருவது
நேரிசை ஆசிரியப்பா'' வென்றார்.

இந்த ஈற்றயல் அடி என்பது அடிவரிசையின் கடைசி இரண்டு அடிகளில் முதலடி மூன்று சீர்களிலும், இரண்டாவது அடி நான்கு சீர்களிலும் நிற்பது நேரிசையாசிரியப்பா என்பதை நினைவுபடுத்திக் கொள்ளவும்.

குறைந்த வரிகளுடைய நேரிசை ஆசிரியம் குறுந்தொகையிலும், நீண்டதும் குறுகியதுமான மேற்கண்ட ஆசிரியம் அகம்—புறப்பாட்டு நூல்களிலும் பரந்து கிடப்பதை அறியலாம்.

அவ்வாறு ஈற்றயலடி கடைசி அடிக்கு முதலடி முச்சீரால் வந்த,

## 1. நேரிசையாசிரியப்பா

### 60. செய்யுள்

1. நால்வகைத் திணையிலும் நவின்றஅக் குறிஞ்சியே
2. நாநீல முதன்மையும் நல்லிசை முதன்மையும்
3. ஐந்திணை ஒழுக்கமே அதற்கெனச்
4. செந்தமிழ் வாழ்வியல் செப்பிய பொருளே''

—புரட்சிதாசன்

மேற்கண்ட பாடலில் மூன்றாவது அடியில் மூன்று சீர்களும், மற்ற 1, 2, 4 ஆகிய அடிகளில் நாநான்கு சீர்களும்வந்ததறியவும்.

---

## 2. இணைக்குறளாசிரியப்பா

### 61. செய்யுள்

1. ''குறிஞ்சிக்கோ ஆசிரியம் முல்லைக்கு வெண்டளை (அளவடி)
2. மருதத்தில் கலிப்பா (குறளடி)
3. நெய்தலில் வஞ்சி (குறளடி)
4. பொய்த்தல் இல்லா ஒழுங்கினைத் (சிந்தடி)
5. திருத்திய செருகலோ தெளிவான அழிவே (அளவடி)

—புரட்சிதாசன்

மேற்கண்ட இணைக் குறளாசிரியப்பா விளக்குமிடத்து கடைசி அடியும், முதலடியும் நாநான்கு சீர்கள் கொண்டு அதற்கு உள்ளிட்ட இடைப்பட்ட அடிகள்குறளடியாக இரண்டும் சிந்தடியாக ஒன்றும் வரத் தொடுத்ததால் இது இணைக் குறளாசிரியப்பா. இந்த இலக்கண விளக்கத்தை

''அளவடி அந்தமும் ஆதியும் ஆகி
குறளடி சிந்தடி என்ற அவ்விரண்டும்
இடைவர நிற்பது இணைக்குறள் ஆகும்''

என்றார் காக்கைப் பாடினியார்.

அதாவது அளவடிகளான நான்கு சீர் கொண்ட கடைசி அடியும், முதலடியும் ஆக இடைப்பட்டு குறளடி, சிந்தடி கொண்ட வகை தொடுத்தால் இணைக் குறளாசிரியப்பா என்றார்.

இதனையே,

''இடை இடை சீர்த்த பின்இணைக் குறளாகும்''

என்று காக்கை பாடினியாரும்.

''இடைபல குறைவது இணைக்குறள் ஆகும்''

என்று அவிநயனாரும் கூறினர்.

இணைக் குறளாசிரியப்பாவில் அளவடிகளான நான்கு சீர்கள் துவங்கி நெடும்பாடலானாலும், இடையிடையே இரண்டடிக் குறளடியும், மூன்றடிச் சிந்தடியும் விரவி வருதலும் இணைக் குறளாசிரியப்பாவாகும்.

---

## 3. நிலைமண்டில ஆசிரியப்பா

### 62. செய்யுள்

''ஆசிரியம் வெண்தளை கலித்தொகை வஞ்சி
ஓதிய வகைக்கென ஒருங்கினும் நான்கிலும்
தாழிசை துறையெனச் சார்ந்தன விருத்தமும்
ஏழிசை தழுவிய இயற்பா அனைத்திலும்
நிலந்தரு வழக்கென நெறிபரந் தனவே''

—புரட்சிதாசன்

மேற்கண்ட ஐந்து அடிகளும் நான்கு, நான்கு சீர்கள் கொண்டனவாகத் தம்முன் அளவொத்து வருவது நிலைமண்டில ஆசிரியப்பா வென்றார்.

''அகவல் இசையன அகவல் மற்றவை
ஏ, ஓ, ஈ, ஆய், என், ஐ,யென்றிறுமே''
—யாப்பருங்கலம்—69

என்றவாறு அகவலாசிரியம் வகையில் முற்றுப் பெறும் கடையடி, கடைசிச் சீரில், அதன் உரிச் சீரான தேமா புளிமாவிலும்,

கலிப்பாவில் அயலடியாக விரவி வந்து முடியும் அகவலாசிரிய தேமா புளிமாவிலும்;

வஞ்சிப்பாவில் அயலடியாக விரவி வந்து முடியும் அகவலாசிரிய தேமா புளிமாவிலும்;

ஏகாரத்திலும், ஓகாரத்திலும்; ஈகாரத்திலும் ஆய், என் ஐ, என்ற ஓசையில் முடிய வேண்டுமென்பது வரம்பு.

''ஒத்தவடித்தாய் உலையா மரபொடு
நிற்பது தானே நிலைமண்டிலமே''

என்றார். மேலும், யாப்பருங்கலத்தார்,

''என்னென் கிளவியை யீறாப் பெறுதலும்
அன்னபிறவும் அந்த நிலை பெற
நிற்கவும் பெறூஉ நிலை மண்டிலமே''

என்றவாறும் கூறினர்.

## 4. அடிமறி மண்டில ஆசியப்பா

### 63. செய்யுள்

''யாழே யாழே பாணன் யாழே
யாழிசைக் குறிஞ்சி யாத்த யாழே
முல்லையில் பாடிய மோகன யாழே
முத்தமிழ் மருத மூவர்கை யாழே''

—புரட்சிதாசன்

மேற்கண்ட நான்கு அடிகளிலும், முதல், நடு, இறுதி என ஓசையும், பொருளும் பிழையாது வருதல், அடிமறிமண்டில ஆசிரியப்பாவாகும்.

''எழுவாய் யிரட்டித் திறுதி யொன்றாய்
வரினது மண்டில ஆசிரியம்மே''

என்றவாறு, பாடலின் தலைப்புப் பொருட்சொல் அகார இரண்டுமான முகவுரை 'யாழே' 'யாழே' என்பதும் அடி முடிவுச்சீர் சொல்லும் அதுவே 'யாழே' என்று முடிவதும் அவ்வகை இனமே.

---

## 1. ஆசிரியத் தாழிசை

### 64. செய்யுள்

1. ''குன்றில் தேனருவி கொட்டுவதை யாழ்ப்பாணன்
கண்டு மெய்மறந்து கன்னிஇசை பாடிவிட்டால்
தென்றல் பூமுகம் சிவக்காதோ தோழி''

2. ''ஈரவாய்க் குரும்பைமுலை ஏந்திழையை யாழ்ப்பாணன்
நீரருவிக் கொடிச்சிஎன நெடும்பாட்டுப் பாடிவிட்டால்
தீராத மெய்த்தினவு சிவக்காதோ தோழி

3. ''வண்ணப் பூந்தேனை வண்டெடுக்க யாழ்ப்பாணன்
கன்னல் செந்தமிழில் கவிதையொன்று பாடிவிட்டால்
சின்னப் பெண்பருவம் சிவக்காதோ தோழி''

—புரட்சிதாசன்

மேற்கண்ட பாடல் இலக்கண விளக்கமாக,

''தருக்கியல் தாழிசை மூன்றடி யொப்பன''

—யாப்பருங்கலம்—30

என்றார்,

அதாவது ஒரு பொருளின் மேல் மூன்றடுக்கு வரியாகத் தம்முள் அளவொத்து வந்தவை ஆசிரியத்தாழிசை ஆகும்.

அப்படி இல்லாமல் தாழிசை இயற்றப்படுதலும் உண்டு. ஆனால் மேற்கூறியவை சிறப்பு என்றார்.

"அடிமூன்றொத்திறின் ஒத்தாழிசையே"

என்றார் காக்கை பாடினியார். ஆனால் சிறப்புக்குரியனவாக,

"ஒத்த ஒருபொருள் மூவடிமுடியின் அஃது

ஒத்தாழிசையாம் உடன் மூன்றடுக்கின்" என்றார் மயேச்சுரர்.

அவ்வாறே குறிஞ்சிக் கொடிச்சியின் பெருந்திணைக் காமக் கூற்றாக வெண்பா உரிச்சீர்களில் :.

## 2. ஆசிரியத் தாழிசை

### 65. செய்யுள்

1. "அந்திப் பொழுதிருக்க ஆள்ப்பார்த்துக் காத்துநின்று
வந்தே எனையணைத்து வாய்பொத்தி மெய்தழுவித்
தந்த இனியசுகம் தாளாமல் பாடுகின்றேன்"

2. "குறிஞ்சிப் பரண்மேலே கொத்தும் கிளிசூழ
நெறிஞ்சிப் புதர்கடந்து நீஎன்னைச் சேர்ந்தவிதம்
அறிந்த இனியசுகம் ஆறாமல் பாடுகின்றேன்"

3. "நீரோடைப் பூஞ்சுனையில் நெஞ்சோ டெனையணைத்து
ஊராரறியாமல் உச்சியுள்ளங் கால்நுகர்ந்த
தேனோ இனியசுகம் தீராமல் பாடுகின்றேன்"

—புரட்சிதாசன்

கீழே அனைத்துச் சீர்களும் கூவிளத்தில் (நேர்நிரை) அடிக்கு நான்கு சீர்களாகத் தனியே வந்த தாழிசை. இதோ :-

## 3. ஆசிரியத் தாழிசை

### 66. செய்யுள்

1. "வெய்ங்குழல் ஓசையில் வெண்தளை தோன்றின
தந்துகி யாழ்களில் சந்தநம் மீண்டன
பைந்தமிழ்ப் பாடலில் பரவினம் ஆண்டன"

அடுத்து கூவிளம் (நேர் நிரை) கருவிளம் (நிரை நிரை) என்ற சீர்கள் வரவாக,

## 67. செய்யுள்

2. ''பூக்களோ மலர்ந்தன புன்னகை சிவந்தன
பாக்களோ விளைந்தன பண்திறம் உவந்தன''

''கண்களோ திறந்தன காதலால் நனைந்தன
பண்களோ சுரந்தன பாடலால் இணைந்தன''

—புரட்சிதாசன்

மேற்கண்ட பாடல்களில் வரும் அகவலோசைச் சந்தங்கள்,

''அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்''

என்ற கம்பன் பாடலிலும் மற்றும் வில்லிப்புத்தூரார் பாரதத்திலும் பரந்து கிடப்பதறியவும்.

---

## ஆசிரியத் துறை

ஆசிரியத்துறை என்பது நான்கடியில் வருவது. அதனிலும் மூன்றாமடி ஈற்றயலடிகுறைந்தே சீர்கொண்டும், அப்பொருள் வரியே நான்காமடியில் தொடர்ந்து இடைமடக்கி வருவதும் அந்த ஆசிரியத்துறையே.

முதலடியே குறைந்தும், இரண்டாவது, மூன்றாவதடி குறைந்தும், மிகுந்தும் வருவனவும் ஆசிரியத் துறையே.

இவற்றில் நான்கடியில் ஓரடி குறைந்து வருவது நேர்த்துறை என்றும், இரண்டடி குறைந்து வருவது இணைக் குறட்டுறை என்றும் கூறப்படும்.

அவ்வகைச் சீர்களும், இலக்கண, இலக்கியப் பாடல்களும் கூறுவதைக் கீழ்க்காணும் வரிசைப் பாடல் வகைகளில் அறியவும்!

## 1. ஆசிரியத்துறை

## 68. செய்யுள்

''பனித்துளி மேகங்கள் பாடியபைம் பொழில் குறிஞ்சித்தென்றல்
இனித்திட யாழ்ப்பாணர் ஏந்திய இன்னிசை ஒலிக்குமாங்கு
தனித்தமிழ்ச் சந்தங்கள் தாழிசைப் பூவையர்
கனிச்சுவை யூட்டவே கண்களில் வேல்கொண்டு கவர்ந்துநிற்பர்'

—புரட்சிதாசன்

மேற்கண்ட 'பனித்துளி' என்று துவங்கும் துறைப் பாடலில் ஒரு அடிக்கு ஐந்து சீர்கள், மூன்றாவது அடியில் (ஈற்றயலடி) மட்டும் நான்கு சீர்கள் வந்திருப்பதறியவும். இது நான்கடியாய் ஈற்றயலடி குறைந்து வந்த ஒருவகை ஆசிரியத்துறையாகும்.

## 2. ஆசிரியத்துறை

### 69. செய்யுள்

''நலம்படு செல்வம் நறுங்குறிஞ்சி இன்னிசைமுதன்மைகொண்டு
நிலம்படு முல்லை நிழல்மருதம் நெய்தலெனத் தொடுத்தநீர்மை
நிலம்படு முல்லை நிழல்மருதம் நெய்தலென
வளம்படு செல்வ வழக்குரைக்கும் நானிலத்தை வாழ்த்துவமே''

—புரட்சிதாசன்

மேற்கண்ட 'நலம்படு' என்று துவங்கும் துறைப்பாடலில் ஐந்து சீர் கொண்ட முதலடி, இரண்டாமடியும், மூன்றாவ தடியில் நான்கு சீரும் அப்பொருளையே மடக்கி நான்காவது அடியில் ஐந்து சீர்களாக முடித்திருப்பதறியவும். இது ஈற்றயலடி (மூன்றாவதடி) குறைந்து இடைமடக்காக வந்த ஒருவகை ஆசிரியத்துறை.

## 3. ஆசிரியத்துறை

### 70. செய்யுள்

1. ''குன்றில் இருந்த குறவரை அசுரர் என
அன்று எதிர்த்தே அவர்களைப் பகைவர் எனக்
கொன்றோமென வென்றோமென
நின்ற ஆரியரே நீபுகழும் தேவர்கள்''

2. ''சிவமயம் என்று சொல்லித் திருமால் இனம்பிழைக்க
சவமடம் நம்மிடையே சாதிக் கலவரத்தை
வேண்டுவதும் தூண்டுவதும்
ஆண்டாண்டுக் காலமாய் அதுவேவே தாந்தமென்றார்''

3. ''தம்மை உயர்த்தி எம்மைத்தரக்குறைவாய் ஏசுகின்றார்
பொய்ம்மை அவர்மதச் சிந்தனையைப் போதிக்கின்றார்
உண்மை எது பொய் எது
நன்மைக்கும் ஒற்றுமைக்கும் நாமிணையும் நாளெது''

— புரட்சிதாசன்

மேற்கண்ட நான்கு துறைப் பாடலும், அடிக்கு நான்கு சீர்களாக, ஒவ்வொரு நான்கிலும் மூன்றாவதடி இரண்டிரண்டு என இரண்டிரண்டு சீர்கள் வந்திருப்பதறியவும். இதுவும் இடையிடை குறைந்து வந்த ஆசிரியத்துறையாகும்.

## 4. ஆசிரியத்துறை

### 71. செய்யுள்

''இன்றும் வடநாட்டில் இராவணன் அரக்கனென்று
கொன்ற நினைவுநாள் கூர்ந்து கொடும்பாவி கொண்டார்
கொன்ற நினைவுநாள் கூர்ந்துகொடும் பாவியா?
நன்றாமோ தேசியம் நடைமுறைக்கு ஒப்புமோ கூறு''

—புரட்சிதாசன்

மேற்கண்ட பாடலில் முதலடியில் நான்கு சீர். இரண்டா மடியில் ஐந்து சீர். மூன்றாமடியில் நான்கு சீர்; நான்காமடியில் ஐந்து சீர், இவ்வாறு வந்தமையால், அதாவது, நான்கு அடி களாக இடைஇடை குறைந்து, இடை மடக்காய் வந்ததனால் இதனை ஆசிரிய இணைக் குறட்டுறை என்றார்

மேற்கண்ட ஆசிரியத்துறை இலக்கணங்களுக்குரியவற்றை— கூடுதல் குறைவு உள்ள சீர் அடிகள், இடைமடக்கு. இவற்றை

''கடையதன் அயலடி கடைதபு நடையவும்
நடுவடி மடக்காய் நான்கடியாகி
இடைஇடை குறைநவும் அகவல் துறையே''

—யாப்பருங்கலம்—76

என்றார் காக்கைப் பாடினியார்.

## ஆசிரியவிருத்தம்

கழிநெடிலடி நான்காகத் தம்முள் அதற்குரிய சீரளவு கொண்டு அளவொத்து வருவன ஆகிரிய விருத்தம்.

இதனையே,

கழிநெடிலடி நான்கு ஒத்திறின் விருத்தம்
அஃதழியா மரபின் அகவல் ஆகும்'' யா. க. 77

என்றார்.

குறளடி இரண்டு, இன்னிசைக் குறள் மூன்று, நான்கு சீர் ஒரு அடியாக அகவலாசிரியங்களில் பல வந்தாலும், ஆசிரிய விருத்தம் என்ற வகையில் 5-சீர், 6-சீர்,-7-சீர்,-8-சீர் கொண்ட வகை, பரவலான விருத்தங்களிருக்கின்றன. அதனையே சிறப் பென்றும் கூறுவர். ஆனால் ஒரு பொருளைக் கருத்தில் கொண்டு நிறுத்தாமல் சீர் கொடுத்து. 9.சீர்,-10-சீர் என, அதற்கு மேலும்

தொடுத்து இயற்றிப் பாடுவோரின் புலமையிலேயே அவை சிறக்கும்.

அவ்வாறு 10-சீர்கள் வரை கீழ்க்காணுமாறு அவ்வழி விருத்தங்களை அறியவும்.

## 1. அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

### 72. செய்யுள்

1. அறிவின் புலமை அகல்விளக்காம்
ஆழ்ந்த கல்வி அவையாற்றும்
நெறியின் வலிமை நிறைவிளக்காம்
நேயம் தொண்டு இவையெல்லாம்
வறியார்க் குரிய வகைஎன்றே
வாழ்வு செல்வம் இதற்கெல்லாம்
உரியார் அரசை உடன்படுத்தும்
உண்மை இல்லா தவர்க்கென்றார்''

— புரட்சிதாசன்

### 73. செய்யுள்

2. ''கொடியும் குழுவும் குரல்கொடுக்க
கொள்ளை ஆடிக் கொலைசெய்ய
அடியாள் அரசோ அதைமறைத்தே
ஆணை என்றே வழக்காட
நெடிய பழியை நிறைபுகழாய்
நேர்மை நீதி என்றுரைக்க
விடியும் பொழுதோ விழி திறக்க
வேண்டா விருப்பில் இருண்டதுவே-

—புரட்சிதாசன்

### 74. செய்யுள்

3. ''உயிரணுக்கள் சேர்ந்தே உருப்பெற்ற தோற்றம்
ஒருநாளில் அழியும்
மயிர்க்காம்பும் ஊன்வற்றி மாய்ந்தே உதிர்வதுபோல்
மானுடம் அழியும்
பயிரும் பலசெழிப்பும் பான்மைகுன்றிப் போமாகில்
பதராகுமுன் அழியும்
அயராப் பரிணாமம் அவையழியும் பிறக்கும்
அவையே ''ஐம்பொறி''யே

—புரட்சிதாசன்

### 75. செய்யுள்

4. ''ஆன்மிக சாங்கியம் அதுயோக சித்தாந்தம்
அவ்வழி திராவிடம்
நான்முக ருக்வேதம் நவின்ற வேதாந்த
நாற்றமே ஆரியம்
வான்மிக ஞானமாய் வரைந்த பரமாத்மம்
வழியே கர்மகாண்டம்
ஊன்மிகு வேள்விமிருதி உயிர்பிறப்பை விட்ணும்என
உரைத்ததும் அபாண்டம்''

—புரட்சிதாசன்

## 2. எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

### 76. செய்யுள்

''சூழலுக் கேற்ப சுழற்சியில் ஆட்சியில்
சுற்றும் அடியாட்கள் கொண்டு
நாளொரு கட்சியில் நமக்குப் பணமென்று
நன்மொழி பேச வந்து
ஆளென வேசமும் அதற்கும் உதவியாய்
அணிஎனப் பலரைக் கொண்டு
கோள்கொலை கொள்ளை குடிஎன அமைதியைக்
குலைப்பவர் ஒழிய வேண்டும்.

—புரட்சிதாசன்

### 77. செய்யுள்

''பொல்லாப்புப் பேசி புறங்கூறி நின்றவர்க்கோ
பொழுது விடிவ தில்லை
செல்வாக் கிருந்தும் செயற்பழி கொண்டவர்க்கோ
சிந்தை அமைதிஇல்லை
கல்லாத மூடரைக் கரங்குவித் தேற்பவர்க்கோ
கருத்தில் தெளிவுஇல்லை
செல்லாத வாக்கிலே செயித்து வந்தவர்க்கோ
செருப்பும் உதவியில்லை

—புரட்சிதாசன்

## 3. எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

### 78. செய்யுள்

''சாத்திரங்கள் சமயமென சாதிநான்கு கூறியே
தன்னையதன் தலைவனாகச் சான்றுகளும் காட்டினார்
கோத்திரம் குலவழி கோயில்களைக் காட்டியே
குருக்கள் அதன்தலைவர் கொடிபிடித்து நாட்டினார்
பார்த்திருக்க வந்தவன் பழையகதை சொல்வதைப்
படித்தறிந்து சீர்திருத்தப் பண்புகொள்ள மறுக்கின்றான்
ஆத்திரத்தை மூட்டுவதில் அறியாமை கொள்கிறான்
ஆனாலும் உடன்பிறப்பு அவனைவிட முடியுமா?

—புரட்சிதாசன்

### 79. செய்யுள்

''நம்வீட்டில் அவன்வந்து, நம்மைமுட்டாள் ஆக்கியே
நாள்தோறும் மந்திரங்கள் சொல்ல வைத்து நிற்கிறான்
அம்மட்டோ இம்மட்டோ ஆதாயம் கொள்வதில்
அவன் பிழைப்போ அதுவென்று அவ்வழியே நிற்கிறான்.
எம்மதமும் சம்மதம் என்று சொல்லும் மூடனும்
இவன் மதத்தில் வாழ்வதிலே இறுமாப்புக் கொள்கிறான்
மும்மதத்தை விட்டொழிந்து முத்திதேடும் யோகியும்
அம்மணமாய்ப் போனாலும் அறிவுபெற மறுக்கிறான்.''

—புரட்சிதாசன்

## 4. ஒன்பதின்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

### 80. செய்யுள்

''ஆழிஆழி அலையில் அலையில் ஆடிய பாடிய
அருந்தமிழ் செழுந்தமிழ் நான்கண்டேன்
மேழிமேழி உழவில் உழவில் மேம்படத் தாமுயர்
மிகுபுகழ் களிப்பினை நான்கண்டேன்
பாலிபாலி படர்ந்த படர்ந்த பைம்பொழில் மண்வளம்
பலமணி உணவணி நான்கண்டேன்
வேலிவேலி விரிந்தவிரிந்த தென்புலம் ஊழியில்
விழுந்தது மழிந்ததும் நான்கண்டேன்''

—புரட்சிதாசன்

*மேற்கண்ட பாடல்;*

"தேமா, தேமா, புளிமா, புளிமா, கூவிளம், கூவிளம்
கருவிளம், கருவிளம், தேமாங்காய்—"

என்ற 9 சீர்வரிசையில் இரண்டடி இரண்டடி எதுகையாக வந்திருப்பதறியவும்.

## 5. பதின்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

### 81. செய்யுள்

"பூங்குழற் சுரம்வரப் பொலிவுறப் பொலிவுறப்
பூமழை வரவெனப் புனல்வரப் புனல்வரப்
பூரித்தேன் தோழி
தேன்கமழ் உணர்வெனச் சிலிர்த்திடச் சிலிர்த்திடத்
தேவையின் தொடர்பென தினவெழத் தினவெழத்
சிந்தித்தேன் தோழி
மாங்குயிற் குரல்வர மரம்செடிப் புதர்க்கொடி
மாருத அணியென மணம்மெற மணம்பெற
மான்கண்டேன் தோழி
பாங்கியர் படைவர பலரவ ருடன்வர
பாணர்கன் சிலர்வரப் பலவகை முழவுடன்
பண்கண்டேன் தோழி.

—புரட்சிதாசன்

மேற்கண்ட 10 சீர்கள் கொண்ட விருத்தத்தில் முறையே;—

"கூவிளம், கருவிளம், கருவிளம், கருவிளம்;
கூவிளம்; கருவிளம், கருவிளம், கருவிளம்;
தேமாங்காய், தேமா"

என்ற முறையில் அனைத்து வரிகளும் வந்த ஒழுங்குமுறை அறியவும்.

---

# வெண்பா

### 2. இலக்கணச் சுருக்கம்

ஓசை, அதற்குரிய செப்பலோசையே வெண்பா, இருவகைத் தளை கூறுமிடத்து, இயற்சீர் வெண்டளை, வெண்சீர் வெண்டளை, மாமுன் நிரையும் விளமுன் நேரும், இயற்சீர் வெண்டளை, காய்முன் நேர் வருவது வெண்சீர் வெண்டளை, ஓசையின் மாற்றமாக இயற்சீர் வெண்டளையில் வரும் வெண் பாவைத் தூங்கிசைச் செப்பலென்றும், வெண்சீர் வெண்டளை யில் வரும் வெண்பாவை ஏந்திசைச் செப்பலென்றும்; இயற்சீர்;

வெண்சீர் கலந்து வரும் வெண்பாவை ஒழு கிசைச் செப்ப லென்றும், கொள்ளப்பெறும்.

இவற்றில் இரண்டடி வெண்பா குறள்
மூன்றடி வெண்பா அளவியல்
ஐந்தடி வெண்பா பஃதொடை

இவற்றையே தொல்காப்பியர் :

''நெடுவெண்பாட்டே குறுவெண்பாட்டே
கைக்கிளை பரிபாட் டங்கதச் செய்யுளொடு
ஒத்தவை எல்லாம் வெண்பா யாப்பின''

என்றார்.

வெண்பா இலக்கணம்; அகவலாசிரியம், அறுசீர், எண்சீர்ப் பாக்களைவிட நுணுக் முள்ளவை என்பது புலமை மிக்கோர் அறிவார் முன்னர் கூறியவாறு அகவல் தொல்காப்பியத்தில் புலனெறி வழக்குப் படையல் யாப்பாகக் கொள்ளப்பட்ட கலி, பரி பாடல்களில் இரண்டடி, ஏழு சீர் கொண்ட குறள் வெண்பாக்கள் பரந்து, கிடத்தல் மிக முற்பட்ட வெண்பா இலக்கணப் புலமையுணர்த்தும்.

வெண்பாவின் பொது இலக்கணம் கூறுமிடத்து:—

## 82. செய்யுள்

**''முச்சீர் கடைச்சீர் முறைப்படுத்தும் வெண்பாவில்**
**அச்சீர் தளைதட்டா ஆணையுடன்—எச்சீர்**
**முதலடியில்? மூன்றம்சீர் மோனை இரண்டா**
**மதன் வரியின் முன்னரெது கை''**

**—புரட்சிதாசன்**

அதாவது ''ஏனையடி நாற்சீர் ஈற்றடி முச்சீர்': இரண்டடி வெண்பா எனினும் (குறள்) ஈராயிர அடிவெண்பா (கலி) எனினும் இவ்விலக்கணமே என்பார் இலக்கணப் புலவர் மதுரை இளங்குமரனார்.

மாச்சீரான தேமா, புளிமா, அதன் தொடர்ச்சீர்களும் விளச்சீரான கருவிளம், கூவிளம், காய்ச்சீரான கருவிளங்காய், கூவிளங்காய் இவையே வெண்பாவிற்கும், இரண்டடிக் குறளுக்குமுரிய சீர்கள். கனிச்சீர், பூச்சீரும் கொள்ளல் பிழை. கலித்தளைநடை, ஆசிரிய நடை கூட வெண்பாவில் வரக் கூடாது.

"புல்லாது அயற்றளை"

என்னும் (40) யாப்பருங்கலக்காரிகை.

நாலடியுள்ள வெண்பாவின் கடைசி அடியில் மூன்று சீர்கள். அதாவது முக்கால் அடி, அந்த முக்கால் அடியில் மூன்று சீர். நின்ற சீர் இரண்டு போகக்கடைச்சீரான மூன்றாவது சீர் எப்படி முடிய வேண்டும்? எத்தனை எழுத்துக்கள்? எவ்வாறு என ஒரு இலக்கண வழக்கு இருக்கிறது.

அவை;—

| | | | |
|---|---|---|---|
| நாள் | காசு | மலர் | பிறப்பு |
| நேர் | நேர்நேர் | நிரை | நிரைநேர். |

இவற்றில் நின்றசீர் தளைகொண்டு வந்து "நாள்" என்பதற்கு நெடிலும் ஒற்றுமாகவும் 'மலர்' என்பதற்கு இரு குறில் ஒரு ஒற்று அல்லது ஒரு நிறை அசைர்குரிய கலை, இலை, மலை, தளை, சிலை என்பன போன்றவைகள், அதன் மாதிரிகளாக வரும். ஆனால் காசு, பிறப்பு, என்பதற்கு மட்டும் கு,சு,டு,து, பு,று—என்ற இறுதிச் சொல் கொண்டு முடியும் பொருளோடு பற்றிய நேர்நேர், நிரைநேர் என்ற அசைக்கட்டுக்குள் அடங்கிய சீர்ச் சொல் வரவேண்டும். இவ்வாறு முறைப்படுத்திக் கொண்டு வரும் வெண்பாவில் ஆரம்பமுதல் வரித்துவங்கி நான்கு சீர்களிலும் ஏன் அனைத்துச் சீர்களிலும்

"மா முன் நிரை, விளமுன் நேர்,
காய் முன் நேர்"

என்பதைப் பின்பற்ற வேண்டும்.

இயற்சீர் வெண்டளையால் வருவது "மா முன் நிரை" அவ்வாறு இயற்றப்பட்ட ஒரு வெண்பா.

## 83. செய்யுள்

**"குழலும் இசையாழும் கொட்டு பதத்தில்
முழவும் அதன்குழுவும் மொய்த்து—வழங்க
இசையரங்கம் கன்னி இளமாதர் தோன்ற
அசைவுநடம் பாடல் அதற்கு"**

**—புரட்சிதாசன்**

| | |
|---|---|
| குழலும் | இசையாழும் |
| புளிமா | புளிமாங்காய் |
| கொட்டு | பதத்தில் |
| தேமா | புளிமா |
| முழவும் | அதன்குழுவும் |
| புளிமா | கருவிளங்காய் |
| மொய்த்து | வழங்க |
| தேமா | புளிமா |
| இசையரங்சம் | கன்னி |
| கருவிளங்காய் | தேமா |
| இளமாதர் | தோன்ற |
| புளிமாங்காய் | தேமா |
| அசைவு நடம் | பாடல் அதற்கு |
| கருவிளங்காய் | தேமா (பிறப்பு) |

மேற்கண்ட வெண்பாவில் மாமுன் நிரை வந்த வகையும் ஈற்று முடிவுச் சீரில் பிறப்பு என்ற சீருக்கு 'கு' வந்து குசுடு தாபுறு என்னும் குற்றியலுகர இலக்கணத்தில் முடிந்திரு பதையும் அறியவும்.

"விளமுன் நேர் வருவதும் இயற்சீர் வெண்டளையே. 'விளம்' என்றால் கருவிளமும் கூவிளமும் அடங்கும். விளச்சீர் துவக்கமாகக் கீழ்கண்டது; விளமுன் நேர் வரும் வெண்பா.

## 84. செய்யுள்

**'அஞ்சனக் கண்கள் அடிக்கடி தாம்துடிக்க**
**நெஞ்சமோ வீங்கி நினைவோ பரிமளிக்க**
**கொஞ்சுதற் காக கொழுநன் வரவெண்ணிப்**
**பஞ்சனை பார்த்தான் பழுத்து''**

—புரட்சிதாசன்

மேற்கண்டவெண்பா, 'அஞ்சனம்'—கூவிளம் என்ற சீரில் தொடங்கி தொடர் சீர் 'தேமா' ஆனாலும் 'நேர்—நேர்' காய்—காய்' என்பதில் நிற்பதறியவும். இவ்வெண்பாவின் மற்றொரு சிறப்பு இது இன்னிசை வெண்பா வகையைச் சேர்ந்தது. அதிலும் 'அஞ்சனம்', 'நெஞ்சமோ', 'கொஞ்சுதற்', 'பஞ்சனை' என எதுகை — பொழிப்பெதுகை கொண்டது. ஒரு பொருளை, உணர்வுச் சூழலை, உணர்த்தும் ஒரு விகற்பம் என்ற இலக்கணத்

தில் அடங்கியவை என்பதையும் அறியவும், 'இந்த விகற்பம் என்பதை எதுகை அமைப்பு. இவற்றில் ஓரெதுகை, ஈரெதுகை, பல எதுகை என்பார் பெரும்புலவர் மதுரை இளங்குமரனார்.

அடுத்து ''காய் முன் நேர்'' வர இயற்றும் வெண்சீர் வெண்டளை வெண்பா காய் என்பது தேமாங்சாய், புளிமாங் காய், கருவிளங்காய், கூவிளங்காய் ஆகிய நான்கையும் குறிக்கும்.

## 85. செய்யுள்

''புண்படுத்தா ஆற்றல் புனைதலில் மற்றவர்
கண்கொளா ஈர்ப்பு கருத்தென—பின்பற்றப்
பாராட்டத் தக்கதன் பண்புடைமை கொண்டொழுகல்
நீரோட்ட முள்ள நினைப்பு''

(தொ. ஐ. வெ.494)

—புரட்சிதாசன்

புண்படுத்தா — கூவிளங்காய்—நேர் நிரை நேர்
கண்கொளா — கூவிளம்;கண்கொளா என்பதைக்
கண்கொள்ளா — என்று விரித்தால் தேமாங்காய் என்ற சீர் வரும்
பாராட்ட — தேமாங்காய்—நேர் நேர் நேர்
நீரோட்ட — தேமாங்காய்—நேர் நேர் நேர்
மாச்சீரில் — தேமா —நேர் நேர்
புளிமா —நிரை நேர்

மாமுன் நிரைக்கு புளிமாச்சீரும், விளச்சீரில், விளமுன் நேருக்கும், காய்முன் நேருக்கும், மாச்சீரில் தேமாவும், காய்ச் சீரில் தேமாங்காயும், விளச்சீரில் கூவிளங்காயும் வரும்.

மேற்கண்ட வெண்பாவில், 'புண்படுத்தா, கண்கொளா, பாராட்ட, நீரோட்ட என்றவை முறையே கூவிளங்காய், கூவிளம், தேமாங்காய், தேமாங்காய்—என்ற காய் முன்,

ஆற்றல் — தேமா —நேர் நேர்
ஈர்ப்பு — தேமா —நேர் நேர்
தக்கதன் — கூவிளம் —நேர் நிரை
முள்ள — தேமா —நேர் நேர்

என 'நேர்' வந்திருப்பதறியவும்,

''மூவடி முக்கால் வெள்ளையின் மொழிப''

எனவாக நான்கு சீர், மேற்கண்ட 'மா முன் நிரை' 'விள முன் நேர்' 'காய் முன் நேர்' என ஒழுங்குபட்ட ஒரு வரித் தொடர்

ஓர் அடி எனவும், கடைச்சீர் மூன்று கொண்டதே முக்கால் எனவும் கொள்ளப்பட்டது.

கொண்ட சீர், தொடர் சீர் என்பதை ஒன்று, இரண்டு எனக் கொண்டால் மூன்றாவது சீரில் மோனை இலக்கணம் கொண்டால் செப்பலோசை. அழகு, நயம் புலப்படும். அதாவது,

| கொண்டசீர் | தொடர்சீர் | மூன்றாம்சீர் |
|---|---|---|
| ஆடும் | விழிபுருவம் | அம்முகம் |
| 1 | 2 | 3 |
| கூடும் | கழுத்தசைவும் | கொங்கை புயம் |
| 1 | 2 | 3 |

மேற்கண்ட அடிகளில் மா முன் நிரையும், விள முன் நேரும் ஆக வெண்பாச்சீர் வந்திருப்பதறியவும். அத்துடன் மூன்றாம் சீரில் மோனை வருவதறியவும். மற்ற தமிழ்ப்பாக்களைவிட எல்லா வெண்பாக்களுக்கும் 'இன்ன' சீர் தொடங்கினால் இந்தச் சீர் தொடங்க வேண்டுமென்பது சிறப்புக் கட்டளை, 'ப்', 'க்' போன்ற ஒற்றுச் சொற்களை நீக்கி அசைச்சீர்களான குறில், நெடில், தொகுப்புச் சீர்க் கணக்கெடுத்து, இயற்சீர், வெண்சீர், எண்எழுத்து, எத்தனை வந்து அடங்கியது என்பதைக் கூடத் தெளிவாகச் சொல்ல முடியும்.

சந்தங்களுக்குக் கட்டுப்பட்ட இசைப்பனுவலே வெண்பா, நின்ற சீர் கடைச் சொல்லாகக் குவிந்த ஒரு குறிலும், அதை அடுத்துத் தொடரும், சீரின் முதல் எழுத்து; உயிர்ச் சொல்லாக அ,ஆ,இ,ஈ,உ,ஊ,எ,ஏ,ஐ,ஒ,ஓ,ஔ என்ற பன்னிரண்டில் ஏதாவதொன்று வருமாயின் அந்த இரண்டு சீர்கள் உணர்த்தும் பொருள் கு,சு,டு,து,பு,று எழுத்து வந்து அது மறைவதன் வாயிலாக மாறுபடும்.

விளங்கக் கூறுமிடத்து 'அழகு அதற்கே' என்பவற்றிற்கு சீர் ஒழுங்கில் மா முன் நிரை வந்தமை காண்க. ஆனால் அதே பொருளை 'அழகதற்கே' என்று கொண்டால் இரு சீர் வர வேண்டிய இடம் ஒரு சீராக, அதாவது கருவிளங்காய் என்ற சீராக வந்ததன்றி, மேற்கண்ட 'அழகு அதற்கே' என்ற சொற்றொடர் இடையிலுள்ள 'கு'வும், 'அ'வும் மறைந்து, 'க'கரம் தலைப்பட்டு பொருளையும் செம்மைப்படுத்தி விடுகிறது. பொருள் ஒத்தனவாக அமைந்தால் அதையே, அழகே, அதற்கே என்று விரித்தால் இலக்கணப் பிழையற்றதாகி விடும்.

இந்த இலக்கணங்களில் எல்லாம் தேறியவர்களே கலித்தொகைப் புலவர்கள், பரிபாடற் புலவர்கள், திணைமாலைப்

புலவர்கள், திருவள்ளுவப் பெருந்தகை ஆகியோர். களப்பிரர் காலந்தொட்ட நாலடியார்வெண்பா. ஒன்பதாம் நூற்றாண்டு ஐயனாரிதனாரின் புறப்பொருள் வெண்பா மாலை, 10ல் அறிவனாரின் பஞ்சமரபு. 12ல் சிற்றிலக்கண வெண்பா, நேமினாதம், தண்டியலங்காரம், வெண்பாப்பா பாடுவதில் பிழை கண்டால்,

''இரண்டொன்றா முடிந்து தலையிறங்கப்
போட்டு வெட்டு தற்கோ''

என்ற பாடல் பெற்ற பன்னிரண்டாம் நூற்றாண்டு ஒட்டக் கூத்தர், 13ல் வெண்பாப்புலி நளவெண்பா புகழேந்தி 15ல் சிலேடைப் புலவர் கவிகாளமேகம், பிள்ளைப்பாண்டி, பெருந் தேவனார் முதலானவர்கள் அந்த வெண்பா இலக்கணம் காண் பதில் அரணாக நின்றனர்.

பாவும் அதன் இனங்களுமாக; குறள் வெண்பா, நேரிசைச் சிந்தியல் வெண்பா, இன்னிசைச் சிந்தியல் வெண்பா, அளவியல் வெண்பாவான நேரிசை வெண்பா, இன்னிசை வெண்பா மற்றும் நேரிசை பஃறொடை வெண்பா, நேரிசைக் கலிவெண்பா, இன்னிசைக் கலிவெண்பா, நேரிசையாசிரியம், இணைக் குறள் ஆசிரியம், நிலைமண்டில ஆசிரியம், அடிமறிமண்டில ஆசிரியம், கொச்சகக் கலிப்பா, கட்டளைக் கலிப்பா, கலித்தாழிசை, குறளடி வஞ்சிப்பா எனப் பதினெட்டும் அவற்றின் இனமான குறள் வெண்செந்துறை, ஆசிரிய விருத்தம், கலித்துறை, கட்டளைக் கலித்துறை, கலிவிருத்தம், வஞ்சித்தாழிசை, வஞ்சித்துறை, வஞ்சி விருத்தம் என எட்டு வகையும் ஆக 26-ம் இன்னும் பலவும் வழக்கியல்,

''யாப்பினும் பொருளினும்
வேற்றுமை யுடையது''

(தொல்—செய் : 452)

என்பனவாக விரிந்த இலக்கணமாக் வகைப்படுத்திய இசை, தாழிசை, துறை, விருத்தம் அதன் புறனடையாகக் கும்மி வகை யில், ஞானக் கும்மி, வாலைக் கும்மி, சிந்து வகையில் வளையல், சேவல், ஏற்றம், குள்ளத்தாரா, புறா, கொலை, ஏசல், தாலாட்டு, ஒப்பாரி, உடுக்கை, கிளிக்கண்ணி, இலாவணி, எக்காளம், பலசரக்கு. ஏலப் பாட்டு எனப் பலப் பலப் பெயர்த் தலைப்புகளில் ஆங்காங்கு மக்கள் நடைமுறைக் கண்டுபிடிப்பு களில் வளர்ந்தோங்கி வருகின்றன.

வெண்பா இலக்கணச் சீர்கள்,அவ்வகை இயற்சீர் வெண்சீர்த் தளைகள், அதன் மேற்கோள் அறிந்த வண்ணம் அதன் வகை கூறு

மிடத்து, குறிப்பாக இரண்டடியே வெண்பாவின் சிறுமை, அவ்வகையே திருக்குறள். அதன் சிறப்பு பற்றிப் பின்னர் விரிவாகக் கூறுவோம்.

மூன்று அடிகள் கொண்டது, அதாவது 1 அடிக்கு நான்கு சீர்களென இரண்டடிக்கு வெண்பாச்சீர் இலக்கணம் தவறாமல் நான்கு சீர், மூன்றாவது வரியில் மூன்று சீர், ஆக 11-சீர்கள் கொண்டவை மூன்றடிச் சிந்தியல் வெண்பா.

மேற்கோள் சிந்தியல் வெண்பா:

## 86. செய்யுள்

**''கைகால் நளிநயம் காட்டி இயற்கைவளம்**
**மெய்ப்பித் தசைப்பாடி மீட்டுமிசைத் தையலாள்**
**பொய்யா மரபுவழிப் பூ''**

—புரட்சிதாசன்

மா முன் நிரையாக வந்த ஒழுங்கினில் முதல் மூன்று; கை, மெய், பொய் என்ற அடி எதுகை வந்ததறியவும். கடைசிச் சீர் 'நாள்' என்ற வெண்பாவிற்குரிய சிறப்புச் சீரில் 'பூ' என்று முடிந்ததறியவும்.

அவ்வாறே,

## 87. செய்யுள்

**''தலை, முகம், கண், கால், தளம், இடை, பாதம்,**
**முலை, முகம், தோள், கை முனைந்த கலையில்**
**அலை நடம் அங்கத்தின் ஆர்ப்பு''**

—புரட்சிதாசன்

விள முன் நேராக வந்த ஒழுங்கினில், தலை, முலை, அலை என்ற அடி எதுகையுடன் கடைச் சீர் 'காசு' என்ற இலக்கணத்தில் 'ஆர்ப்பு' என வந்ததறிக.

அடுத்து, நான்கடியாக அளவியல் வெண்பா:

## 88. செய்யுள்

**''முப்பத் திரண்டு முழுவுறுப்பாம் ஆடல்நயம்**
**ஒப்ப வகைபிரித் தோதினும்—தப்பாதே**
**எல்லா உறுப்பும் இயங்கும் உடலன்றிச்**
**சொல்லா தசைவுச் சுழி''**

—புரட்சிதாசன்

மா முன் நிரையாக தேமா—புளிமா ஆகவும், விள முன் நேராகவும்,காய் முன் நேராகவும்,வந்திருப்பதறியவும் ஈரெதுகை யாக 'முப்ப, ஒப்ப, எல்லா, சொல்லா என வந்திருப்பதறியவும்.

விள முன் காயாக (நேர்), மா முன் நிறையாக வந்த நான்கடி அளவியல் வெண்பா; கீழ்க்காணுமாறு :

## 89. செய்யுள்

''புல்லொடு பூண்டாகிப் பூச்சி புழுவாகிச்
சொல்லொலி யாகும் துலக்கத்தில்—பல்குரலாய்க்
காட்டுப் பறவை கடுவிலங்கு மற்றன
கூட்டி மனிதன் குரல்''

—புரட்சிதாசன்

'புல்லொடு பூண்டாகி' என்பது விள முன் காய்
'பூச்சி புழுவாகி' என்பது மா முன் நிரை

ஐந்தடி முதல் பன்னிரண்டடி வரை மிகுந்து வருவது பஃறொடை வெண்பா. அதனில் மிகுந்து வருவது கலிவெண்பா.

ஏழு அடியாகப் பஃறொடை வெண்பா என்பது,

அளவில்லாததென வரிகள் நான்கிற்கு மேல், ஆனால் மாமுன் நிறை, விளமுன் காய், காய் முன் நேர் என்ற வெண்பா இலக்கணம் தவறாமல் வந்திருக்கும் பஃறொடை வெண்பா, கடைச்சீர் 'பிறப்பு' என்பதற்கு 'திளைத்து' என வந்ததையும் கீழ்க்காணுமாறு கூர்ந்து அறியவும்.

## 90. செய்யுள்

''பொன்னணி பூட்டிப் புனைந்தநற் கச்சையில்
இன்முகக் கொங்கை இறுமாந் தெழுந்திருக்க
வெண்முத்துச் செவ்வாய் விரிந்த புருவத்துப்
பெண்மகள் அந்தப் பிறைமகள் ஆடற்குப்
பண்ணிசை கொண்ட யாழ்ப் பாணனோ பாடினான்
கண்குளிர் காட்சி கவர்ச்சி உணர்ச்சியில்
தென்னவன் நின்றான் திளைத்து''

—புரட்சிதாசன்

மேற்கண்ட ஏழுவரிப் பஃறொடை வெண்பாவில் மாமுன் நிரை, விளமுன் நேர், காய்முன் நேர், என வெண்பா இலக்கணம் பிறழாமல் பின்பற்றப்பட்டிருப்பதறியவும்,

| | | |
|---|---|---|
| பொன்னணி பூட்டி | — | விளமுன் நேர் |
| பூட்டி புனைந்தநற் | — | மாமுன் நிரை |
| புனைந்தநற் கச்சையில் | — | விளமுன் நேர் |
| கச்சையில் இன்முகக் | — | விளமுன் நேர் |
| இன்முகக் கொங்கை | — | விளமுன் நேர் |
| கொங்கை இறுமாந் | — | மா முன் நிரை |
| இறுமாந் தெழுத்திருக்க | — | மா முன் நிரை |
| எழுந்திருக்க வெண்முத்து | — | காய் முன் நேர் |
| வெண்முத்துச் செவ்வாய் | — | காய் முன் நேர் |
| செவ்வாய் விரிந்த | — | மா முன் நிரை |
| விரிந்த புருவத்து | — | மா முன் நிரை |
| புருவத்து பெண்மகள் | — | காய் முன் நேர் |
| பெண்மகள் அந்த | — | விளமுன் நேர் |
| அந்தப் பிறைமகள் | — | மா முன் நிரை |
| பிறைமகள் ஆடற்கு | — | விளமுன் நேர் |
| ஆடற்குப் பண்ணிசை | — | காய்முன் நேர் |
| பண்ணிசை கொண்டயாழ் | — | விளமுன் நேர் |
| கொண்ட யாழ்ப்பாணனோ | — | விளமுன் நேர் |
| பாணனோ பாடினான் | — | விளமுன் நேர் |
| பாடினான் கண்குளிர் | — | விளமுன் நேர் |
| கண்குளிர் காட்சி | — | விளமுன் நேர் |
| காட்சி கவர்ச்சி | — | மா முன் நிரை |
| கவர்ச்சி உணர்ச்சியில் | — | மா முன் நிரை |
| உணர்ச்சியில் தென்னவன் | — | விளமுன் நேர் |
| தென்னவன் நின்றான் | — | விளமுன் நேர் |
| நின்றான் திளைத்து | — | மாமுன் நிரை |
| திளைத்து | — | பிறப்பு |

---

## இன்னிசை வெண்பா

அளவியல் வெண்பாவிற்கும், இன்னிசை வெண்பாவிற்கும் ஓரிரு மாறுபாடுகள். ஆனால், வெண்பாச்சீர் இலக்கணம் பின் பற்றப்படும். நான்கு சீர்களுடைய முதல்வரி தொடங்கி இரண்டாம் வரியில் மூன்று சீர்கள் வரை வந்து அதன் கடைச் சீருக்கு முன் கோடிட்டுப் பொருள், சீர், எதுகை, பிரிக்கவோ அல்லது மற்ற இரண்டு அடிக்கும் ஒரெதுகை கொண்டு முடிக்க வோ, கொள்ளும் மேற்கண்ட வெண்பாவின் இலக்கணத் தோற்றம், இன்னிசை வெண்பாவிற்கு வராது.

## அளவியலில் மேற்கோள் இன்னிசை வெண்பா

### 91. செய்யுள்

''தனக்கொன் றமைதற்குத் தன்னுடல் கோணி
மனக்கண் திறந்துசொல்லி மன்னனை நாடிப்
பிணங்குவாள் இல்லப் பிறைப்பெண் தலைவன்
இணங்குவான் ஆங்கே இசைந்து''

—புரட்சிதாசன்

மா முன் நிரை வந்த அடிகள் இரண்டும் விளமுன் நேர்வந்த அடிகள் இரண்டும் ஒரு விகற்பமாகவும் 'ன' 'கர' 'ண' காரத்தில் இரு விகற்பமாகவும் வந்ததறிக.

**விளக்கம்**

| | | |
|---|---|---|
| தனக்கொன் | — | றமைதற்கு |
| புளிமா | — | புளிமாங்காய் |
| மனக்கண் | — | திறந்துசொல்லி |
| புளிமா | — | கருவிளங்காய் |
| பிணங்குவான் | — | இல்லப் |
| கருவிளம் | — | தேமா |
| இணங்குவான் | — | ஆங்கே |
| கருவிளம் | — | தேமா |

மேற்கண்டவாறு தொடர்ந்து விளக்கப்பட்டு வந்த வெண்பாச் சுருக்கம்— ஆங்காங்கு சீர், தளை, அடிகொண்டு அதன் வகையும் கூறப்பட்டன. ஆனால் வெண்பா, குறள் வெண்பாவிலிருந்து அடிப்படை இலக்கண இலக்கியமாக வரம்பு படுத்திக் கூறுவதை கீழ்க்காணுமாறு அறியவும்.

# 3. இலக்கண இலக்கியம்

## வெண்பா

### (அதன் இனமும் வகையும்)

### 92. செய்யுள்

''மாமுன் நிரையும் மரவிளமுன் காய்வந்து
காய்முன்னே நேரும் கணக்கிடும்—பாவகையில்
தாழிசை அத்துறை சார்ந்தபல விருத்தம்
ஏழிசையில் வெண்பா இயல்''

—புரட்சிதாசன்

## 1. குறள் வெண்பா

### 93. செய்யுள்

"விழுமிய ஆய்வுரை வேண்டும் குழுமியவர்
சொற்பொழிவில் கொள்வார் துடிப்பு"

—புரட்சிதாசன்

## 2. குறள் வெண்பா

### 94. செய்யுள்

"ஒட்டுவார் ஒட்டி உடனிருப்பார் வேண்டாதார்
விட்டகன்று போவார் விரைந்து"

—புரட்சிதாசன்

மேற்கண்ட இரண்டடிக் குறள் வெண்பாவில் முதற்பா ஒரு விகற்பமும், இரண்டாவது பா ஒரு விகற்பமும் பெற்ற தறியவும். இங்கே விகற்பமெனக் கூறுவது அடியின் முதற்சீர் இரண்டாமெழுத்து ஒன்றிவரும் ஓசை வேறுபடுவதாகும்.

| | |
|---|---|
| இரு விகற்பம் | 1. விழுமிய |
| (இரண்டெதுகை) | 2. சொற்பொழிவு |
| ஒரு விகற்பம் | 1. ஒட்டுவார் |
| (ஓரெதுகை) | 1. விட்டகன்று |

## நேரிசை வெண்பா

"குறட்பா இரண்டடி நால்வகைத் தொடையால்
முதற்பா தனிச்சொல்லில் அடிமூஉ யிரண்டு
விகற்பின் நடப்பன நேரிசை வெண்பா"

என்றார் அவிநயனார்.

"இரண்டாமடியின் சீரொரூஉ வெழுதி
முரண்ட வெதுகை யதாயினு மாகா
திரண்டு துனியா விடைநனி போழ்ந்து
நிரந்தடி நான்கின நேரிசை வெண்பா"

என்றார் காக்கை பாடினியார்.

அவ்வழியே வெண்பாவிற்குரிய செப்பலோசை நழுவாது குறள் வெண்பா, இரண்டடியும் ஒன்றாக ஒரு பொருட்டொடர் விளக்கி—ஒரு விகற்பமாய் அமைத்து தனிச்சொல் பெற்று,

மற்றொரு விகற்பமாய் அத்துடன் இரண்டடி பெற்று மொத்தம் நான்சடியாகி முடிவது'இரு குறணேரிசை வெண்பா' எனட்டும் அதுவே வெண்பா எனப் பெயர் பெறும்.

## 1. நேரிசை வெண்பா

### 95. செய்யுள்

''தெளிவு பிறக்காத சிற்றறிவார் ஆய்வு
நலிவு புலமையும் நஞ்சே—இழிவு
பொலிவு நிறையறிவு போற்றும் புரட்சி
வலிவு மிகக்கொண்ட வார்ப்பு''

—புரட்சிதாசன்

மாமுன் நிரை என்ற இயற்சீர் வெண்டளையில் துவங்கிய இந்த வெண்பா செப்பலோசை வழுவாது ஒரு விகற்பத்தால் அதாவது தெளிவு, நலிவு, பொலிவு, வலிவு, என ஒரு பொருள் மறுத்து மறுபொருள் உயர்த்தும் இருகுறளோசை வெண்பா.

## 2. நேரிசை வெண்பா

### 96. செய்யுள்

''படையாழி கொண்டு பகைவரை வென்ற
கொடையாழி மன்னரும் மாண்டார்—அடலேறும்
செந்நீர்ப் புறப்போரில் திண்தோள் வடுப்பட்டுப்
புண்நீரில் போனார் புதைந்து''

—புரட்சிதாசன்

இது செப்பலோசை வழுவாது இருவிகற்பத்தால், அதாவது படையாழி, கொடையாழி, அடலேறு, என்றும் செந்நீர், புண்நீர் என்றும், ஒரு பொருளில் இரு வேந்தர் மறைவு உணர்த்தும், இருகுறள் நேரிசை வெண்பா.

மேற்கண்ட வெண்பாவின் ஏழாவது சீருக்கும் எட்டாவது சீருக்கும் இடையில் கோடிட்டு உறவு கொண்ட தொடர் தனிச் சொல் அடிமுதற்சீர்க்குறிய எதுகையோடு வரும் இருகுறளடி எனச் சேர்ந்த நேரிசை வெண்பாவிற்கும், நிரையசை வெண்பா விற்கும் இணையாக நிற்பது; சொற்றொடர், பொருட்றொடர் இணைப்பதிலும் பங்காற்றுகிறது. இணைப்பதிலும் பிணைப் பதிலும் முதற்குறள் இறுதியில் ஒன்றிரண்டு அசைகள் இடையில் வருமானால் 'ஆசிடை' எனவும் அது பெயர் பெறும். இதில் 'மாண்டார்' என்பதில் 'ஆர்' என ஓர் ஆசு [வந்துளது. ஆதலால் இது ஆசிடை வெண்பா ஆகும். மாண்டு + ஆர் = மாண்டார்.

## 3. நேரிசை வெண்பா

### 97. செய்யுள்

''வண்டுலா முல்லை வடிவழகி காயாம்பு
கொண்டசர மாலைக் குறிப்புணர்த்தக்—கொண்டவனாய்
ஆயன் எருதுகட்டில் அவ்வெற்றி கண்டவளாய்
நேயம் முதிர்ந்தாள் நினைத்து''

—புரட்சிதாசன்

'விளமுன் நேர்' என வெண்சீர் வெண்டளையில் துவங்கிய இந்த வெண்பா இருவிகற்பத்தால் வந்தது.

குறிப்பு—உணர்த்த என இரண்டு ஆசிடை வந்த நேரிசை வெண்பா. குறிப்பு + உணர்த்த = குறிப்புணர்த்த.

வண்டுலா, கொண்டசர, என ஒன்றும். ஆயன், நேயம் என ஒன்றும் ஆக இருவிகற்பமும், நாள், காசு, மலர், பிறப்பு என்ற வாய்ப்பாட்டில் 'பிறப்பு' என 'நினைத்து' என்ற கடைசிச் சீரில் முடிந்ததறியவும்.

குறிப்பு என்பது பிறப்பு வாய்ப்பாடு. அதனுடன் 'உணர்த்த' என ஈரசைகள் வந்தமையால் 'ஆசிடை' ஆயின.

## 4. நேரிசை வெண்பா

### 98 செய்யுள்

''கன்று பசுக்காம்பைக் கண்டுமுட்டி வாய்வைத்து
நின்றுதப்பப் பால்சுரக்க நேரிழையாள்—கண்டுணர்ந்(து)
அன்று தனதுமுலை ஆயன்மகன் செல்வனுக்(கு)
என்றிருந்த தெண்ணினாள் ஈர்த்து''

—புரட்சிதாசன்

இது; கன்று, நின்று, அன்று, என்று என்ற ஒரு விகற்பத்தால், ஒருகாட்சிப்பொருள் விளக்கிய நேரிசை வெண்பா. வெண்பாவின் கடைசிச்சீர் என நேர் நேர்'(ஈர்த்து) என்பதில் முடிந்ததறியவும். நேரிசை என்பதில், நேர் என்பது நாள் வாய்ப்பாடு. அதனுடன் இழை (நேரிசை) என ஓரசை வந்ததால் இதுவும் 'ஆசிடை' ஆயிற்று. நேர் + இழை = நேரிழை.

''கூறியது கூறினும் குற்றமில்லை
வேறொரு பொருளை விளக்குமாயின்''

என்றவாறு மேற்கண்டவற்றிற்கு இலக்கணம் கூறுமிடத்து,

"தத்தம் பாவினத் தொப்பினும் குறையினும்
ஒன்றொன் றொவ்வா வேற்றுமை வகையாற்
பாத்த வண்ண மேலா வாயிற்
பண்போல் விகற்பம் பாவினத்தாகும்"

என்றார் அவிநயனார்.

பாவினங்களில் அதனதற்கென சீர், தளை, உறுப்புகளிருக்கின்றன. அவை அவற்றோடு ஒத்து வந்தாலும், வராதமைந்தாலும், குறைந்தாலும், கூடினாலும், அந்த வேற்றுமை வகையில் இசையும், பாவும் கலந்த பண்ணாக அதனதற்குள் மாறுதல் பெறும்.

"ஒன்றும் பலவும் விகற்பொடு நான்கடியாய்த்தனிச்சொல்
இன்றி நடப்பின் அஃது இன்னிசை"—(25)

என்றார் யாப்பருங்கலக் காரிகை ஆசிரியர் அமுதசாகரர்.

வெண்பாவிற்குரிய இலக்கணத்தில் ஒரு விகற்பம்,—(வேற்றுமை) இருவிகற்பம், பல விகற்பமானாலும், தனிச்சொல் இல்லாமல் நான்கடியில், அதாவது, மூன்றே முக்கால் அடியில் முடிவது இன்னிசை வெண்பா. இந்த வெண்பா வகையில் வரும் பல இலக்கண விளக்க வெண்பாக்களை கீழ்காணுமாறு அறியவும்.

## 1. இன்னிசை வெண்பா

### 99. செய்யுள்

"பெண்மையின் தன்மை பெருந்தோற்றம் இவ்வைய
உண்மையின் தன்மை உயிர்ப்பிறப் பவ்வழியே
மண்ணின் இளமை மரமும் மகப்பேறும்
எண்ணின் முழுமை இயல்பு"

—புரட்சிதாசன்

இவை வெண்சீர் வெண்டளை வெண்பாவாக நான்கடியாக, தனிச்சொல் இல்லாது, 'பெண்மை, உண்மை, மண்ணின், எண்ணின் என்ற ஒருவிகற்ப எதுகை நான்கு பெற்று வந்த இன்னிசை வெண்பா.

## 2. இன்னிசை வெண்பா

### 100. செய்யுள்

''மாளிகை மஞ்சம் மனைமக்கள் சுற்றமும்
வாணிகம் அவ்வழி வாரிபோற் செல்வமெல்லாம்
தூங்குகையில் வாங்கும் சுழிமூச்சு நின்றுவிட்டால்
சொந்தமின்றிப் போகும் சுமை''

—புரட்சிதாசன்

இது, 'ஒன்றல்ல வெல்லாம் பல' எனவாக வெண்பா இலக்கணத்தில் நான்கடியாகத் தனிச் சொல்லின்றி 'மாளிகை, வாணிகம், தூங்குகையில், சொந்தமின்றி' எனப் பல விகற்பத்தில் (வேற்றுமையில்) வந்த இன்னிசை வெண்பா.

## 3. இன்னிசை வெண்பா

### 101. செய்யுள்

''பெற்றோம் எனத்தந்தை பிள்ளைக் குடன்படுவான்
உற்ற மகனோ உருத்தெனச்—சற்றேனும்
தந்தை துயரைத்தான் தீர்த்தல் அரிதென்ப
வாழையடி வாழை வழக்கு''

—புரட்சிதாசன்

இரண்டாமடியில் நான்காவது சீர் தனிச்சொல் பெற்று, மூன்று வேற்றுமையாக, பெற்றோம், தந்தை, வாழையடி என வந்த இன்னிசை வெண்பா. மூன்றாவதடி, நான்காவதடியிலும் தனிச் சொல் பெற்று பல வேற்றுமையாலும் வருவதுண்டு.

## 4. இன்னிசை வெண்பா

### 102. செய்யுள்

''பெண்இன்றி எப்பிறப்பும் இல்லை மழை தாங்கும்
மண்இன்றி நெற்பயிரும் இல்லை அறிவெனும்
கண்இன்றி நற்புலமை இல்லை கவிதையுள்ள
பண்இன்றி பாட்டேதும் இல்''

—புரட்சிதாசன்

இது அடிதோறும் தனிச்சொல் பெற்று வந்த இன்னிசை வெண்பா. மேற்கண்ட வெண்பாவில் அடிதோறும் மூன்றாம் சீரில் 'இல்லை', இல்லை, இல்லை இல், என வருவன போன்ற சிறப்புத் தொடையே 'ஒரூஉத்' என்பதறியவும். நான்குசீர் கொண்ட ஒரு அடியில் முதற்சீரிலும், நான்காவது சீரிலும் வரும் மோனை, இயைபு, எதுகை முதலானவை கொண்டே 'ஒரூஉத்' தொகை இலக்கணம்.

## 5. இன்னிசை வெண்பா

### 103. செய்யுள்

''மழைவளம் கொள்ள மரம்நடுக—நட்டுத்
தழைவளம் கொள்ளத் தளிர் நடுக—கட்டி
நீர்த் தேக்கம் கொள்க நிலமுழுது—கொட்டும்
நெல்மணி கொள்க நிமிர்ந்து''

—புரட்சிதாசன்

இது, இருகுறளென இயற்சீர் வெண்சீரில் அடிமூன்றிலும், தனிச்சொல் பெற்று, மூன்று வேற்றுமை, அதாவது; 'மழை வளம், நீர்த்தேக்கம், நெல்மணி,' எனவாக வந்த இன்னிசை வெண்பா.

''தனிச் சொல் தழுவல் ஆகி, விகற்பம் பலப்பல
தோன்றினும், ஒன்றே வரினும் இதன் பெயர் இன்னிசை''

என்றார் காக்கை பாடினியார்.

இது தனிச் சொல்லின்றியும், அது பெற்றும், ஒரு வேற்றுமை யில், இருவேற்றுமையில் பல வேற்றுமையில் நான்கடி பெற்று வந்த இன்னிசை வெண்பாவாகும்.

## 1. பஃறொடை வெண்பா

### 104. செய்யுள்

''ஒற்றுமை வேண்டுமென ஓங்கு குரல்கொடுப்பார்
மற்றார் தலையாட்டி மாலை அணிவிப்பார்
தொற்று நோய்க்கொள்கை துலங்க மதவாதக்
கற்பிளவை ஓட்டக் கதைபடிப்பார் அன்னவரை
நெற்பதராய்த் தூற்று நிமிர்ந்து''

– புரட்சிதாசன்

இது, ஒரே விகற்பத்தில், 'ஒற்றுமை, மற்றார், தொற்று, நோய், கற்பிளவை, நெற்பதர் என ஐந்தடியாக வந்த பஃறொடை வெண்பா.

## 2. பஃறொடை வெண்பா

### 105. செய்யுள்

''சொல்வதோ எல்லாம் துறையறிவா?—சொல்லியே
செய்வதோ எல்லாம் சிறுமையா?—செய்வதையும்
ஞாயப் படுத்தல் நெறியா?—நெறிதவறிக்
குற்றம் புரிதல் முறையா?—முறை தவறி
மக்களைக் கீழ்மைப் படுத்தலும்—மாண்போ
மணிமுடியும் வீழாதோ மாய்ந்து''

—புரட்சிதாசன்

இது பல வேற்றுமையில், 'சொல்வ, செய்வ, ஞாயம், குற்றம், மக்களை, மணிமுடி என, ஆறு அடியாக வந்த பஃறொடை வெண்பா.

ஆசிரியப் பாக்களுக்குரியசீர், உறுப்புகள் கொண்டு அவைகள் அடிக்கு நான்கு சீர்கள். ஒன்று, இரண்டு, மூன்று என வேறு பாட்டுத் தலைப்புகளிலும், நான்கடியாகப் பல அடிகள் நீண்டு தொடர்வனபோல மேற்கண்ட வெண்பா, அதற்குரிய இலக் கணச்சீர்களுடன் நான்கு அடிக்கு மேல் வரும் வகை; ஐந்து, ஆறு, அடிகள் எனப் பல அடிகள் வந்தாலும் முடிவில் முக்காலடியில் முடிவ பஃறொடை வெண்பா எனப்படும்.

இதனையே,

''தொடையடி யித்துணை யென்னும் வழக்கம்
உடையதை இன்றி உறுப்பழிவு இல்லா
நடையது பஃறொடை''

என்றார் காக்கை பாடினியார்.

''சிவனிய மெய்கண்ட நூல்கள் பதினான்கு வகையில் போற்றி பஃறொடை'' என்ற நூல் நூற்றுத் தொண்ணூறு அடிகளைக் கொண்டு முக்காலடியில் முடிந்த பஃறொடை வெண்பா நூல் என்பது குறிப்பிடத்தக்கது.

## சிந்தியல் வெண்பா

நேரிசை வெண்பாவைப் போல இரண்டாவது அடி முடிவில் தனிச்சொல் பெற்று, ஒரு வேற்றுமை (விகற்பம்) இரு வேற்றுமை பெற்று, மூன்றடிகளில் முடிவது ''நேரிசைச் சிந்தியல் வெண்பா'' தனிச்சொல் இல்லாமல் மேற்கண்ட ஒன்றிரு வேற்றுமை பெற்று மூன்று அடிகளால் வருவது ''இன்னிசைச் சிந்தியல் வெண்பா''

''நேரிசைச் சிந்தும் இன்னிசைச் சிந்தும் என்று
ஈரடி முக்கால் இருவகைப்படுமே''

என்றவாறு, யாப்பருங்கலக் காரிகையும்,

''நேரிசை, இன்னிசை போல நடந்து
அடி மூன்றில் வந்தால்
நேரிசை இன்னிசைச் சிந்தியல் ஆகும்''

—யா. அ 26—1—2

என்றுரைக்கும்.

### 1. நேரிசைச் சிந்தியல் வெண்பா

#### 106. செய்யுள்

''ஆடல் நளிநயம் அதற்கெனப் பாவையர்
பாடல் இசைநயம் பண்முழவு—தேடிவைத்த
கூடலே தென்குமரிக் கோப்பு''

—புரட்சிதாசன்

#### 107. செய்யுள்

2. ''கோட்டைச் சுவரும் கொடிபறந்த கோபுரமும்
பாட்டுத் தமிழும் பலசிறப்பும்—நாட்டியமை
சிந்துவெளிச் சம்பரன் சீர்''

—புரட்சிதாசன்

இவை இரண்டடி தனிச்சொல் பெற்று 'ஆட' 'பாட' 'கூட' 'தேடி' என ஒரு வேற்றுமையிலும், அடுத்து; கோட்டை, பாட்டு; காட்டி, சிந்து என இருவேற்றுமையிலும் வந்த இரண்டே முக்கால் அடி நேரிசைச் சிந்தியல் வெண்பாக்கள்.

## 1. இன்னிசைச் சிந்தியல் வெண்பா

### 108. செய்யுள்

''சீதக் கமலத்தில் தேனெடுக்கும் வண்டுகளை
ஊது குழற்குயில்கள் ஓட்டிவிட ஆயன்மகள்
தாதுள்ள பூக்கொய்தாள் சார்ந்து''

—புரட்சிதாசன்

இது தனிச்சொல் இன்றி சீத, ஊது, தாது என்ற ஒரே வேற்றுமையில் வந்த ''இன்னிசைச் சிந்தியல் வெண்பா''

## 2. இன்னிசைச் சிந்தியல் வெண்பா

### 109. செய்யுள்

1. ''வையைப் பரிபாடற் தையலார் மெய்ந் நனையச்
சாந்துக் குழம்பு தடவிப் புனலில்
கலங்கொண்டு நீந்தினார் காண்''

—புரட்சிதாசன்

### 110. செய்யுள்

2. ''செல்வரெனப் பெற்றார் செழித்து விளங்கியதால்
வள்ளலெனப் பேர்பெற்றார் வாரி வழங்கியதால்
பொல்லார் வடுப்பெற்றார் புதைந்து''

—புரட்சிதாசன்

முதற்பாடல் தனிச்சொல் இல்லாது வையை,சாந்து,கலம் என பல வேற்றுமையுடனும் இரண்டாவது பாடல் செல், வள், பொல் என, தனிச்சொல் இல்லாது ஒரு வேற்றுமையுடனும் வந்த இன்னிசைச் சிந்தியல் வெண்பாக்கள்.

மேற்கண்டு சொல்லப்பட்ட வெண்பா வகையை கூறுமிடத்து

### 111. செய்யுள்

''ஓரடி முக்கால் ஒழுங்கே குறள் வெண்பா
ஈரடி முக்கால் இசைசிந்து—மூவடி
முக்காலே நேரிசை முன்னான் கெனவடி
பஃறொடை வெண்பா பல''

—புரட்சிதாசன்

$3 \times 4 = 12$—அடிகள் ஒன்றே முக்கால் அடி, ஏழுசீர்கள் கொண்டவை குறள் வெண்பா.

இரண்டே முக்கால் அடி; பதிமூன்று சீர்கள் கொண்டவை ''இன்னிசைச் சிந்தியல் வெண்பா''

மூன்றே முக்கால் அடி; பதினைந்து சீர்கள் கொண்டவை ''நேரிசை இன்னிசை வெண்பா''

இந்த மூன்று வகை தவிர, பல அடிகள் கொண்டு வருவது ''பஃறொடை வெண்பா''

மேற்கண்ட வெண்பாவின் இலக்கணச் சீர்கள், செப்பலோசை நழுவாதிருக்க அலகிட்டுச் சீர் ஒழுங்கு வரிசை சொல்லி வெண்பாவியற்றுதல் சிறப்பு, நயம்.

'வகையுளி' என்ற சொற் பிரிப்பு, நாம் கொண்ட பொருள் விளக்குதல் பொருட்டு, மற்றொரு சீரில் அது, தொடர்வதைத் தவிர்க்க முடியும்.

பாவேந்தர் பாரதிதாசனாரின் மணிமேகலை வெண்பா, பெரும்பாலும் வகையுளி இலக்கணத்தில் கொள்ளப்பட்டது. என்பதையும் இங்கு குறிப்பிடுகிறேன்.

| | |
|---|---|
| நீண்ட சீர்களான; | (முச்சீர்) |
| தேமாங்காய் | புளிமாங்காய் |
| கருவிளங்காய் | கூவிளங்காய் |

எனப் பெரும்பாலும் அதிகமாக வரும் சீர்கள் உள்ள வெண்பாவின் இறுதிச் சீர் 'நாள்' என்று முடிவதிலும், இருசீரான கருவிளம், கூவிளம் அதிகமாக வரும் சீர்கள் உள்ள வெண்பாவின் இறுதிச்சீர் 'காசு' என்று முடிவதிலும், நேரசை, நிரையசை என நேர் தேமா, நிரை நேர் புளிமா அதிகமாக வரும் வெண்பாவின் இறுதிச்சீர் மலர், பிறப்பு, என்று முடிவதிலும் சிறப்பு.

## 1. குறள்

### 112. செய்யுள்

''பாமணக்கு வெண்பாவில் பண்ணிசைத்துப் பாடுதலால்
வாய்மணக்கும் தேன்மணக்கு வா''

– புரட்சிதாசன்

வெண்சீர் வெண்டளையில் மூச்சீரான காய்ச்சீர் ஆறு வந்து முடிவில் 'நாள்' என்ற வாய்ப்பாட்டில் வந்ததறியவும்.

## 2. குறள்

### 113. செய்யுள்

''ஆரிய ஐதிகம் ஆள்வதால் தற்குறி
கூரிய தேற்பதோ கொண்டு''

—புரட்சிதாசன்

விளச்சீரில் கூவிளம் ஆறு வந்து கடைச்சீர் 'காசு' என்ற வாய்ப்பாட்டில் வந்ததறியவும்

## 3. குறள்

### *114* செய்யுள்

1. ''கலையும் இசையும் கருத்தும் சிறப்பும்
தழையும் மொழியே தமிழ்''

—புரட்சிதாசன்

2. ''அதிரும் வெடியாய் அதனில் துடிப்பாய்
முதிரும் அறிவே முனைப்பு''

—புரட்சிதாசன்

மாச்சீரில் புளிமா ஆறு வந்து கடைர்சீர் ''மலர்'' என்ற வாய்ப்பாட்டில் வந்ததறியவும். அடுத்து அவ்வாறே ஆறுசீர் புளிமாவாக வந்து கடைச்சீர் 'பிறப்பு' என்ற வாய்ப்பாட்டில் வந்ததறியவும். தமிழ் (மலர்) முனைப்பு (பிறப்பு)

மேற்கூறிவந்த வெண்பா வரிசையில் அதன் இலக்கணம் பெற்று, வகை பல வந்தாலும் வெண்சீர், இயற்சீர் தளைகள் கொண்ட இரண்டடிக் குறள் வெண்பாவிற்கும் நான்கடிக் குறள் வெண்பாவிற்கும் பொருந்துவனவாகவே 'நாள், காசு மலர், பிறப்பு, வரவேண்டிய அலகிடும் வகை கூறப்பட்ட தறியவும். இரண்டடியோடு மற்றுமிரண்டடி கொண்டால் நான்கடியாக வரும் வெண்பாக்களில் குறளடிகளுக்குக் கூறிய வாறு அலகிட்டு, அந்த வெண்பாச்சீர் அலகிடுமுறை வகைகளும் கொள்ள வேண்டும்.

இன்னிசை சிந்தியல் வெண்பாக்களில் அடிகுறைந்து தனிச் சொல் பெற்று வந்தும், வராமலும் சில வேற்றுமை (விகற்பம்) பல வேற்றுமை என எதுகை, மோனை, குறைந்தும் அடிகள் தொடை சீர் ஒழுங்கிருந்தாலும் செப்பலோசை நயம் குறைந்து வருவதால் இரண்டடிக் குறளுக்கும், நாலடி வெண்பாவிற்கும் கூறிய மேற்கண்ட சிறப்பு இலக்கணம், பிற்பட்டுச் சொல்லிய வகைக்கு வருவது சிறப்பாகக் கொள்ளப்படவில்லை. ஆனாலும் வரலாம். இலக்கியம் கண்டு இலக்கணம் வகுத்த புலவர்களுக்குக் கிடைத்த சான்றுப் பாடல்களில் சிறப்புக்குரியனவற்றையே விரிவாகத் தெளிவுபடுத்தியிருக்கின்றனர்.

## குறள் வெண் செந்துறை

இரண்டடி கொண்ட குறள் வெண்பா இனத்தில் அதன் துறையும், தாழிசையும் கூறுமிடத்து,

''அந்தமில் பாதம் அளவிரண் டொத்து
முடியின் வெள்ளைச் செந்துறை''

என்னும் யாப்பருங்கலக்காரிகை. தம்முள் அளவொத்து இரண்டடியாய் வருவதை வெண்செந்துரை செந்துறை வெள்ளை எனப் பெயர் கொண்டழைத்தனர்.

இதனையே காக்கை பாடினியாரும்

''ஒழுகிய ஓசையில் ஒத்தஅடி இரண்டடி
விழுமிய பொருளது வெண் செந்துறை''

என்றார்,

இந்தக் குறள் வெண்பா வழிவந்த வெண்செந்துறை அடிகள் இரண்டிற்கு எத்தச் சீரும் வரலாம். ஆனால் அடிக்கு நான்கு சீர்கள் என இரண்டடி என்பதைக் கருத்திற் கொள்ள வேண்டும்.

### 1. வெண் செந்துறை

#### *115.* செய்யுள்

**1. கொள்ளும் புதினங்கள் குவலய வளர்ச்சிக்குத்
தெள்ளத் தெளிவான சிறப்பான சான்றுகள்''**

—புரட்சிதாசன்

#### *116.* செய்யுள்

**2. வானம் பொழிந்து வளர்த்துவிடும் பசுமை
ஞாலம் விழிக்கவைக்கும் ஞாயிற்றுக் கொப்பது.'**

—புரட்சிதாசன்

சிறப்பிற்குரிய பெரும்பொருள் விளக்க உறுப்பு அடிகளாக மேற்கண்ட செந்துறை.

## குறட்டாழிசை

சீர் வரம்பின்றியும், அடிகள் மிகுதியாகவும், கடைசியடி குறைந்தும் வழிவனவெல்லாம் குறட்டாழிசையாகும்.

தாழிசைக்குக் குறள் என்பதும், குறட்டாழிசை என்பதும் ஒன்றே.

## 2. குறட்டாழிசை

### 117. செய்யுள்

''சேர்த்து வைத்தது சிதைந்து போனதே
சிதைந்து போனதும் மறைந்து போனதே
நேற்றுப் பார்த்தது நீண்டு போனதே
நீண்டு போனது குறைந்து போனதே
பார்த்துப் பார்த்துக்கண் பூத்துப் போனதே
பழமையும் மறைந்து போனதே''

—புரட்சிதாசன்

## 2. குறட்டாழிசை

### 118. செய்யுள்

1. ''தொல்லைதரும் சூழல் தொடர்ந்தால் ஒருமனிதன்
இல்லை எனப் போதல் இழிவாமோ இல்லை இல்லை''

—புரட்சிதாசன்

### 119. செய்யுள்

2. காடுவெட்டி நிலம்சேர்த்துக் காணிநிலம் வைத்துழன்ற
பாடோ பெரும்பட்டு பயனுண்டோ இல்லை இல்லை''

—புரட்சிதாசன்

மேற்கண்ட செந்துறைக் குறட்டாழிசைக்கு அளவொத்து வராத அடிகள், விழுமிய கருத்தில்லாத தொகுப்புகள்—கொண்டனவற்றைத் தாழிசையில் கொள்வதில் சிதைவுத் தாழிசை என்றார். ஒன்றே முக்கால் அடியில் வரும் குறள் வெண்பாவையும் சந்தம் சிதைந்த தாழிசை என்றார்.

''அந்தடி குறைநவுஞ் செந்துறை சிதைவுஞ்
சந்தழி குறளுந் தாழிசைக் குறளே''

என்னும் யாப்பருங்கலம்.

## 3. குறட்டாழிசை

### 120. செய்யுள்

1. ''மற்றவரைத் தாழ்த்தி மலைஎன நிற்பவரும்
கற்றவர்முன் தூளாவார் காய்ந்து''

### 121. செய்யுள்

2. ''உற்ற துரைக்க உகந்த அறிவில்லார்
பற்றியதோ மூடப் படிப்பு''

—புரட்சிதாசன்

மேற்கண்ட குறள்களில் இரண்டாமடி முக்காலடியாக வருவதாலும், ஒத்த இரண்டடி இல்லாமையாலும், அவை தாழிசையில் சந்தம் குறைந்ததாகச் சிதைந்த தாழிசை என்றார்.

## வெளிவிருத்தம்

''மூன்றடியாலும் முடிந்த அடிதோறும் முடிவிடத்து
தான்தனிச் சொல்பெறும் தண்டா விருத்தம்''

என்னும் யாப்பருங்காரிகை. (28)

வெண்தாழிசை, வெண்டுறை, வெளிவிருத்தமென விளக்கம் கூறுமிடத்து, மூன்று அடிகள் வர வேண்டும், முடிந்த கடைசி அடியில் தனிச்சொல் பெற்று, ஒரு அடிக்கு நான்கு சீர், வெண்பா உரிச்சீரில் வந்து ஐந்தாவது சீராகத் தனிச்சொல் வர வேண்டும். இது வெளிவிருத்தமெனப் பெயர் பெறும்.

இதனையே காக்கைப்பாடினியாரும்,

''ஒருமூன்று, ஒருநான்கு அடிஅடி தோறும்
தனிச்சொல் தழுவி நடப்பது வெள்ளை
விருத்தம் எனப்பெயர் வேண்டப்படுமே''

என்றார்.

மூன்றடி கொண்ட வெளிவிருத்தம் அல்லாது பலசீர் வந்தனவாகத் தனிச்சொல் பெற்று நான்கு அடியிலும் வெளிவிருத்தம் வரும் என்றார்.

## 1. வெளிவிருத்தம்

### 122. செய்யுள்

1. ''தாழம் மடல்வளையில் தங்கநிறம் கொண்டனையா
—நல்ல பாம்பே
2. வேலம் மரப்புதரில் வெள்ளிநிறம் கொண்டனையா
—நல்ல பாம்பே
3. ஆலம் மரக்கிளையில் அண்டங்கருப் பாகினையா
—நல்ல பாம்பே''

—புரட்சிதாசன்

வெண்சீர், இயற்சீர் விரவி வந்த மேற்கண்ட வெளிவிருத்தம் அடிக்கு நான்கு சீர்களாக மூன்று அடிகளும், ''நல்ல பாம்பே'' என்னும் தனிச் சொல் பெற்று வந்த முடிவையும் கொண்டிருப்பதறியவும்.

'நல்ல பாம்பு' என்பதில் நேர் நேர் நேர் நேர் என்ற சீர்க் கணக்கில் பிரித்தால், பூச்சீராக 'தேமாந் தண்பூ' என்று வந்திருப்பதறியவும்.

ஆனால் அது பொதுச் சீரில் கொள்ளப்பட்டுச் சீர் எண்ணிய வழக்கறுபட்டு, இணைத்து, எழுத்தெண்ணிய வகையில் 'தேமாந் தண்பூ' என்பது கூவிளங்காய் என்று வந்த ஒழிபியல் அறியவும், அதாவது ஓசை இறுக்கக் கட்டுப்பாடு ஒலித்ததறியவும்.

## 2. வெளிவிருத்தம்

### 123. செய்யுள்

1. ''பெண்ணைக் கொடுத்தும் பெரும்பொருள் கொடுத்தார்
—முடியாமல்
2. அன்னை வயிற்றில் கருவைச் சிதைத்தார்
—தெளியாமல்
3. தன்னைச் சுமந்த ஒருத்தியை மறந்தார்
—அறியாமல்
4. கண்ணைப் பிசைந்து கதறி அழுதார்
—புரியாமல்''

—புரட்சிதாசன்

இது நான்கடியாக; முடியாமல், தெளியாமல், அறியாமல், புரியாமல் என்னும் தனிச் சொல் பெற்று வந்த வெளிவிருத்தம்.

### வெண்டாழிசை

இது வெள்ளைத் தாழிசை எனவும் பெயர் பெறும்.

''அடியொரு மூன்றுவந்து அந்தஅடி சிந்தாய்
விடினது வெள்ளைத் தாழிசை''

என்னும் யாப்பருங்கலம். (66)

மூன்று அடிகளைக் கொண்டதாய், அவற்றில் இறுதியடி (மூன்றாமடி) முச்சீரடியாக வருவது வெண்டாழிசை என்னும் வெள்ளைத் தாழிசையாம்,

## 1. வெண்டாழிசை

### 124. செய்யுள்

1. சின்னச் சின்ன மழலைகள்
வண்ண வண்ண எழில்வகை
கண்ணில் ஒற்றத் தகும்

2. கையைத் தட்டிச் சிரிப்பதும்
கண்கள் எங்கோ இமைப்பதும்
தையத் தவழ்வதும்

3. தத்தித் தத்தி நடப்பதும்
முத்து வாய்நீர் இழைவதும்
கத்தி அழுவதும்

4. தொட்டில் கொள்ளத் துவள்வதும்
தூங்கும் போது சுழிப்பதும்
கட்டிக் கொள்ளத் தகும்

- புரட்சிதாசன்

மேற்கண்ட வெண்டாழிசை மூன்றடி ஆசிரியத் தளைகளால் வந்தவை.

### ஓரொலி வெண்டுறை

குறைந்த அடிகள் மூன்று. மிகையான அடிகள் ஏழு. இவற்றில் இடைப்பட்ட அடிகள் நான்குசீர், ஐந்துசீர், ஆறுசீர் குறைந்தும் கூடியும், அவ்வாறே அடிகளும் வருவதே வெண்டுறை ஆகும்.

இதனையே,

"அடிஐந்து ஆகியும் மிக்கும் ஈற்றடி
ஒன்றுமிரண்டுஞ் சீர்த்தபின் வெண்டுரை"

என்றார் அவிநயனார்.

## 1. வெண்டுறை

### 125. செய்யுள்

1. "அரசியலில் தலைவர்களாய் அதிகாரம் பெற்றவுடன் பொருளைச் சேர்க்க
2. இரகசியமாய் பலகோடி இருட்டில் வாங்கும்
3. கறைபடிந்த பட்டியலில் கணக்கற்றோர் ஒழிவதென்றோ"

—புரட்சிதாசன்

இது மூன்றடியில் முதலடியில் அறுசீர்களும், கடையடி இரண்டிலும் நான்கு சீர்களும் பெற்று வந்த 'ஒரொலி வெண்டுறை.'

## 2. வெண்டுறை

### 126. செய்யுள்

1. "கோயில்களைப் புதுப்பிக்கக் கொடிகட்டிக் கொண்டவரோ
குருக்கன்—ஆனார்
2. குடியரசாட்சிஎன முடிதறித்துக் கொண்டவரோ அரச ரானார்
3. ஓயாமல் ஒழுங்குநெறி உண்மைஎனக் குரல் கொடுத்தோர்
4. ஒருபயனும் அடையாமல் ஒழிந்தே போனார்"

—புரட்சிதாசன்

இது நான்கடியாக முதலடியிலும், இரண்டாவதடியிலும் ஆறுசீர்கள் பெற்றும்; மூன்றாவது, நான்காவது அடிகளில் நான்கு சீர்கள் பெற்றும் வந்த 'ஒரொலி வெண்டுறை'.

## 3. வெண்டுறை

### 127. செய்யுள்

"முயற்சிஎனத் தோழமையைப் படர விட்டு
பயிற்சிஎன அடிமைகளைப் பயன்படுத்தி
புரட்சிஎன அரசியலில் பொருள்குவித்த
கவர்ச்சிகள் ஒழிவதைக் காணும் நாளே
கயமை ஒழிந்ததெனும் நன்நாள்"

—புரட்சிதாசன்

இது ஐந்து அடிகளாக; நான்கடிகள் நான்கு சீர்கள் கொண்டும், கடைசி அடி மட்டும் மூன்று சீர்கள் வந்த 'ஒரொலி வெண்டுறை.'

## 4. வேற்றொலி வெண்டுறை

"மூன்றடி முதலாக ஏழடி காறும் வந்து
ஈற்றடி சிலசில சீர்தப நிற்பினும்
வேற்றொலி விரவினும் வெண்டுறை"(67)

என்றார் காக்கைபாடினியார்.

இது மூன்றடிகள் முதல் ஏழு அடிகள் வரை வரலாம். அவற்றில் கடை அடிகள் சிலசில சீர்கள் குறைந்த அடிகளாக வருவது 'வேற்றொலி வெண்டுறை' எனப்படும்.

அந்த இலக்கணப் பாடல்களைக் கீழ்க்கண்டவாறு பயின்று கொள்ளவும்.

## 1. வேற்றொலி வெண்டுறை

### 128. செய்யுள்

"பிள்ளையிடம் குறைகண்டால் பிழைஎன்று
திருத்துதற்கோ பெற்றோ ருண்டு
பள்ளியிலே படிப்பிற்குறை மாணவனைத்
திருத்துதற்கோ ஆசான் உண்டு
கொள்ளையிடும் திருடர்களைக் குறிவைத்துப்
பிடிப்பதற்கும் காவல் உண்டு
செல்லாத வழக்கினையும் தீர்த்து வைக்க
—மன்றமுண்டு
பொல்லாத தலைவர்களை புடைத்தெடுக்க
யாரும் உண்டா?

—புரட்சிதாசன்

இது ஐந்தடி, ஒரு அடிக்கு ஆறு சீர்களாக மூன்று அடிகளும் நான்கு சீர்கள் கொண்டனவாக இரண்டடியும் வந்த '**வேற்றொலி வெண்டுறை.**'

## 2. வேற்றொலி வெண்டுறை

### 129. செய்யுள்

"பற்றாக் குறைதவிர்க்கப் பலஇயக்கம் போராட்டம் பதவிகொண்ட
குற்ற அரசோ கொடிய பழிசுமத்திக் குழுவினரைத் தண்டித்து
ஒற்றுமை அமைதிஎன்றே ஊருக் குபதேசித்துச்
சிற்றறிவில் அதிகாரச் செருக்கில் அடிமைகளாய்
மற்றவரைப் பயன்படுத்தி மக்களை ஏமாற்றும்
ஒற்றர்கள் தலைமைஎல்லாம் ஒழிவது எந்நாள்?"

—புரட்சிதாசன்

இது ஆறடியாக முதலிரண்டடியும், ஆறுசீர்கள் கொண்டனவாகவும், மற்ற நான்கடிகளும் நான்கு சீர்கள் கொண்டனவாகவும் வந்த **வேற்றொலி வெண்டுறை**

## 3. வேற்றொலி வெண்டுறை

### 130. செய்யுள்

1. "தொண்டெனும் பெயராலே சூளுரைத்து நிதிசேர்க்கும்
பணத்தை எல்லாம்
2. கண்டனக் குரல்கொடுத்தும் கையாடல் செய்கின்றார்
கேட்பாரில்லை
3. சென்றவர் திரும்பாத தெளிவுரைத்த வையத்தில்
4. கொண்ட மனைவி குழந்தைகள் சுற்றமெல்லாம்
5. நின்று நிரந்தரமாய் நிலைபெறுதல் இல்லைஎனக்
6. கண்டும் படித்தும் கருத்தில்லா மூடர்கள்
7. இன்றும் இரப்பிணியாய் இழிசொல்லாய் வாழ்கின் றாரே"

—புரட்சிதாசன்

இது ஏழு அடிகளைக் கொண்டதாக முதலிரண்டடிகளும் ஆறுசீர்கள் கொண்ட ஓசையிலும், அடுத்த நான்கடிகள் நான்கு சீர்கள் கொண்ட ஓசையிலும், கடைசி அடி ஐந்து சீர்கள் கொண்ட ஓசையிலும் வந்த வேற்றொலி வெண்டுறை.

வெண்பா இனத்தில் வெண்தாழிசை, வெண்துறை, (வெண்டுறை) வெண்விருத்தம் எனப் பலவகை வந்ததறியவும். வெண்டுறை வெண்பாத்துறையின் கடைசி அடிகளில் ஒவ்வொரு சீர் குறைந்தும் கூடியும் வரும்.

வெள்ளொத்தாழிசையில் முதலிரண்டடி நான்கு சீராலும் வரும். ஒருபொருளின் மேல் மூன்றடுக்கி வரும் சிந்தியல் வெண் பாவும் ; வெள்ளொத் தாழிசை, வெண்டாழிசை, எனவும் பெயர் பெறும்.

"ஈரடிமுக்கால் இசைகொள நடந்து
மூன்றுடன் அடுக்கித் தோன்றி எனாத் தாழிசை"

என்றார் மயேச்சுரர்,

## 1. வெண்டாழிசை

### 131. செய்யுள்

"வேண்டா வெறுப்பில் விரவிய பற்றுமை
தீண்டத் தகாதனவும் தீண்டி உறவெடுத்து
மீண்டாலும் கொள்ளாதே மீட்பு.

2. சொல்லில் உறுதித் துணைநலம் அஞ்சாமை
கல்விப் பகுத்தறிவில் கால்கோலி நிற்பதில்
தொல்லை கடந்தெழும் தூண்,

3. செல்வ முடையார் சிறப்புடையார் ஆமெனினும்
இல்லைஎன்று நொந்தவர்க்கு ஈயாதார் அன்னவரை
வள்ளலென்று போற்றல் வடு''

—புரட்சிதாசன்

இது ஒரு பொருளின் மேல் மூன்றடுக்கி வந்த வெள்ளொத் தாழிசை என்ற சிந்தியல் வெண்பா.

## 3. கலிப்பா

### (அதன் இனமும், வகையும்)

### 132. செய்யுள்

''காய்முன் நிறைவந்த காரிகைக் கட்டளை
வாய்ப்பாட் டுறுப்பு வண்ணச் சுரிதரவுத்
தா ழிசைக் கொச்சம் தரங்கம் துறைவிருத்தம்
ஏழிசையில் பண்கலிப் பா''

—புரட்சிதாசன்

கலிப்பாவிற்கு இலக்கணம் சொல்லும் போது, அதன் இனத் தைத் சேர்ந்தனவாக நெரிசை ஒத்தாழிசை என தரவு, தாழிசை, தனிச் சொல், சுரிதகம், அம்போதரங்கம், வண்ணகம், கவி, வெண்கலி, கொச்சகம், பஃறொடை, துறை, விருத்தம் என வகைபிரித்த உறுப்புகள், மற்ற ஆசிரியத்திற்கும், வெண்பாவிற்கு மில்லாத நிறைந்த செய்திகள் அறியக் கிடைக்கின்றன. அதன் தொகைப் பாக்கள் சந்த வகையிலும் மிகமிக ஒத்தனவாக வரிசைப்படுத்தப் பட்டிருக்கின்றன.

கலிப்பாவின் நான்கு வகை கூறுமிடத்துத் தொல்காப்பியரும்

''ஒத்தாழிசைக்கலி, கலிவெண்பாட்டே
கொச்சகம், உறழொடு
கலிநால் வகைத்தே''

—தொ. செய்–126.

என்றார்.

ஒத்தாழிசைக்கலி இரண்டு வகையென

''இடைநிலைப் பாட்டே
தரவு, போக்கு, அடையென
நடை நவின் றொழுகும்''

என்றார்,

என்னே அருமை''
மீண்டும் தொல்காப்பியர்.

''தரவினுடைய மரபு
இடைநிலைப் பாட்டு.'

—தொ-செ 130.

''போக்கு இயல் என்பதும்
வைப்பு என்பதும் தரவு இயல் ஒத்தும்
அதன் வயப்படுவன''

—தொ-செ-131

என்று கூறுகிறர்.

''ஆசிரிய நடைத்தே வஞ்சி''
''வெண்பா நடைத்தே கலி''

என்று தாழம்பட்ட இசைச் சொற்களுடன் சீர்த் தொகுப்பு கொண்டவற்றை அவரே சிறப்பிக்கின்றார்.

அந்தத் தாழிசை வகைகளை!(தரவு) தரவாக வரிசைப்படுத்து கின்றார்,

''ஒத்து மூன்று ஆகும் ஒத்தாழிசையே
தரவின் சுருங்கித் தோன்றும்.

—தொ-செ.137

என்று கூறி, தரவு—என்பதின் குறைந்த அடி நான்கு, உயர்ந்தது (உயர்வடி) பன்னிரண்டு அடி என்று உறுதிப் படுத்துகிறார்.

தாழிசைப்பட்ட கலிப்பாவையும், அதற்கு உடன்பட வேண்டிய; உறுப்பினம், வகைகளையும், வரிசைப்படுத்தும் போது,

1. தாழிசை, 2. தரவு, 3. விட்டிகை, 4. சுரிதகம், 5. அராகம், 6. அம்போதரங்கம், 7. கொச்சகக் கலிப்பா 8. கலிவெண்பா, வெண்கலிப்பா, 9. கலித்தாழிசை, கலிவிருத்தம் 10. கட்டளைக் கலிப்பா. 11. கட்டளைக்கலித்துறை, கலிநிலைத் துறைப்பா, கட்டளை வெண்பா என அனைத்தும் அவற்றுள் அடங்கும்.

## தாழிசை

''தரவே தானும்

நான்கும் ஆறும் எட்டும் (4,6,8) என்ற நேரடி பற்றிய நிலைமைத்து ஆகும்.

ஒத்து மூன்று ஆகும் ஒத்தாழிசையே''

—தொல்.செய். 136, 137

''தாழிசையாவது நாற் சிந்தாகி
தாழிம்பட்ட ஓசை கெழுமத்
தரவினில் சுருங்கி நிரவிய எதுகையாய்
ஒருபொருள் மீது மூன்றடுக் குடைய
வரவின தென்பர் வளமிகு புலவர்
—பெரும்புலவர் மதுரை இளங்குமரனார்.

நான்கு, ஆறு, எட்டு—என்ற அடிகள் கொண்டனவாக தரவு வழி ஒழுங்கினில் தாழிசை என்றார் தொல்காப்பியர்.

ஒருபொருள் மீது மூன்று அடுக்குகளைத் தரவுச் சுருக்கத்தில் தாள இசைச் சந்த ஓசையுடன் வரிக்கு நான்கு சீர்களையுடைய தாகக் கொள்ளலும், தாழிசை என்றார் மதுரை இளங் குமரனார்.

குறைந்த வரிகளும், கூடுதல் எட்டு வரிகளும் உடைய தாயினும் தாழம்பட்ட இசை, தாழிசை என்றனர்.

''நேர்இன மணியை நிரல்பட வைத்தாங்கு
ஓர்இனப் பொருளை ஒருவழி வைப்பது
ஒத்து எனமொழிப உயர் மொழிப்புலவர்''
—தொல். செய். 163

ஒத்து என்பது வேறு. ஒத்து என்பது வேறு. மூன்று தாழிசை ஒரு பொருள் நடையில் வருவது ஒத்து, இயல், என்னும் பொரு ளுடையது ஒத்து.

''ஒத்து மூன்றாகும் ஒத்தாழிசையே''

என்ற தொல்காப்பியச் செய்யுளியல் விளக்கத்தை,

''ஓரினப் பொருளாக இருப்பினும்
முத்துக்களை வரிசைப் படுத்தி
வைத்தன போல அற்றையும்
ஒழுங்கு படுத்திக் கூறுக''

என்ற நன்னூல் பவணந்தியார்,

''நேரின மணியை நிரல்பட வைத்தாங்
கோரினப் பொருளை யொருவழிவைப்ப
தோத்தென மொழிப வுயர் மொழிப் புலவர்
—நன். பாயிரம். 14

என்றார்.

## தரவு

தரவு என்பதன் பொருள், ஒழுங்காக, முழுமையாக என உறுப்பியற் பொருள் கொண்டவை. அவற்றுள் அடங்கினவாறு,

"தரவும் போக்கும் பாட்டு இடைமிடைந்தும்
ஐஞ்சீர் அடுக்கியும், ஆறு மெய் பெற்றும்
வெண்பா இயலான் வெளிப்படத் தோன்றும்!"
—தொ.செய். 148

வெண்பா இலக்கணத்தில் காய்ச்சீர் கண்ணிகளின் ஒழுங்கு கலியின் முகப்பாக வரும். அது தரவு, தாழிசைக்கும். முன்னோடி யாகும்.

"வெள்ளைச் சீரண்டடி"

என்னும் யாப்பருங்கலக் காரிகை. கலிப்பாவிற்கும், தரவுக் கொச்சக் கலிப்பாவிற்கும் குறைந்த அடிக்கணக்கு நான்கே சொல்லி இருக்கிறது. தாழிசைக்குக் குறைந்தது இரண்டடியும், மிகுதி நான்கடியும் கூறியிருக்கிறது. ஆனாலும் அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பாவும், வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பாவும்; தரவாக மூன்றடிச் சிறுமை, கூடுதல் வரியாகப் பாடுவோனது பொருள் முடிவுக்கு ஏற்பது வரையறை இல்லை. என்றும் கூறி இருக்கிறது.

இதனை யாப்பருங்கலம் (44)

"சுருங்கிற்று மூன்றடி யேனைத்
தரவிரு மூன்றடியே
தரங்கக்கும் வண்ணகக்கும்
தரவாவது தாழிசைப்பா
சுருங்கிற் றிரண்டடியோக்க
மிரட்டி சுரும்பி மிருந்
தரங்கக் குழலாய் சுருங்குந்
தரவினிற் றாழிசையே"

என்றது.

"தரவு, தாழிசை தனிச்சொல், சுரிதகம்,
என்னும் நான் குறுப்பினதே ஒத்தாழிசைக்கலி"

என்றார் காக்கைப் பாடினியார், மயேச்சுரர்.

"கொச்சகம், அராகம்" சுரிதகம் எருத்தொடு
செப்பிய நான்கும்
"சொற்சீர் அடியும் முடுகியல் அடியும்"
அப் பாநிலைமைக்கு உரிய ஆகும்
—தொல். செய் 117, 118

என்றவாறு, தரவு என்பதை எருத்தம் என்றும், தாழிசை என்பதை இடைநிலைப்பாட்டு என்றும், தனிச்சொல் என்பதை விட்டிசை—கூன், தனி நிலை, என்றும் சுரிதகம் என்பதை மடக்கியல், வாரம் வைப்பு, போக்கியல், என்றும், அராகம் என்பதை வண்ணகம் முடுகியல், அடுக்கியல் என்றும், அம்போதரங்கம் என்பதை அசையடி, பிரிந்திசைக் குறள், சொற்சீரடி என்றும் இலக்கியம் கண்டு இலக்கணம், என்பதாக,

"எழுத்தே கொச்சகம் அராகம் சிற்றெண்
அடக்கியல் வாரமொடு அந்நிலைக் குரித்தே"
—தொல். செய். 146

என்ற தொல்காப்பியச் செய்யுள் இலக்கணத்திற்குப் பிறகு அதற்குரிய தலைப்புப் பெயர்களும், வெவ்வேறாக வழக்கிற்கு வந்தன. காய்ச்சீர்த் தாழிசைப்பாடல்களும், 'என வாங்கும்' மடக்கு, எனும், தனிச்சொல், விட்டிசை முறைகளும், கூன், முடுக்கு, வாரம், வைப்பு, போக்கு, என்பன வெல்லாம் பிற்பட்ட செய்யுள்மாதிரிப் பாடல்களிலும், இசைப்பகுதி சிலப்பதிகாரத்திலும், ஏன்? சித்தர் பாடல்களிலும் தெளிவாகப் பரந்து அறியப்படுகின்றன. நேரிசை, ஒத்தாழிசைக் கலிப்பாத்தரவு (எருத்து) என்பதற்கு அதன் சீர்கள், ஒழுங்கு அடங்கிய பாடல் 'சுருங்கிற்று மூன்றடி' என்னும் காரிகை யாப்பு விதிப்படி;—

## 1. தாழிசை

### 133. செய்யுள்

"தென்குமரிப் பேராழிச் செந்தமிழை வையகத்தில்
பொன்மகுடம் சூட்டிவைத்துப் பொற்பூறப் பார்ப்பநனை
என்மனத்தில் நான்கண்டே ஏந்துகின்றேன் பாமாலை"
—புரட்சிதாசன்

மேற்கண்ட பாடலில் காய்ச்சீரான தேமாங்காய், கூவிளங்காய் வந்திருப்பதறியவும்.

## 2. தாழிசை

### 134. செய்யுள்

செய்யுள்களில் சீர்தளைகள் செப்பரிய தத்தகரம்
கையொலியும் கால்நடமும் கட்டளையில் சிந்தியல்கள்
பாடுதுறைத் தோள்முழவுப் பாசுரங்கள் தாம்திமிதோம்
ஆடுமிளம் பூவையர்கள் அக்குழுவின் யாழினமே''

—புரட்சிதாசன்

### 135. செய்யுள்

''செஞ்சாந்துப் பொட்டுவைத்து சேல்விழிக்கு மையெழுதி
நெஞ்சினிக்க ஆடவந்த நேரிழையர் வல்லவர்கள்
கச்சணிந்த கொங்கையர்கள் காட்சிதரும் போதிலவர்
இச்சையெழ இன்பமெழ ஏழிசையை மீட்டிடுவரே''

— புரட்சிதாசன்

மேற்கண்ட இருவிகற்பத் தாழிசை 4, 4=8 வரிகளில் ஒன்றாவது; நான்கடி கொண்ட, ஒரு வரிக்கு நான்கு சீராக பதினாறு சீர்கள்—அவற்றிலும் இரண்டிரண்டு வரிக்கு இரு விகற்பச் செய்,கை, பாடுஆடு, என சிறப்பெதுகை வந்ததறியவும்.

அடுத்த இரண்டாவது செய்யுளின் நான்கு வரியிலும் அவ்வாறு, செஞ்சா, நெஞ்சி, அடுத்த விற்பமாக கச்ச, இச்சை வந்தறியவும் காய்ச் சீர்களே, அதாவது, நீண்ட சீர்களான தேமாங்காய், புளிமாங்காய், கருவிளங்காய், கூவிளங்காய் ஆகிய சீர்கள் வண்ணச் சந்த ஓசைகளுக்கு இனிமை. அவற்றிலும் மேற்கண்ட தாழிசை மொத்த எட்டு (அடி) வரிகளிலும் விளச் சீரில் கூவிளங்காய் சீர்மட்டுமே, அதாவது செஞ்சாந்து என்ற தேமாங்காய் சீர் ஒன்று தவிர மற்ற காய் முப்பத்தி ஒன்று சீர்கள் வந்திருப்பதறியவும்.

## விட்டிசை

இலக்கண நூல்களில் தொல்காப்பியம் கொண்டு தனிநிலை என்றாலும், தனிச் சொல் என்றாலும், கூன் என்றாலும், விட்டிசை என்ற உறுப்பினையே குறிக்கும். நீர்வளம், நிலவளம், மலைவளம் ஒருமித்த இயற்கைவனப்பு காலங்காலமாக செழிப்பும், புதுப்புதுத் தோற்றமும் அடைந்து விளங்க, ஆரம்பத்தில் பறவை இனமே காரணமாக இருந்து பொருள் தருகிறது. இடம் விட்டு இடம் பெயர்ந்து காலச் சூழலுக்கேற்று வாழும் பறவைகள் ஆங்காங்குத் தின்றபழ விதைகளை நீர்க் கரையில் உமிழ்ந்தும், மரக்கிளைகளில் உமிழ்ந்தும் விட்ட தொடர்பே—மரத்தடியில், நீர்க் கரையில் புதுமரம், பூ, கனி, காய் எனமாற்றமடைந்திருக்கின்றன.

இதனையே, தொல்காப்பியம்; திணை மயக்கத்தில் கருப் பொருள் மயங்கினும், உரிப்பொருள் அதாவது உணர்வுத் திட்பங்கள் மயங்காது என்று தெளிவுபடுத்துகிறது. ஐந்திணை நிலங்களில் மாற்றுச் செடிகள், பூக்கள், பயிர்கள் ஒரு நிலத்தி லிருந்து, மற்றொரு நிலத்திற்கு வந்து பக்குவம் பெற்றுவளரும்—ஆனால் அடிப்படை உணர்வுகள் மட்டும் மயங்குவதில்லை என்ற பொருளாகும். அவ்வாறே, பறவைகள் வளர்த்த பசுஞ் சோலை எனவாக நாட்டுப்புறப் பாடல் ஒன்றில் விட்டிசை என்பது எவ்வாறு கொள்ளப்பட்டிருக்கிறது என்பதைஅறிவோம்.

## 1. விட்டிசைப் பாடல்

### 136. செய்யுள்

இந்த — காட்டுக்குள்ளே போனாக்க—பெருங்
கள்ளிச்செடி முள்ளிச்செடி—அதுவளர்ந்த
காரணத்தைச் சொல்வோமின்னா—நீண்ட
கதைகதையாய்ப் போகுமடி

நம்ப — பாட்டன்பூட்டன் காலமென்ன?—ரொம்பப்
பலவருடம் முன்னாடி—அந்தப்
பறவை இனம் வச்சதுதான்—அப்பப்
பசுஞ்சோலை யாச்சுதடி

கிடைச்ச — பழந்தின்னு போட்டவிதை—எதோ
பக்குவம் முளைச்சததடி—அதனால்
பலாமரம் வேப்பமரம்—எங்கும்
படை போல புளியமரம்

விளைஞ்ச— அழுத்தமுள்ள மாமரம்—அப்போ
அணியணியா நாவல்மரம்—காட்டில்
அங்கங்கே பூமரமாம்—சாரல்
அடுத்தடுத்து வாழைமரம்

காட்டுப் — புஞ்சையில் கடலைஎள்ளு—அந்தப்
புறம்போக்கு பூண்டுநெல்லு—சொக்கப்
பொன்னான மலைத்தேக்கு—பார்த்தா
புதையல் வகை மிளகு

ஆகா — நெஞ்சார்ந்த மண்வளத்தின்—செல்வ
நிலைமை மனிதன் வந்து—இப்ப
நெறிப்படுத்திக் கொண்டதனால்—நாட்டில்
நிம்மதி குலைந்ததடி''

—புரட்சிதாசன்

மேற்கண்ட பாடற்றலைப்பாக,

''இந்தக் — காட்டுக்குள்ளே போனாக்க —பெருங்''
நேர் நேர்— நேர் நிரை நேர் நேர் நேர் நேர்—நிரை
தேமா — கூவிளங்காய் தேமாங்காய் —மலர்

இரண்டு காய்ச் சீர்களைக் கொண்ட இந்த ஒரு பாடலுக்கு முன்னும், பின்னும் நேர் நேர், நிரை என்ற தொகுப்பு—முடிப்புத் தொடுப்பு எனவாகத் தனிச்சொல் வந்திருப்பதறியவும். அவையே தனி நிலை, விட்டிசை என்பதறியவும்,

ஒன்றினை எழுதுவதற்கு முன்னும் பின்னும் ஒரு சொற்றொடருக்குக் கோடிட்டு விட்டோ; குரலில் பாடும் போது இடைவிட்டுத் தனிச் சொல்லாகச் சொல்லியோ கொள்வது விட்டிசை. மேற்கண்ட விட்டிசை வந்த பாடல்கள் தமிழக நாட்டுப்புறக் கும்மியடி, காவடிச் சிந்து, சித்தர் பாடல்களில் பெரும்பான்மை பெற்றிருப்பதறியவும்.

நாடக அமைப்பினை வலியுறுத்தும் கலிப்பாடல்களிலும் சிலப்பதிகார உரையிட்ட பாட்டுடைச் செய்யுள்களிலும் சிறப்புத் தருவன தனிச்சொல் என்ற இந்தவிட்டிசையே. அதற்கு இலக்கண நூல் மேற்கோள்கள் காட்டுமிடத்து இந்த விட்டிசையே,

''பொருளோடு அடிமுதல் நிற்பது கூன்''

என்னும் யாப்பருங்கலம். அடிமுதற்கண் பாட்டினது பொருளைத் தழுவியும், அடியின் இறுதியிலும் நிற்க வருவது தனிச் சொல் (விட்டிசை) என்ற கூன்.

''அடிமுதற் பொருளைத் தானிது கொண்டு
முடியநிற்பது கூனென மொழிப''
''வஞ்சியினிறுதியும் ஆகும் இதுவே''
''அசை கூனாகும் என்மனார்ப் புலவர்''

என்றார் பல்காயனார்.

''அடிமுதற் பொருள்பெற வருவது தனிச்சொல்
அஃது இறுதியும் வஞ்சியுளியலும் என்ப''
—யாப்பருங்கலம்-94

நேரிசையாசிரியப்பாவாகக் குறுந்தொகை 216 ஆவது பாடலில்,

''யானே— தோடாரெல்வளை நெகிழவோங்கிப்
பாடமை சேக்கையிற் படர்கூர்ந்திசினே
அன்ன னளிய ளென்னாது மாமழை
இன்னும் பெய்ய முழங்கி
மின்னுந் தோழியென் இன்னுயிர் குறித்தே''

என்றார்.

யாப்பருங்கல உரை மேற்கோளில் குணசாகரர் ஒரு மேற்கோள் காட்டுகிறார். வஞ்சியடியின் முடிவில் அதாவது, ''மா வழங்கலின் மறக்குற்றன—வழி'' என்று கலித்தொகை—39ஆவது 'காமர் சடும்புனல்' என்னும் சொச்சகக் கலியுள்;

''சிறுகுடியீரே—சிறுகுடியீரே'' என ஒரு அடியாகவே அந்த (விட்டிசைக் கூன் (தனிச் சொல்) வந்த இலக்கணம் அறியவும்.

## சுரிதகம்

வாரம், வைப்பு, போக்கியல், அடக்கியல், மடக்கியல் என்ற மாற்றுப் பெயர்களாலும் சுரிதக உறுப்பு வெகுவாக இலக்கியங்களில் பகுக்கப்பட்டிருக்கின்றன.

''அகவல் இயலிலும் வெண்பா இயலிலும்
நிகரில் சுரிதகம் நேர்ந்திடல் நெறியே
வாரம் வைப்பே அடக்கியல் மற்றும்
சுழியே சுழியம் சுரிதகப் பெயரே''

என்பார் புலவர் இளங்குமரனார்.

மேற்கண்ட சுரிதக நடையும் அவ்வழிப் பொருள் உணர்த்தும் ஆசிரியச் சுரிதக உறுப்புகளில் ஒரு செய்யுள்.

## சுரிதக நடை

## 137. செய்யுள்

''காயிரு மாவிரு சீரென நான்கிற்
கணித்தவை யோரடி அவ்வா ரீரடிப்
பாவினி லெண்சீர் பகரும் விருத்தத்தில்
பாட்டியல் மரபினில் பைந்தமிழ் பாடினும்
அன்னார் புலமை அவைச்சிறப் பாகா
வண்ணப் பாவின வகைபயின் றதனைச்
சொல்லும் மரபே தமிழினம்
வெல்லும் பெருமையாம் விழுமிய முனைப்பே''

—புரட்சிதாசன்

''சுரிதகம் என்பது சொல்லுங் காலைச்
சுரந்து சென்றடங்கும் சுழல் நீர் ஒப்ப
முடிநிலை யாகும் முறைமை''

என்ற யாப்பு விதியில் சுரிதம் என்பது உள் வாங்குதல், மறைதல் என்னும் பொருளை, சுருள்தல், சுழல்தல் என்ற பொருளும் தரும்,

"ஓரிடத்து ஓடாநின்ற நீர்க் குமிழியானும்
திடரானும் சார்ந்த இடத்துச்
சுரிந்தோடும் அதனைச் சுரிந்து

என்றும், சுழி என்றும் வழங்குவது போல"

என்று கூறும் (81) யாப்பருங்கலவிருத்தி.

கலித்தலையால் அமைந்த பா, வெண்பா இயலாகவோ, ஆசிரியப்பா இயலாகவோ முடிதலால் அதில் ஒருவகைச் சுழற்சி கருதி, சுரிதகம் எனப்பட்டது என்பார் இலக்கணப் பெரும் புலவர் மதுரை இளங்குமரனார்.

முடுகியல் நடை கூட ஏழு சீர்களில்தான் நடக்குமென்பதைத் தொல்காப்பியர் (தொ. செ. 62)

"எழுசீர் அடியே முடுகியல் நடக்கும்" என்றார்.

'நிரை நிரை' என்னும் அசையே தொல்காப்பிய முடுகு வண்ணகம், உருட்டு வண்ணம், அராகம், அடுக்கியல் எனவாகிய பல பெயர்த் தலைப்புள்ள சிலப்பதிகார முரிவரியும் இவை சார்ந்ததே. அவைகள் கொள்ளப்படும் சுழல் கருத்துக் கவிதைக் கோவைப் பொருத்து அதனதன் தன்மையுணர்த்தும் நடையுடையன. இதனையே,

"சொச்சகம், அராகம், சுரிதகம், எருத்தொடு
செப்பிய நான்கும் தனக்கு உறுப்பு ஆகக்
காமம் கண்ணிய நிலைமைத்து ஆகும்"
(தொ. செய். 117)

என்றார்.

## அராகம்

வண்ணகம், முடுகியல், அடுக்கியல் என்ற மூன்று பொருளையும் உள்ளடக்கிக் கொண்ட 'அராகம்' என்ற பாவின உறுப்பு, எட்டு வரிகளைக் கொண்டதாகவும், முறையே ஒவ்வொரு முதல் வரிக்கும் நான்கு சீர்கள் இரண்டாவது வரி மூன்று சீர்கள் கொண்டதாகவும் அமையப் பெற்றது.

இந்த நூலில் முன்னரே இந்த உறுப்பு பற்றிக் கூறப்பட்டு இருக்கிறது. அதன் சிறப்பு குறளின் ஏழாவது சீர் 'நிரை' (மலர்) என்று முடிவதறியவும்.

கீழ்க்காணும் அராக உறுப்பின் பாடல் இலக்கணப் பொருள்.

ஒரு பொருட்டொகுப்பினை கட்டாயமாக அடுத்தடுத்த இரண்டு இலக்கணச் சீர்களில் தொடர்ந்து சொற் பொருள் பிளவு

பட்டு வருவது போன்று முடிந்த சீர், அடுத்து தொடர்ச் சீரில், எழுத்தையும் பொருளையும் சிதைத்து ஏற்றிச் சரி செய்வது வகையுளி என்ற இலக்கணத்தில் ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது. அது சிறப்பல்ல என்று கூறும் பாடல் கீழ்க்கண்ட அராக உறுப்புப் பாடல்,

## அராக நடை

### 138. செய்யுள்

"அசைநிரற் சீர்உள அதனதற் கொரு பொருள்
அணியெனத் தொடுப்பதோ வளம்
இசைமரற் பொருட்டொடர் இணைத்ததில் பிழைப்பதை
இழிபெனக் கொள்வதோ தகும்
வசைதரற் றொருபொருள் வரிமுரண் நுழைவதும்
வழக்கென கொள்வதும் குறை
திசைத்திரள் தமிழெனச் செறிவுள இலக்கணம்
சிறப்பதில் 'வகையுளி' பிழை"

—புரட்சிதாசன்

மேற்கண்ட அராகநடையில் அதன் உறுப்புகளாக அளவடி முதல் எல்லா அடிகளிலும் அது கொள்ளப்படும் என்பதைக் கருத்தில் கொள்க.

## அம்போதரங்கம்

நாற்சீர் இரண்டடி இரண்டாகவும், நாற்சீர் ஓரடி நான்காகவும், முச்சீர் ஓரடி எட்டாகவும், இருசீர் ஓரடி பதினாறாகவும் எண்சீர்; நாற்சீர், முச்சீர், இருசீர் என வரவரச் சுருங்கும் கூடும் இயல்புடைய உறுப்புப் பாடல் அம்போதரங்கம்

தாழிசைக்கும், தனிச்சொல்லுக்குமிடையே வரும் அம்போதரங்கம் இது, தரவின் வழிவந்த உறுப்பியல்

"தாழிசை தனிச்சொற் கிடையே தரங்கம்
அமைந்திடும் வகைய தம்போதரங்கம்"

என்பார் மதுரைப் பெரும் புலவர் இளங்குமரனார்.

"பல உறுப்புகளும் முறையே சுருங்கியும்
ஒரோவழிப் பெருகியும் முடுகியும்
கடைக்கண் விரிந்து நீர்த்தரங்கம்
போஃறலின் அம்போதரங்கம்"

என்றார் மதுரை பரத்வாச கோத்திர நச்சினார்க்கினியர்,

"கரை சாரர் கரை சாரக் ஒரு காலைக்
கொருகாற் சுருங்கி வருகின்ற
நீர்த்தரங்கம் (கடல் அலை) போல" அம்போதரங்கம்

என்றார் யாப்பருங்கல அமுத சாகரர்.

அம்போதரங்கமும், அவற்றின் வகையும், வரிசையும் மாதிரி மேற்கோளும் வரிசைப் படுத்திக் கூறுமிடத்து.

## 1. அம்போதரங்கம் (சிற்றெண்)

இருசீர் ஒரு அடியாக பொருள் முடிவும் கேள்வியுமாக ஒவ்வொரு வரியில்—ஆனால் தொடர்புப் பொருளாகப் (16) பதினாறு வரிகள்.

### 139. செய்யுள்

1. "கல்லாமை உயர்வதுண்டோ?
2. கற்றோர்முன் நிற்பதுண்டோ?
3. பொல்லாமை வெல்வதுண்டோ?
4. புண்படுத்தா திருப்பதுண்டோ?
5. இல்லாமை செழிப்பதுண்டோ?
6. ஈகையும் வறண்டதுண்டோ
7. கொல்லாமை ஏற்பதுண்டோ?
8. கொழித்தலும் சுமைகளன்றோ?
9. அல்லாமை நிறைவதுண்டோ?
10. அடித்தளம் உழைப்பதன்றோ?
11. செல்லாமை குறைவாலன்றோ?
12. செயல் படல் கடமையன்றோ?
13. நில்லாமை உலகமன்றோ?
14. நிற்பது வரலாறன்றோ?
15. எல்லாமே நன்மையன்றோ?
16. இதற்குள்ளே வாழ்க்கையன்றோ?"

—புரட்சிதாசன்

## 2. அம்போதரங்கம் (இடைஎண்)

மூன்று சீர்கள் ஒரு அடியில், அதாவது; ஒரு வரிக்கு ஒரு பொருளின் முடிவு உணர்த்துவதாக, ஆனாலும் பொருட் றொடர்பு நீள்வதாக எட்டுவரிகள்,

### 140. செய்யுள்

1. ''குரலினால் ஊதினால் குழல்
2. குழலினைக் காட்டினால் துளை
3. விரலினால் இயக்கினால் விதம்
4. விதத்தினை மீட்டினால் சுரம்
5. நிரலினால் தொடுப்பதே நிறம்
6. நிறத்தினால் கிடைப்பதே இதம்
7. தரவினால் இனிப்பதே தமிழ்
8. தமிழினால் இசைப்பதே இசை''

—புரட்சிதாசன்

## 3. அம்போதரங்கம் (அளவெண்)

நான்கு சீர் ஒரு அடியாக, அதில் கொண்ட பொருள் முடியப் பெற்றதாக, ஒவ்வொரு அடியாக இரண்டு வரிகள்.

### 141. செய்யுள்

1. யாழ்என நரம்புகட்டி யாத்தணர் பண்ணுப்பாணர்
2. தாழ்நடம் சிலம்புகொட்டித் தையலார் ஆடுகின்றார்''

—புரட்சிதாசன்

## 4. அம்போதரங்கம்(பேரெண்)

நான்கு சீர் ஒரு அடியாக, இரண்டு அடிகளில் பொருள் முடியப் பெற்றதாக இரண்டு வரிகள்.

### 142. செய்யுள்

1. ''ஆழ்கடல் குமரிமக்கள் அவர்களே தமிழரென்றே
ஏழ்திசை முடிவுமாங்கே இயம்பிற்றாம் இயம்பிற்றாமே''

—புரட்சிதாசன்

மேற்கண்ட அம்போதரங்க உறுப்பு நிரல் இலக்கணத்தை

''நீர்த்திரை போல நிரலே முறை முறை
ஆக்கஞ் சுருக்கி அசையடி தாழிசை
விட்டிசை விரியத் தெடுத்துச் சுரிதகந்
தாக்கித் தொடுத்த தரவினோ டெனவும்
யாப்புற் றமைந்த அம்போதரங்கம்

என்றார் காக்கை பாடினியார்.

மேற்கண்ட வகையுறுப்புகளனைத்தும் எனவாக,

"அச்சொலப்பட்ட உறுப்போடு அராகம்
வைத்த நடையது வண்ணமாகும்"

என்றார்.

அதாவது அது தொல்காப்பியர் சொன்ன செய்யுள் வண்ணமாகும்.

## கொச்சகக் கலி

"வெண்பா இயலான் வெளிப்படத் தோன்றும்
பாநிலை வகையே கொச்சகக்கலி"

—தொ. செய், 148,

தரவு சொல்லும் குறைந்த அளவு நான்கடியில் வெண்பா இலக்கணத்தில் கொச்சகக்கலி அதாவது சரம்சரமாக, கொசுவம் கொசுவமாக ஒழுங்குபடுத்தி பெரிதாக விரிக்கும் அளவிற்குச் சுருக்கியதாக கொச்சகம் என்பதற்குப் பொருள் படும். இவற்றையே,

"தரவே தரவினை தாழிசை சிலபல
வருதல் மயங்குதல் வளர் கொச்சகமே" என்றும்

"கொச்சகம் என்பது குமரி மகளிர்
கோடும் வண்ணமும் பீடுற அடுக்கும்
கொய்சகக் காரணம் குறிக்கும் குரியே"

என்றும் புலவர் இளங்குமரனார் கூறுவார்.

கொச்சகக் கலி மேற்கோளாக நான்கு வரி—ஒரு வரிக்கு ஐந்து சீர்களில் முதல் வரியில் வந்த அதே தேமா, புளிமா, கருவிளங்காய் என மேற்கண்ட சீர்வரிசைநான்கு அடிகளிலும் கீழ்கண்டவாறு வருவதறிக.

## கொச்சகக் கலி

### *143.* செய்யுள்

**"பார்த்தே உணர்ந்த பலவாம் பொருட் பண்பு கூட்டி**
**ஈர்த்த நடிப்பில் இனிதே சுவை இன்பம் ஊட்டி**
**வார்த்த நயத்தில் வரைந்தோர் குறி வண்ணம் காட்டி**
**ஆர்த்த உணர்வை அவையோர் பெற ஆடிக் காட்டல்"**

—புரட்சிதாசன்

ஒரு அடிக்கு ஐந்து சீர்களாக மேற்கண்ட நான்கு அடிப் பாடலில் ஒவ்வொரு அடியிலும் மோனை வரும் மூன்றாம் சீர்களான முறையே.

1. பலவாம் பொருட் — புளிமாங் கனி
2. இனிதே சுவை — புளிமாங் கனி
3. வரைந்தோர் குறி — புளிமாங் கனி
4. அவையோர் பெற — புளிமாங் கனி

மேற்கண்ட நான்கு அடிச்சீர்களும், கனிச்சீர் இலக்கணத்தில் வருவதறியவும். இந்த இலக்சணச் சீர்களை பொதுச்சீர் எனக் கொண்டால் ஒவ்வொரு சீரிலும் ஒற்று நீக்கி,கருவிளங்காய் என்னும்,

பலவா பொரு— கருவிளங்காய்
இனிதே சுவை ''
வரைதோ குறி ''
அவையோ பெற ''

எனப் பிரித்தால் காய்ச்சீரில் விளச்சீர்த்தலைப்பு வருவதறியவும். ஆனாலும் மேற்கண்ட நான்கு சொற்றொடர்ச்சீர் ஒவ்வொன்றும்|இரு பொருள் உணர்த்துவனவாக.

பலவாம் பொருட் — புளிமாங் கனி
இனிதே சுவை — புளிமாங் கனி
வரைந்தோர் குறி — புளிமாங் கனி
அவையோர் பெற — புளிமாங் கனி

வந்திருப்பதையும் அறியவும்.

மேற்கண்ட தெளிவான கனிச்சீர்களின் இலக்கண வலிமையை எடுத்தாண்டு படிப்பிக்காமல் நழுவ விட்டதாசப் பிற்பட்ட மேற்கோள் கவிதைச் செய்திகளில் கனிச்சீர்களை காய்ச்சீர்க் கருவிளங்காயாக்வே வலியுறுத்தி இருக்கின்றனர். மேற்கண்டவாறே, பூச்சீர் நிழற்சீர் முதலானவை பொதுச் சீர்களாக்கக் கொள்ளப்பட்டவகையில் அடிக்கு ஐந்து சீர்களுடைய நான்கு வரிகள் கொண்ட கலித்துரையை அறிவோம்.

## 1. கலித்துறை

### 144. செய்யுள்

"குயிலின் குரலெனக் கூவிய சிறுநகை முல்லை
ஒயிலின் நளிநயம் உடன்படும் பான்மையில் எல்லை
மயிலின் கலைஎன மாசறும் உவமையின் சொல்லைப்
பயிலின் அதன்தரம் பகர்ந்திட ஒப்புமை இல்லை"

— புரட்சிதாசன்

அடிக்கு நான்கு சீர்களென நான்கு அடிகளில்,

## 1. கலிவிருத்தம்

### 145. செய்யுள்

''வண்ணப் பறவைகள் வகையென விலங்கினம்
அன்ன வகைத்திணை ஐந்திணை வாழ்வியல்
பெண்மை வழிநலப் பெயரினை வழங்கிய
தன்மை நளிநயம் சாற்றுதல் சான்றே''

—புரட்சிதாசன்

மேற்கண்ட கலித்துறை, கலிவிருத்த இலக்கணமாக அந்தப் பூச்சீர், நிழற்சீர் வகைகளையே,

''நெடிலடி நான்காய் நிகழ்வது கலித்துறை''

என்றார் காக்கைபாடினியார். இவர் காலத்திற்கு முன்னரே கனிச்சீர், பூச்சீர், நிழற்சீர் முதலானவை பொதுச் சீர்கள் ஆகி விட்டன.

''ஐந்துசீரடியின அடித் தொகை நான்மையோ
டெஞ் சாதியன்றன் வெல்லாம் கலித்துறை

என்றார் காக்கைபாடினியார். அவரே,

''நாற்சீரடி நான்காய் வழிவது கலிவிருத்தம்''

என்றார்.

## கலிப்பா

கலித்தளை தட்டுக் கலியோசை தழுவியும், வெண்தளை தட்டு வெள்ளோசை தழுவியும் வந்து கடையடி (ஈற்றடி) முக்காலில் முச்சீரால் முடியுமெனில் அது கலிவெண்பா என்றும் வெண்கலிப்பாஎன்றும் கூறப்படும். இதனையே தொல்காப்பியர்,

''ஒரு பொருள் நுதலிய வெள்ளடி இயலான்
திரிபு இன்றி வருவது கலிவெண்பாட்டே''

—தொல்.செ. 147

என்றார்.

ஒரு பொருளைப்பற்றிச் சொல்வதாக வெண்பா இலக்கணம் மாற்றமின்றி வருதல் கலிவெண்பா என்றார். அத்துடன்.

''கலி வெண்பாட்டே, கைக்கிளைச் செய்யுள்''

—தொல்.செ. 153

என்றார்.

அறிய வேண்டிய சிறப்பாக தொல்காப்பியர்
''வெண்பா நடைத்தே கலி என மொழிப''

—தொல்,செ. 104

என்றார். அதாவது வெண்பாவின் இலக்கண நடையொழுக்கத்தைக் குறிப்பிடுகிறார்.

## 1. கலி வெண்பா

### 146. செய்யுள்

''பாலையில் சென்று பலநாட்க ளாயினவே
சோலைகள் காய்ந்த துயரம் நிழலில்லை
மாலையில் என்மயக்கம் மாமன் அறிவானே
வேளை இதுதான் விரைந்து வருவான்
விழிவைத்த பாதை விளக்கேந்தி வந்து
சுழித்தேன் முகம் சுழித்தேன் தூரத்தில் வந்தான்
இருண்ட பொழுதில் இடர்களைந்து
மருண்டு மருண்டு மயங்கந் தெளிந்துபின்
ஊடிய காமம் ஒருநிலை கொள்ளற்குக்
கூடிப் பிரிந்த குறியிட்ட அந்நாளை
எண்ணி வருந்தி இதயங் குமுறிய
கண்ணீர்க் கதைகளோ கைக்கிளை யஃது
மலரினும் மெல்லிய மாண்புடை இன்பம்
அலர்ந்த தினவோ அதற்கு''

—புரட்சிதாசன்

மேற்கண்ட பன்னீரடியின் மிக்கது கலிவெண்பா ஆகும்.

''வெண்டளை தன்றளை யென்றிரு தன்மையின்
வெண்பாவியலது வெண்கலியாகும்''

என்றார் காக்கை பாடினியார். தன்றளையாலும் துள்ளல்

வெள்ளை ஓசையாலும் இயற்றப்பட்ட சீர்வகை கொண்ட வெண்கலிப்பா, கீழ்க்காணுமாறு:

## 1. வெண்கலிப்பா

### 147. செய்யுள்

''வில்லேந்து புறத்துறையில் விழுப்புண்ணை மாலைஎனச்
சொல்லேந்து முழக்கமுடன் சூளுரைத்த தொல்தமிழர்
புல்லேந்து கையுடைய புரேரகிதர்க்குத் தண்டனிட்டு
தொல்லேந்து ஏழைமையில் துயரேந்திக் கொண்டசுமை
சொல்லவோ? சொல்லித் துடித்தெழப் பகுத்தறிவு
வள்ளலோ வள்ளல் வைக்கம் பெரியாரை
கொள்ளலோ கொள்ளல் குறி''

—புரட்சிதாசன்

## கொச்சகக்கலிப்பா

கொச்சகக் கலிப்பாவகை கூறுமிடத்து; ஒருதரவு வந்தும், அதாவது; தரவு கொச்சகக் கலிப்பா, தரவிணைக் கொச்சகக் கலிப்பா, தாழிசை சில, பல,—தரவு, தாழிசை, அராகம்,—அம்போதரங்கம், விட்டிசை, சுரிதகம் என்னும் 'ஆறு' உறுப்புகள் தம்முன் மயங்கியும், அனைத்திலும் வெண்பா, ஆசிரியப் பாக்களோடும் மயங்கி வருவன வெல்லாம் கொச்சகக் கலிப்பாவாகும். இவற்றையே,

''தரவே தரவினை தாழிசை சிலபல
வரன் முறைபிறழ அயற்பா மயங்கியும்
தனிச்சொற் பலவா யிடையிடை நடந்தும்
ஒத்தா லிசைக்கலி யுறுப்பினிற் பிறழ
வைத்த முறையான் வண்ணக இதுவாய்
மயங்கி வந்தனவும் இயங்குநெறி முறையிற்
கொச்சகக்கலி எனக்கூறினர் புலவர்''

என்றார் இலக்கணப் புலவர் நல்லாசிரியர் மயேச்சுரர். காக்கை பாடினியாரும் அவ்வாறே கூறினார். சில தாழிசை வந்தால்;

சிஃறாலிகைக் கொச்சகக் கலிப்பா. பலதாழிசை வந்தால் பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா. மயங்கி வருவனவற்றிற்கு மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா—அதன் வகை, வரிசை உறுப்புகளுக்கு மாறுபட்ட தலைப்புகள் வரும்.

## கலித்தாழிசை

''அடிவரை இன்றி அளவொத்தும்
அந்த (அ)டி நீண்டு இசைப்பிற்
கடிதலில்லாக் கலித்தாழிசையாகும்''

—யாப்—காரிகை—34

அந்தடி என்றால் இறுதியடி எனப்பொருள் பெறும்.

அடிகள் மிகுதியாக வரலாம். அந்த அடி இறுதியடி அளவினை ஒத்து நீண்ட இசையாக, இரண்டடியாகவும், பல அடிகளாகவும், ஒத்தும், ஒவ்வாததுமாக வந்தாலும், பாராட்டுக் குரிய தாழிசை, கலித்தாழிசை ஆகும். அதன் வகை கூறுமிடத்து ஒரு அடிக்கு நான்குசீர் இரண்டாவது அடியில் ஐந்தாவது சீர் ஒன்றும் வந்து கூடியதாக ஒரு செய்யுள்.

## 1. கலித்தாழிசை

### 148. செய்யுள்

பொய்புனைந் தோதிப் புகலிடம் தாம்வேண்டி
ஐதிகம் கொண்டோர் அவர் யாரே அறியத் தலைப்படுவோம்
செய்வினை தீங்கோ செயல்பாடும் கண்துடைப்போ
டுய்வினை கொண்டோர் அவர் யாரே அறியத் தலைப் படுவோம்
தெரிந்தே பிழைசெய்து செல்வம் திரட்ட
வரிந்துநின்ற அன்னார் அவர் யாரே அறியத் தலைப்படுவோம்.

—புரட்சிதாசன்

மேற்கண்ட ஒவ்வொரு இரண்டடியிலும் (ஈற்றடி) கடைசி அடி மிகுதியும், ஒரு பொருளை, மூன்று அடுக்காகக் கொண்டு புனைந்திருப்பதறியவும். அடுத்து ஒரு அடிக்கு நான்கு சீராக, மூன்று அடிகளுக்குப் பன்னிரண்டு சீர்களும், நான்காவது அடியில் ஐந்து சீர்களும் வந்த கலித்தாழிசை, கீழ்க்காணுமாறு அறிவோம்.

## 2. கலித்தாழிசை

### 149. செய்யுள்

''பார்த்ததும் சொக்கிப் பழகத் தலைப்பட்டேன்
பழக்கத்தால் நட்புப் பருகி உடன்பட்டேன்
பருகி உடன்பட்ட பழக்கத்தின் நட்போ
இறுக இறுக எனைத்தழுவி ஈர்த்த உறவென்ன?''

—புரட்சிதாசன்

ஈற்றடி என்ற கடைசி அடி சீர்மிகுந்தும், ஏனைய மற்ற மூவடி ஒத்து வந்திருப்பதறியவும். இலக்கணப்படி அளவொத்தும் ஒவ்வாதனவும் எனவாக மேற்கண்ட அந்தத் தாழிசை.

கடைசி அடி ஐந்து சீர்கள் கொண்டும், இரண்டாவது அடி மூன்று சீர்கள் கொண்டும், முதலடியும் மூன்றாவதடியும் ஒத்து வந்த கலித்தாழிசை. கீழ்க்காணுமாறு :

## 3. கலித்தாழிசை

### 150. செய்யுள்

''நூற்றுக்கு மூவர் நுதலிய ருக்வேதக்
கூற்றின் உபநிடதக் குப்பையின்
கூற்றின் உபநிடதக் குப்பை எனும்
சேற்றிற்கே தொண்ணூற் றெழுவர் தீபமிட்டார் தீபமிட்டார்.

—புரட்சிதாசன்

ஒத்துவரும் அளவில் அடிகளுக்கு நானாங்கு சீர்வந்தும், கடைசி அடிகள் மிகுசீர் கொள்வதும், கலித்தாழிசை வகைகள், ஆகும்.

தாளக் கட்டுமானத்தில் தனிச்சீரானவற்றை விட்டிசை கொண்டு பாடுதலும் மரபு. அதற்குள் அவை அடங்கும்.

''அந்தடி மிக்குச் சில பலவாய் அடி
கந்தமுள்ஒப்பன தாழிசையாகும்''

என்பதிலக்கணம்.

தொல்காப்பியரும்,

''அளவடி மிகுதி உளப்படத் தோன்றி
இருநெடிலடியும் கலியிற்கு உரிய''

என்றார்.

காக்கை பாடினியாரும்,

''கலியொடு வெண்பா அகவற்கூறிய
அளவடிதன்னால் நடக்கும் மற்றவையே''

—யாப்பருங்கலம்-26

அகவலாசிரியம், கலி, வெண்பா, ஆகிய அளவடியில் மேற் கூறிய பாக்கள் அடங்குவதையும் கூறுகிறார்.

---

## விளச்சீரில் முடுகியல்

28, சீர்கள் கொண்ட 8 அடி எழுசீர் விருத்த வகையொன்றில், இரண்டு அடிகளுக்கு ஆறு விளச்சீர் கொண்டு தொடுத்த முடுகியல் இலக்கணம். அதாவது, கடைவரிச்சுரிதம் என; நெறி, வரி, தரம், திறம் என்பது காண்க.

### 151. செய்யுள்

''நாடக வழக்கினை நடைமுறைப் படுத்தியே
நடிப்பது நளிநய நெறி
பாடகப் பொருளது பயின்றமை உரைப்பது
பலவகை உவமய வரி
ஆடக அணிகலம் அதற்கவை உறுப்பென
அவைக்கலச் சிறப்பது தரம்
ஊடகம் வசைஎன ஒருபொருட் கிருநயம்
உணர்த்துதல் அறிவியல் திறம்''

—புரட்சிதாசன்

கி. பி. 6,7 தொடங்கிய சித்தர்களில், திருமூலர், சிவ வாக்கியர் தொடர்ந்து பட்டினத்தார், பத்திரகிரியார், பாம் பாட்டி, இடைக்காடர், அகப்பேய், குதம்பை, கடுவெளி, குறுமுனி, அழுகனி, நந்தீசர், இராமதேவர்' கொங்கணர், ரோமநாதர், கருவூரர். பொதிகை, காக்புசுண்டர்வரை, பதினெட்டுச் சித்தர்களும் ஆசிரியம், வஞ்சி, கொச்சகம், எண்சீர் அறுசீர், கிளிக்கண்ணி, கட்டளைக் கலித்துறை, வெண்பா, அனைத்திலும் பாடினர். திருக்கோவையும், தஞ்சைவாணன் கோவையும் கலித்துறை என்பதை நினைவு கொள்ளுங்கள்.

கலிப்பாவின் பல உறுப்புத் தலைப்புகளை விரிவுபடுத்துதற்கு; வேண்டிய சீர், வேண்டாத சீர் உரைக்கப்பட்டன. ஆகவே 'கலி' மாற்றுப் பெயர்களில் கால வளர்ச்சியில் இலக்கண வரிசை வகையில் மாறுபட்டன.

எழுத்தெண்ணிப் பாடப்படும் பாவகையுள் கலிப்பாவில், கட்டளைக் கலிப்பா, கட்டளைக் கலித்துறை என இரண்டு வருகிறது.

இவைகளே கலிப்பா இனத் தகுதியை உறுதிப்படுத்தித் தனித்தன்மையுடையனவாகப் பயிற்றுவிக்கப்பட்டு, அவ்வாறே பாடல் பெற்றிருக்கின்றன.

## கட்டளையில் கலிப்பாவும் —துறையும்

கலிப்பாவும் அதன் இனமுமாக நேரிசை, ஒத்தாழிசை கலிப்பா, அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா, அவ்வழி தரவு, தாழிசை, சுரிதகம், வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா, வெண் கலிப்பா, அவ்வழி அராகம், தாழிசை, அம்போதரங்கம் சுரிதகம், கலிவெண்பா, கொச்சகக் கலிப்பா, அவ்வழி தரவு தாழிசை, சுரிதகம், பஃறாழிசை, கலித்தாழிசை கலித்துறை, கலிவிருத்தம் அனைத்தும் வந்திருக்கின்றன.

வஞ்சிப்பா என்பது கனிச்சீர், மருட்பா என்பது வெண்பாச் சீரும் ஆசிரியத் தளையுமுடையவை.

இந்தக் கலிப்பாவிற்கு அதன் தளையில் யாப்பருங்கலக் காரிகையே.

''காய் முன் நிரை'' என்று கூறினும்,

''புல்லாது அயற்றலை என்றும், மாச்சீர் கலியுட் புகா'' என்றும்.

அதாவது, தேமா, புளிமா, என்ற சீர்கள் கலிப்பாவில் வராது என்று கூறும் அந்த நூலாசிரியர் அமுதசாகரர் காலத்திற்குப் பிறகு,அதற்கு உரை எழுதிய குணசாகரர்' தேமா, புளிமா; என்ற மாச்சீர்கள் தழுவிய சீர்கள் கொண்ட செய்யுள் அடிகளையே மேற்கோளுக்கு எடுத்துக் கொண்டிருக்கிறார்.

அப்படியானால் குணசாகரர் காலத்தில் மாச்சீர்கள் அப்படித் தழுவிப் பாடப்பட்டிருக்கின்றன எனக் கொள்ள வேண்டும்.

அவ்வழி பின்பற்றிய பிற்சேர்க்கையே கட்டளைக் கலிப்பா, கட்டளைக் கலித்துறை ஆகியவை. எழுத்தெண்ணிக் கொள்ளப் பட்ட செய்யுள் இயற்றும் புலமையில், கட்டளை என்றஅதிகாரம் வலியுறுத்தப் பட்டிருக்கின்றது.

## 10. கட்டளைக் கலிப்பா

''மாச்சீர் முன்வரு நாற்சீர் அடியே
நேர்முதல் நிரைமுதல் நிரைநிரையானே''

பதினோறெழுத்தும், பன்னிரண்டு எழுத்தும் இயந்தரை அயடியாய் நடந்தஃதிரட்டித் தொத்து நான்கிறுவது கட்டளைக் கலிப்பா'' என்றார்.

மாச்சீர் முதல்வர்; அதாவது, தேமா, தேமா, புளிமா, கருவிளம், என வந்த நான்கு சீரடியை ஒரு அடியாகக் கொண்டு அவ்வாறே நிரைமுதல்வர; அதாவது, புளிமா, கூவிளம், கூவிளம் கூவிளம், என வந்த நான்கு சீர் அடியை ஒரு அடியாகக் கொண்டு அவ்வாறே இரண்டு வகைக்கும் பதினோரு எழுத்து, பதிமூன்று எழுத்தென—நான்கு அடி, எட்டடி எனக்கொள்ளத் தொகுப்பது கட்டளைக் கலிப்பா. அதனில் கடைச்சீர் ஏகாரத்தில் முடிய வேண்டும்.

### 1. நாற்சீர் அடிக்கட்டளைக் கலிப்பா

(11 எழுத்துக்கள் கொண்டவை)

அவ்வாறு வந்த சீர்களும், அடிகளும், அதற்குரிய எண், எழுத்துக்களும் கீழே தொகுக்கப்பட்டனவற்றால் அறியவும், சீர்களில் எழுத்துக்களை ஒற்று அதாவது புள்ளி வைத்த சொற் களை நீக்கி எண்ணவும்.

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | தே | மா | தே | மா | பு | ளி | மா | க | ரு | வி | ள ம் | |
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | —11 |
| 2. | தே | மா | கூ | வி | ள ம் | தே | மா | க | ரு | வி | ள ம் | |
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | —11 |
| 3. | தே | மா | தே | மா | க | ரு | வி | ள ம் | கூ | வி | ள ம் | |
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | —11 |
| 4. | தே | மா | தே | மா | க | ரு | வி | ள ம் | கூ | வி | ள ம் | |
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | —11 |
| 5, | தே | மா | கூ | வி | ள ம் | தே | மா ங் | கா ய் | கூ | வி | ள ம் | |
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | —11 |
| 6. | கூ | வி | ள ம் | தே | மா | தே | மா ங் | கா ய் | கூ | வி | ள ம் | |
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | —11 |
| 7. | தே | மா | தே | மா | பு | ளி | மா ங் | கா ய் | கூ | வி | ள ம் | |
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | —11 |
| 8. | தே | மா | தே | மா | பு | ளி | மா ங் | கா ய் | கூ | வி | ள ம் | |
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | —11 |

மேற்கண்ட சீர்களுக்கு கீழ்க்கண்டவாறு எழுத்துக்கள் என எண்ணித் தொகுக்கப்பட்ட, எண்சீர்க் கட்டளைக் கலிப்பா'

## 148. செய்யுள்

| அடி | | எழுத்து |
|---|---|---|
| 1. | நாட்டைக் காக்க நடிக்கும் தலைவர்கள் | — 11 |
| 2. | கூட்டம் போடுதல் கொள்கை பரப்புதல் | — 11 |
| 3. | கோட்டைக்குள்ளே குலவுதல் கூவுதல் | — 11 |
| 4, | வேட்டை யாடி வெகுபொருள் சேர்க்கவே | — 11 |
| 5. | பாட்டுப் பாடினும் பாசாங்கு காட்டினும் | — 11 |
| 6. | போட்டியில் தேர்தல் பொல்லாங்கு செய்யினும் | — 11 |
| 7. | ஆட்டம் போட அடியாட்கள் கூட்டினும் | — 11 |
| 8, | ஓட்டம் ஓட்டம் ஒருநாளில் ஓய்வரே | — 11 |

—புரட்சிதாசன்

மேற்கண்டவாறு,

மாச்சீர், விளச்சீர், காய்ச்சீர் வகையில் மேற்கண்டவாறு அடிக்கு நான்கு சீர்களாகச் செய்யுள் இயற்றினால் ஓரடிக்கு 11 எழுத்துக்கள் வருவதறியவும்.

| | | |
|---|---|---|
| மாச்சீரான 'தேமா'வுக்கு எழுத்து | — | 2 |
| ,, 'புளிமா'வுக்கு ,, | — | 3 |
| விளச்சீரான 'கருவிளம்' | — | 4 |
| ,, 'கூவிளம்' ,, | — | 3 |
| காய்ச்சீரான 'புளிமாங்காய்' | — | 4 |
| ,, 'தேமாங்காய்' ,, | — | 3 |
| ,, 'கருவிளங்காய்' ,, | — | 5 |
| ,, 'கூவிளங்காய்' ,, | — | 4 |

## 2. நான்கு சீரடிக் கட்டளைக் கலிப்பா

### (12 எழுத்துக்கள் கொண்டவை)

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | பு | ளி | மா | கூ | வி | ள ம் | கூ | வி | ள ம் | கூ | வி | ள ம் | |
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | —12 |
| 2. | தே | மா | பு | ளி | மா | க | ரு | வி | ள ம் | கூ | வி | ள ம் | |
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | —12 |
| 3. | பு | ளி | மா | கூ | வி | ள ம் | கூ | வி | ள ம் | கூ | வி | ள ம் | |
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | —12 |
| 4. | தே | மா | கூ | வி | ள ம் | கூ | வி | ள ம் | க | ரு | வி | ள ம் | |
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | —12 |
| 5. | பு | ளி | மா | தே | மா | க | ரு | வி | ள ம் | கூ | வி | ள ம் | |
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | —12 |
| 6. | தே | மா | பு | ளி | மா | க | ரு | வி | ள ம் | கூ | வி | ள ம் | |
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | —12 |
| 7. | பு | ளி | மா | கூ | வி | ள ம் | கூ | வி | ள ம் | கூ | வி | ள ம் | |
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | —12 |
| 8. | தே | மா | கூ | வி | ள ம் | கூ | வி | ள ம் | க | ரு | வி | ள ம் | |
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | —12 |

மேற்கண்ட ஒற்றுக்கள் நீக்கி சீர்களுக்கு எழுத்துக்கள் என எண்ணித் தொகுக்கப்பட்ட 'எண்சீர்க் கட்டளைக் கலிப்பா' கீழ்க்காணுமாறு.

### *153* செய்யுள்

| அடி | | | எழுத்து |
|---|---|---|---|
| 1. | எடுத்த திட்டமும் இன்னலைத் தாண்டியே | — | 12 |
| 2. | ஏற்ற முடிவும் இடற்படாச் சிந்தையும் | — | 12 |
| 3. | அடுத்த நேர்வழி ஆர்வமும் அவ்வழி | — | 12 |
| 4. | ஆக்க பூர்வமும் ஆண்மையின் இலக்கமே | — | 12 |

5. தொடுத்த பாட்டும் துலக்கிய சந்தமும் — 12
6. சொன்ன பொருளும் துடித்தெழும் வாய்மையும் — 12
7. கொடுத்த சொல்லிலே கோபுரத் தோற்றமும் — 12
8. கொண்ட பான்மைதான் கொற்றவன் இலக்கமே — 12

—புரட்சிதாசன்

மாச்சீர், விளச்சீர் வகையில் மேற்கண்டவாறு அடிக்கு நான்கு சீர்களாகக் கொண்டு நான்கு அடிகளாகவும் எட்டு அடிகளாகவும் தொகுத்தால் 12—எழுத்துக்கள் வருவதறியவும்.

அவ்வாறே ஓர் அடிக்கு நான்கு சீர்களாக நான்கடியுடன் ஓர் அடிக்கு 13—எடுத்துக் கொண்ட கட்டளைக் கலிப்பாவை கீழ்க்காணுமாறு அறியவும்.

## 154. செய்யுள்

''ஊடல் சுகத்துடன் ஒருமுறை ஏசினேன் — 13
கூடல் நினைவுடன் குறுநகை செய்தவர் — 13
ஓடிப் பிரிந்தமை உருத்துதே ஐயகோ — 13
வாடித் துடித்துநான் வருந்துதல் ஒப்புமோ'' — 13

—புரட்சிதாசன்

மேற்கண்ட கட்டளைக் கலிப்பாவில் நான்கு வரியாக ஒரு வரிக்கு (4+4=16) நான்கு சீராக பதினாறு சீர்கள்.

**தேமா கருவிளம் கருவிளம் கூவிளம் — 13**
**தேமா கருவிளம் கருவிளம் கூவிளம் — 13**
**தேமா கருவிளம் கருவிளம் கூவிளம் — 13**
**தேமா கருவிளம் கருவிளம் கூவிளம் — 13**

அதாவது, நான்கு தேமா, எட்டுக் கருவிளம், நான்கு கூவிளம் வந்திருப்பதை அறிக. பொழிப் பெதுகையில்;

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஊ | ட | ல் | சு | க | த் | து | ட | ன் | ஒ | ரு | மு | றை | ஏ | சி | னே | ன் |

மேற்கண்டவாறு அப்பாடலில் நான்கு அடிகள். ஒவ்வொன்றையும் ஒற்றெழுத்து நீக்கி எண்ணினால் பதின்மூன்று எழுத்துக்களே வரும். அவ்வாறே கீழே கொடுக்கப்பட்ட அடிகளில், பன்னிரண்டு எழுத்துக்கள் கொண்ட கட்டளைக்கலிப்பா.

### 155. செய்யுள்

1 2 3 4 5 6 7 8 9 10 11 12
நி ல வி லா டி ய நீ ரி லே நீந் தி ய

புலவி யூடலில் பொங்கிய ஆசையைத்
தழுவித் தீர்ந்தவன் சந்தன மார்பினன்

அ ழு த என் து யர் ஆ ற் றி ட வ ந் தி ல ன்
1 2 3 4 5 6 7 8 9 10 11 12

புளிமா கூவிளம் கூவிளம் கூவிளம் 12
புளிமா கூவிளம் கூவிளம் கூவிளம் 12
புளிமா கூவிளம் கூவிளம் கூவிளம் 12
புளிமா கூவிளம் கூவிளம் கூவிளம் 12

—புரட்சிதாசன்

மேற்கண்ட சீர் மொத்த "நிலவிலாடிய (புளிமா கூவிளம்) என்ற நான்கடி வரிசைச் சீர்களில் நான்கு புளிமாச்சீர், பன்னிரண்டு கூவிளச்சீர் வந்திருப்பதறியவும்,

## கட்டளைக் கலித்துறை

"அடியடிதோறும் ஐந்து சீராகி
முதற்சீர் நான்கும் வெண்டளை பிழையாக்
கடையொரு சீரும் விளங்காயாகி
நேர்பதினாரே நிரைபதினே ழென்று
ஓதினர் கலித்துறை ஓரடிக் கெழுத்தே"

—புலவர் குழந்தை

கட்டளைப் பாவும், துறையும் இலக்கியம் கண்டு இலக்கணம் பிரித்த வகையில் எழுத்தெண்ணிக் கொண்ட பாக்களில்—நான்கடியாகவும், எட்டடியாகவும் உள்ள, அதாவது, விருத்தம் (மண்டலிப்பு) என்ற பெயர் மரபும் கொண்டு அதற்குச் சான்றுகளாக, கோவைக் கலித்துறை, திலகக் கலித்துறை, அப்பர் திருவிருத்தம், நம்மாழ்வார் திருவிருத்தம், காசிக் கலம்பகம், அசதிக் கோவை, சிதம்பரச் செய்யுட் கோவை ஆகிய பல சொல்லி, இதற்குப் பல புலவர்கள் மேற்கோள் காட்டி இருப்பது அறியத்தக்கது. ஓர் அடிக்கு ஐந்து சீர்கள், அவற்றில் முதலடிச் சீர் நான்கும் வெண்பாச் சீர்களான தேமா, புளிமா, விளச்சீர், காய்ச்சீர் வரவேண்டும். அடியின் கடைசிச் சீர் விளத்தில் காய்ச்சீர் ஆன அதாவது, கருவிளங்காய், கூவிளங்காய்ச் சீரில் ஏகாரத்தில் முடிய வேண்டும். இப்படி வந்தால் நேரிசையில் 16 எழுத்துக்களும், நிரையசையில் 17,—எழுத்துக்களும் வரும். இதுவே கட்டளைக் கலித்துறை எனப்படும்,

# 1. ஐந்து சீரடிக் கட்டளைத் கலித்துறை

## (16. எழுத்துக்கள் கொண்டவை)

அவ்வாறு வந்த சீர்களும், அடிகளும், அதற்குரிய எண் எழுத்துக்களும் கீழே தொகுக்கப் பட்டனவற்றால் அறியவும். அதாவது, ஓர் அடிக்கு ஐந்து சீர்களென நான்கு அடிகள்.

தேமா ங் கா ய் கூவிள ம் தேமா புளிமா க ரு வி ள ங் கா ய்
1 2 3 4 5 6 7 8 9 10 11 12 13 14 15 16—16

தேமா கருவிள ம் தேமா ங் கா ய் கூவி ள ம் கூவிள ங் கா ய்
1 2 3 4 5 6 7 8 9 10 11 12 13 1415 16—16

தேமா புளிமாங்காய் தேமா க ரு வி ளம் கூ வி ள ங் கா ய்
1 2 3 4 5 6 7 8 910 11 12 13 14 15 16 —16

தேமா கருவிள ம் தேமா பு ளி மா க ரு வி ள ங் கா ய்
1 2 34 5 6 7 8 9 10 11 12 1314 15 16 —16

தேமாங்காய், கூவிளம், தேமா, புளிமா
கருவிளங்காய், கூவிளங்காய், புளிமாங்காய்

என மாச்சீர், விளச்சீர், காய்ச்சீர்களும் கொண்ட (கனிச்சீர் இல்லாது) எண்களைக் (புள்ளி எழுத்து நீக்கி) கணக்கிட்டு ஓர் அடிக்கு ஐந்து சீர்களாகக் கொண்டு செய்யுள் தொகுத்தால் 16;—எழுத்துக்கள் வருவதறியவும்,

மேற்கண்ட ஓரடிக்குள்ள ஐந்து சீர்களுக்கு ஒற்றுநீக்கி—16 எழுத்துக்கள் என எண்ணித் தொகுக்கப்பட்ட நான்கடிக் கட்டளைக் கலித்துறை. கீழ்க்கண்டவாறு.

### 156. செய்யுள்

1. கற்றாரை நாடினேன் கல்வியறிவில் தெளிவு பெற்றேன்.
2. உற்ற அறிவிலா ஒவ்வாத சேர்க்கையில் ஊனமுற்றேன்
3, பற்றுமிகு வாழ்வில் பாசம் உறவெனப் பாடுபட்டேன்
மு ற் று ம் உணருமு ன் மு ப் பு ச் சலி த் து ந ரை த் துவி ட் டே ன்
1 2 3 4 5 6 7 8 9 10 11 12 13 14 15 16—16

—புரட்சிதாசன்

## 2. ஐந்து சீரடிக் கட்டளைக் கலித்துறை

### (17 எழுத்துக்கள் கொண்டவை)

புளிமா புளிமா புளிமா க ரு வி ள ம் கூ வி ள ங் கா ய்
1 2 3 4 5 6 7 8 9 10 11 12 13 14 15 16 17 —17

புளிமா கருவிள ம் கூவிள ம் கூ வி ள ம் கூ வி ள ங் கா ய்
1 2 3 4 5 6 7 8 9 10 11 12 13 14 15 16 17—17

புளிமா கருவிள ம் தேமா ங் கா ய் கூவிள ம் கூவிள ங் கா ய்
1 2 3 4 5 6 7 8 9 10 11 12 13 14 15 16 17—17

புளிமா கருவிள ம் கூவிள ம் தேமா க ரு வி ள ங் கா ய்
1 2 3 4 5 6 7 8 9 10 11 12 13 14 15 16 17—17

புளிமா, கருவிளம், கூவிளங்காய், கூவிளம், தேமாங்காய், கருவிளங்காய், என, மாச்சீரும், விளச்சீரும், காய்ச்சீரும்,

கொண்ட எண்களைக் (புள்ளி எழுத்து நீக்கி) கணக்கிட்டு, ஓரடிக்கு ஐந்து சீர்களாகக் கொண்டு செய்யுள் தொகுத்தால் 17,—எழுத்துக்கள் வருவதறியவும்.

மேற்கண்ட சீர்களுக்கு 17 எழுத்துக்கள் என எண்ணித் தொகுக்கப்பட்ட நான்கடிக் கட்டளைக் கலித்துறை. கீழ்க் காணுமாறு :

### 157. செய்யுள்

1. தொழுத கரங்கள் துலங்க உதவுமா? நம்பவில்லை
2. பழுதோ முயற்சிகள்? பாடுகள் தோல்வியே வெம்பவில்லை
3. முழுதாய்ப் பெருஞ்சுமை மூச்சாரக் கூடுமோ கூடவில்லை
4. அழுதும் அவன்துயர் ஆறுமோ இல்லை அதுவுந்தொல்லை

—புரட்சிதாச

மேற்கண்ட செய்யுள் கடைசி அடிச் சீரில் 'அதுவுந் தொல்லை' என்பதைக் கூர்ந்து அறிந்து சீர் பிரித்தால் 'அதுவும் தொல்லை' என்பது 'புளிமாந்தண்பூ' என்ற பூச்சீராக ஒலிப்ப தறியவும். அதைப் பொதுச்சீராகக் கணக்கிட்டு ஒலிக்கும் போது 'கருவிளங்காய்' என வந்து ஐந்து எழுத்துக்களில், அதாவது, புளிமாந்தண்பூ' கூட ஐந்து எழுத்துக்களில் நிற்ப தறியவும்.

## 158. செய்யுள்

**"சுற்றிச் சுழன்றுதிண் தோள்மதம் கைகால்கள் கூந்தலொடு
வெற்றிக் களிப்பில் விடைத்து நின்றாடுதல் ஒன்று, மற்று
முட்டி முழந்தாள் முயன்றுபின் தந்தரை வட்டமொன்றில்
ஒட்டி அமர்ந்தே உறுப்பும் அசைத்தல் அதுவேனுமே"**

— புரட்சிதாசன்

இதில் எண்கள் எத்தனை? என்னென்ன சீர்கள் வந்தன வென்று கீழ்காணுமாறு அறியவும்.

| | | |
|---|---|---|
| சுற்றிச் | தேமா | 1. 2 |
| சுழன்றுதிண் | கருவிளம் | 3, 4, 5, 6 |
| தோள்மதம் | கூவிளம் | 7, 8, 9 |
| கைகால்கள் | தேமாங்காய் | 10, 11, 12 |
| கூந்தலொடு | கூவிளங்காய் | 13, 14, 15, 16 |
| வெற்றிக் | தேமா | 1, 2 |
| களிப்பில்வி | புளிமாங்காய் | 3, 4, 5, 6 |
| டைத்துநின் | கூவிளம் | 7, 8, 9 |
| றாடுதல் | கூவிளம் | 10, 11, 12 |
| ஒன்றுமற்று | கூவிளங்காய் | 13, 14, 15, 16 |
| முட்டி | தேமா | 1, 2 |
| முழந்தாள்மு | புளிமாங்காய் | 3, 4, 5, 6 |
| யன்றுபின் | கூவிளம் | 7, 8, 9 |
| தந்தரை | கூவிளம் | 10, 11, 12, |
| வட்டமொன்றில் | கூவிளங்காய் | 13, 14, 15, 16 |
| ஒட்டி | தேமா | 1, 2, |
| அமர்ந்தே | புளிமா | 3, 4, 5 |
| உறுப்பும் | புளிமா | 6, 7, 8 |
| அசைத்தல் | புளிமா | 9, 10, 11 |
| அதுவெனுமே | கருவிளங்காய் | 12, 13, 14, 15, 16 |

1 2 3 4 5 6 7 8 9 10 11 12 13 14 15 16
சுற்றிச் சுழன்றுதின் தோ ள் ம த ம் கைகால்கள் கூ ந்த லொ டு

மேற்கண்டவாறே அந்த நாலடி 4×5=20 சீர் கொண்ட கட்டளைக் கலித்துறை வரிசை நான்கிலும் 16,—எழுத்துக்களே வருகின்றன. இனி நிரை அசை கொண்டு துவங்கும் 17,—எழுத்துக்கள் வரும் பாடலைப் பார்ப்போம்.

## 159. செய்யுள்

உணர்த்திட ஒன்றினை ஒவ்வாத சிற்ப உருவமைத்தார்
தனித்தனிக் கொள்கையின் சான்றாகச் சார்புச் சமயம் வைத்தார்
புணர்த்திடப் பொய்மையில்பொல்லாமைசொல்லிப்பணியவைத்தார்
அனைத்திலும் சம்மதம் ஆமென்றே ஆய்வை முடக்கினரே''

—புரட்சிதாசன்

மேற்கண்ட செய்யுளில் முதலடியில் வரும் ஐந்து சீர்களிலும் முறையாக எண்கள்; 17 வருவதறியவும்.

| | | |
|---|---|---|
| 1. | கருவிளம் | 1, 2, 3, 4 |
| 2. | கூவிளம் | 5, 6, 7 |
| 3. | தேமாங்காய் | 8, 9, 10 |
| 4. | தேமா | 11, 12, 13 |
| 5. | கருவிளங்காய் | 14, 15, 16, 17 |

என, மேற்கண்ட சீர்களும் எண்ணிக் கொள்ளப்பட்ட எழுத்துக் களும் அனைத்து அடிகளிலும் வந்திருப்பதறியவும்.

மேற்கண்ட செய்யுள் நிரையசையில் துவங்கிய பாடல், 17 எழுத்துக்கள் கொண்டவை. பொழிப்பெதுகையாக; உணர்த்திட தனித்தனி, புணர்த்திட, அனைத்திலும் என ஒரே விகற்பத்தில் எல்லா அடித் துவக்கத் தலைப்புச் சீர்களும் கருவிளம், கருவிளம் என்றே அமைந்திருப்பதறியவும்.

## கலி நிலைத் துறை

ஒரு தேமாவும், மூன்று கூவிளமும் கொண்டு வரிசைப் படுத்திப் பாடல் எழுதி எழுத்தெண்ணினால் 11, எழுத்துக்கள். அவற்றில் நான்கு அடி கொண்டால் அளவடியில் கட்டளைக் கலியும், துறையும் வருகிறது. அவ்வாறே ஒரு மாவும், ஒரு கருவிளமும், இரண்டு கூவிளமும் கொண்டால் 13 எழுத்துக்கள் வருகின்றன.

அவற்றில் நான்கு அடி கொண்டால் அளவடியில் 13,— எழுத்துக்கள் கொண்ட மேற்கண்ட பாவும், துறையும் வருகிறது. முதலடி இரண்டும் 11,—எழுத்துக்கள், பிற இரண்டடி 13,— எழுத்துக்கள் கொண்டதாக, ஒரு செய்யுள். கீழ்க்கண்டவாறு ;

## 1. கலி நிலைத் துறை

### 160. செய்யுள்

| எழுத்து | | சீர் |
|---|---|---|
| 11. | ஆடுதல் பாடுதல் ஆடிப்பாடலே | 4 |
| 11. | கூடுதல் பேசுதல் கூடிப்பேசலே | 4 |
| 13. | நாடுதல் பகைஎனில் நலத்திற்காகுமோ? | 4 |
| 13. | தேடுதல் இழிவெனில் சிறப்பிற்காகுமோ'' | 4 |

—புரட்சிதாசன்

## கட்டளை வெண்பா

வெண்பாவிலும் கட்டளையுண்டு. கட்டளை என்பதே எழுத்தெண்ணிச் சீர் தொடுத்து அளவடிகளால் உணர்த்துவது. வெண்சீர் வந்தால் இத்தனை எழுத்து, இயற்சீர் வந்தால் இத்தனை எழுத்து, அதற்குரிய சீர்கள் விரவி வந்தால் இத்தனை எழுத்து என்ற வரை நிலை இருக்கிறது.

கீழக்காணும் வெண்பாவில் ஈற்றடியான (கடைசி அடியான) நான்காவது அடியினைக் கணக்கிற் கொள்ளாது மூன்றடிக்குள்ள சீர் வரிசையில், ஒவ்வோர் அடிக்கும் 12,—எழுத்துக்கள் வரத் தொகுக்கப்பட்ட கட்டளை வெண்பா.

## 1. கட்டளை வெண்பா

### 161. செய்யுள்

''சொல்லினைச் சுட்டும் தொடரெழுத் தத்துடன் 12
நல்லசைச் சீரும் நடைத்தனையும்—வல்ல 12
அடி, தொடை ஆறும் அருந்தமிழ்ப் பாவின் 12
முடியும் உறுப்பும் முதல்'' 8

—புரட்சிதாசன்

முன்னரே தெளிவாகக் கூறியவாறு சீர் எண்ணிக் கொண்டாலும், எழுத்தெண்ணிக் கொண்டாலும் (ஒற்று) அதாவது புள்ளி எழுத்து நீக்கிக் கொண்ட கணக்கெழுத்தே எண்களுக்கு வரிசை வரும். நான்கு பாவினமான ஆசிரியம், வெண்பா, கலி, வஞ்சி, ஏன்? மருட்பாவிற்கும் அதற்குரிய இலக்கணச் சீர்கள் கொண்டு எழுத்தெண்ணித் தொகுத்தால் அனைத்துப் பாவினமும் ஓசை நயத்தில் தெளிவும், ஒழுங்கும் பெறும் என்பதற்குப் பல சான்றுகள் இருக்கின்றன.

ஆனாலும் கட்டளையில் கலிப்பாவும், துறையும் சிறப்பாகச் சொல்லப் பெற்றிருக்கின்றன. அடிகள் மிகுந்தாலும், குறைந்

தாலும் நமக்குக் கிடைத்திருக்கும், செய்யுள் இலக்கியங்கள் அனைத்துமே எழுத்துக் கணக்கில் ஒரு சீர், நேர் ஓரெழுத்து, ஒரு சீர், நிரை இரண்டெழுத்து என 'தேமா'வில் 'நேர் நேர்' இரண்டெழுத்து, 'நிரை நேர்' மூன்றெழுத்து, விளச்சீரில் 'கூவிளம்' மூன்றெழுத்து, கருவிளம் நான்கெழுத்து காய்ச்சீரில் தேமாங்காய் மூன்றெழுத்து, புளிமாங்காய் நான்கெழுத்து, கூவிளங்காய் நான்கெழுத்து, கருவிளங்காய் ஐந்தெழுத்து, கனிச்சீரில் தேமாங்கனி நான்கெழுத்து, புளிமாங்கனி ஐந்தெழுத்து கூவிளங்கனி ஐந்தெழுத்து, கருவிளங்கனி ஆறெழுத்து, எனத் தெளிவுபடுத்திக் கொள்ளவும்.

மேற்கண்ட ஒரு சீர், இருசீர், முச்சீர், நாற்சீர் தவிர ஐந்து சீர்களெனவும் கூறப்படும். பூச்சீர், நிழற்சீர்கள் பொதுச் சீர்கள் எனக் கொள்ளப்பட்டதால், எழுத்தெண்ணிக் கொள்ளப் படுவதில், மேற்கண்ட முதல் வரிசைச்சீர் எழுத்துக்களில் அவை அடங்கும்.

## 4. வஞ்சிப்பா

### (அதன் இனமும் வகையும்)

### *162.* செய்யுள்

''கனிமுன் நிரையொன்றும் காய் ஒன்றா அச்சீர்
இனிமை மயக்கம் இசைச்சீர்—அணியெனத்
தாழிசை அத்துறை சார்ந்த பலவிருத்தம்
ஏழிசையில் வஞ்சி இயல்''

—புரட்சிதாசன்

வஞ்சிப்பாவினமும்,வஞ்சிப்பாவின் (ஈறாமாறும்) இரண்டாக வரும் முடிவும் கூறுமிடத்து: வஞ்சித் தாழிசை, துறை விருத்தம், வஞ்சிஈறு எனவாகும்.

''வஞ்சிச் சீர்என வகை பெற்றனவே
வெண்சீர்அல்லா'மூ அசை' என்ப''

—தொ. செ. 19

அதாவது வஞ்சிச் சீர் என்பது நிரையிறுதியாகிய மூன்று அசைச் சீர்கள்.

| | 1 | 2 | 3 |
|---|---|---|---|
| தோமாங்கனி | நேர் | நேர் | நிரை |
| புளிமாங்கனி | நிரை | நேர் | நிரை |
| கருவிளங்கனி | நிரை | நிரை | நிரை |
| கூவிளங்கனி | நேர் | நிரை | நிரை |

மேற்கண்ட கனிச்சீர் வகைகளைக் கூர்ந்தறிக. ஆனாலும்,

"சீர்நிலை தானே ஐந்து எழுத்து இறவாது
நேர்நிலை வஞ்சிக்கு ஆறும் ஆகும்"

—தொ. செய். 40

இருசீர் கொண்ட நாலடியில் ஒவ்வொன்றிலும் கடைசிச் சீராக நேர்நிரை கொண்ட வஞ்சித் தாழிசைக்கு, வெண்பா உரிச்சீரான நீண்ட காய்ச் சீர்களே வருகின்றன. எழுத்தாக எண்ணி—ஐந்திற்குக் குறையாது எழுத்தெண்ணும் சீர்வகையாக, கூறுமிடத்து எழுத்தெண்ணிக் கொண்ட ஒற்று நீக்கிக் கொள்வதில்,

| சீர்கள் | அசை | எழுத்து |
|---|---|---|
| கூவிளங்கனி | 3 | 5 |
| நேர் நிரை நிரை | 3 | 5 |
| கருவிளங்கனி | 3 | 6 |
| நிரை நிரை நிரை | 3 | 6 |

கூ வி ள ங் க னி
1 2 3 4 5 ஐந்து எழுத்துக்கள்

க ரு வி ள ங் க னி
1 2 3 4 5 6 ஆறு எழுத்துக்கள்

மேற்கண்ட கூவிளங்கனி, கருவிளங்கனி ஆகிய சீர்களின் எழுத்தெண்ணிக்கையில் முறையே—5,—6, எழுத்துக்கள் வந்திருப்பதறியவும். சீர்களில் ஒற்று நீக்கிக் கொண்டால் அந்த எண் ஒழுங்கு வரவேண்டும். பின் வருவதில் அந்த இலக்கண மறியவும்.

## வஞ்சிப்பாவின் அடிகள்

"வஞ்சி அடியே இருசீர்த்து ஆகும்"

—தொல். செ. 43

ஒரு அடிக்கு இரண்டு சீர்கள் வரவேண்டும். அவ்வாறு நான்கடியும் வரக் குளறடி எனப்படும். குறள் இரண்டு சீரடி என்பது இரண்டு சீர்களால் வந்த குறளடி எனவாகும்,

"தன்சீர் எழுத்தின் சின்மை மூன்றே"

"முச்சீரானும் வரும் இடன் உடைத்தே

—தொ. செ. 44.45

"தண்சீர் தனதொன்றில் தன்தளை"

—யாப்பருங்கலம் 10—1

நின்ற சீர் இறுதியசையும், வரும் சீரின் முதல் அசையும் ஓசையால் இணைவது 'தன்தளை' எனப்படும். ஒன்றிய சீர் 'தன் சீர்' எனப்படும். அதனையே 'தன்சீர்' என்று பாடம் கொண்டார் யாழ்ப்பாணம் (சுன்னாகம்) அ. குமாரசாமி பிள்ளை'' என்றார்—ஐயா வேங்கட சாமி நாட்டார்.

தொல்காப்பியர் 'தன்சீர்' என்று கொண்ட பொருட்சீர் தலைப்பின் இரண்டாவது எழுத்து இரு சுழி 'ன' கர ஒற்றினை, மூன்று சுழி, 'ண' கர ஒற்றாக யாப்பருங்கலக் காரிகையார் கொண்டார். 'ன' என்பது 'ண' எனவாக வந்தாலும் இங்கு பொருள் ஒன்றே என்பது குடுப்பிடத் தக்கது. தொடர்ந்து தொல்காப்பியர்,

''தன்சீர் எழுத்தின் சின்மை மூன்றே''

என அதன் சிறுமை மூன்றெழுத்து என்றும் கூறி, அவை மூன்று சீர்களிலும் வரும் என்று எழுத்துக்களையும், சீர்களையும் வகை பிரித்துக் குறிப்பிட்டார். காக்கை பாடினியாரும்,

''சிந்தடி குறளடி என்றஇரண் டடியால்
வஞ்சி நடக்கும் வழக்கினை யுடைய''

—யாப்பருங்கலம்—27

என்றார்.

## வஞ்சித் தாழிசை

''குறளடி நான்கின மூன்றொரு தாழிசை''

—யா. அரு. 35—1

இரண்டு சீர்கள் கொண்டது ஒரு அடியாக, நாலடியில் மூன்று தலைப்புக்கு ஒரு பொருள் கொண்டு அடுக்கி வருவது போல வஞ்சித் தாழிசை என்றார். அதுவும் 'அடிமறி' என்னும் இலக்கணத்தில் முடிவதாக மூன்றசைச் சீர்களில், வஞ்சித்தாழிசை

### 1. வஞ்சித் தாழிசை

### 163. செய்யுள்

**1. ''கொடியோர்கள் படிப்பினையில்**
**விடியாத கிடப்பினையில்**
**அடிவாங்கு பிடிப்பினையில்**
**இடிதாங்கும் மறத்தமிழா!**

**2. இல்லாத ஒரு பொருளை**
**இயலாத செயற் பொருளை**
**அல்லாத கருப்பொருளை**
**அடைந்தாயா மறத்தமிழா?**

3. சிந்தித்துச் சிறக்காமல்
சிறப்பினிலே நிறக்காமல்
மந்தத்தைத் துறக்காமல்
மயங்குவதோ மறத்தமிழா?''

—புரட்சிதாசன்

''குறளடி நான்மையிற் கோவை மூன்றாய்
வருவன வஞ்சித் தாழிசை''

என்றார். மேற்கண்ட பாடலில் மூன்று சீர்களுடைய, தாழிசைக் குரியஅனைத்துக் காய்ச்சீர்களும் வந்திருப்பதறியவும்.

## வஞ்சித்துறை

''தம்தம் இயலின் மரபொடு முடியின்
அத்திரம் தானே துறைஎனப் படும்''

—தொ. செய்—201

அந்தந்தப் பாவின இலக்கண மரபுகளைப் பின்பற்றும் திறத்தலைப்புகளையே துறை என்றார் தொல்காப்பியர். இரண்டு சீர் கொண்டது ஒரு அடியாக, நான்கு அடிகள் ஒரு பொருள் தலைப்பின்மீது ஒன்றாக வருவது வஞ்சித்துறை.

## 1. வஞ்சித்துறை

### *164.* செய்யுள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நேர் | நிரை | நிரை | நிரை | நிரை | —அசை |
| கூ | விளங் | கனி | கரு | விளம் | —சீர் |
| தா | தனத் | தன | தன | தன | —சந்தம் |
| பா | மலர்ந் | தன | பதம் | என | —பொருள் |
| பண் | ணிசைந் | தன | இதம் | என | — '' |
| யா | ழிசைந் | தன | சுரம் | என | — '' |
| யாங் | கனும் | தமிழ் | தமிழ் | என | — '' |

—புரட்சிதாசன்

மேற்கண்ட 'பாமலர்ந்தன' தொடரின் கீழ்வரிசை நான்கிலும் சீர்களுக்கு பொருட்பாடல் திணிப்பாக; பண்ணிசைந்தன், யாழிசைந்தன என ஒன்றின் மேல் ஒன்று ஏறும் 'வகையுளி' இலக்கணம் வந்ததறியவும். ஆனால் 'பதம் என, இதம்என; சுரம் என, தமிழ் என' வந்த ஒழுங்கிணையும் அறியவும்.

## 2. வஞ்சித் துறை

### 165. செய்யுள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நிரை | நிரை | நிரை | நேர் | நிரை | அசை |
| கரு | விளங் | கனி | கூ | விளம் | சீர் |
| தனத் | தனத் | தன | தா | தன | சந்தம் |
| குயில் | கள்வந் | தன | கூ | வின | பொருள் |
| குழ | லும்இன் | சுவை | ஊ | தின | ,, |
| மயில் | கள்கண் | டன | ஆ | டின | ,, |
| மயங் | கியே | தமிழ் | தமி | ழென'' | (தனதன) |

—புரட்சிதாசன்

மேற்கண்ட வஞ்சித்துறைக்குரிய பாடல்களில்

1. கூவிளங்கனி — கருவிளம்
2. கருவிளங்கனி — கூவிளம்

என்ற சீர்களுக்கு உரியனவாக மேற்கண்ட பாடல்கள் தொகுக்கப்பட்டிருக்கின்றன. ஆனாலும் இரண்டாவது எண் இட்ட பாடலென ஒவ்வொரு அடிக்கும் இரண்டாவது சீர்களான கூவின, ஊதின, ஆடின, தமிழென, என்பது தத்தகாரத்திற்கு மட்டும் தானன, தனதன, என்னும் ஒவ்வொன்றையும் எழுத்தெண்ணினால் மூன்றாக்வும் ஒன்று மட்டும் நான்காகவும் சீர்க்கணகிற்கு நேர் நிரை நிரை நிரை' என இரண்டிரண்டாக வந்திருப்பதறியவும்.

மேற்கண்ட பாடல் அடிகளின் துவக்கமான :

| | |
|---|---|
| கு யி ல் கள் வ ந் தன | சீர் சேர்த்தால் கருவிளங்கனி |
| 1 2 3 4 5 6 | சீர்பிரித்தால் புளிமா, கூவிளம் |
| கு ழ லு ம் இ ன் சு வை | சீர் சேர்த்தால் கருவிளங்கனி |
| 1 2 3 4 5 6 | சீர்பிரித்தால் புளிமா, கூவிளம் |
| ம யி ல் கள் க ண் டன | சீர் சேர்த்தால் கருவிளங்கனி |
| 1 2 3 4 5 6 | சீர் பிரித்தால் புளிமா, கூவிளம் |
| ம ய ங் கி யே த மி ழ் | சீர் பிரித்தால் கருவிளங்கனி |
| 1 2 3 4 5 6 | சீர் பிரித்தால் புளிமா, கூவிளம் |

இவ்வாறே 'குயில்கள் வந்தன' தொடர்ந்து அந்தப் பாடல்கள் இரண்டிரண்டாக சீர் உள்ள நான்கடி—ஒவ்வொரு அடிச்சீர் தமிழ் எழுத்துக்களில் ஒற்று நீக்கி, மொத்த எழுத்து 6, 6—என வந்திருப்பதறியவும்.

க ரு வி ள ங் கனி
1 2 3 4 5 6 — 6 எழுத்துக்கள்

புளிமா கூவிளம்
1 2 3 4 5 6 — 6 எழுத்துக்கள்

பாடல் எழுத்துக்களில் மட்டுமல்ல சீர் எழுத்துக்களில் கூட ஒற்று நீக்கி எண்ணப்பட்டால் அவ்வாறு (6,6) எழுத்துக்கள் ஒழுங்காக வந்திருப்பதறியவும். மேற்கண்ட பாடலின் கடைசி வரியில் சீர்பிரித்தால் ''மயங்கி யேதமிழ்'' என்பதில் புளிமாச் சீரும், கூவிளச் சீரும் சீர்க்கணக்கிற்கு வந்தாலும், சொற் பொருட்டொடர் பிரித்தால் 'மயங்கியே தமிழ்' என்று வரும், அப்போது 'மயங்கியே' என்பது விளச்சீரில் கருவிளமாகவும் 'தமிழ்' என்பது வெண்பாவின் ஈற்றுச் (கடைசி) சீரான 'மலர்' என்றஇலக்கணத்திற்கு வந்து விடுகிறது. சீர் ஒழுங்கு கொண் டால் மயங்கி, யேதமிழ் என்பதைத் தனித்தனிச் சீரான புளிமா கூவிளம் என்ற சீராகவும், சேர்த்தால் கருவிளங்கனி என்ற சீரும் கொள்ளப் பெறும், அப்படிக் கொண்டால் எழுத்தின் மேல் எழுத்தேறிய 'வகையுளி' இலக்கணத்தில் நிறைவு கொள்ள வேண்டும்.

## வஞ்சி விருத்தம்

ஓர் அடியாக நான்கு அடிகள், மூன்று சீர்களால் வந்தவை 'முச்சீர் சிந்தடி' எனப் பெயர் பெறும்,

''சிந்தடி நான்காய் வருவன வஞ்சி
யெஞ்சா விருத்த மென்மனார்ப் புலவர்''.

—யாப் அரு—92

என்றார்.

வஞ்சி விருத்தத்திற்குரிய இலக்கணச் சீர்வகை இலக்கியமாக ஒரு விருத்தம். கீழ்க்கண்டவாறு:

### 1. வஞ்சி விருத்தம்

#### 166. செய்யுள்

1. ''தென்றல் சூடிய குன்றினில்
குன்றில் ஆடிய தென்றலில்
வண்டின் கூட்டம் வந்ததா
பெண்டிற் தோட்டம் கண்டதா?''

2. ''கொட்டுப் பூக்கள் குவிந்தன
குன்று நீரில் மிதந்தன
திட்டுத் திட்டாய்த் திரண்டன
தேனாய் நீரில் கலந்தன''

—புரட்சிதாசன்

## வஞ்சிப்பா (ஈறு)

குறளடி வஞ்சிப்பாவும், சிந்தடி வஞ்சிப்பாவும், ஆகத் தனிச் சொல் பெற்று ஓர் அடிக்கு மூன்று சீர்க்ளென ஆறு அடிகள் கொண்டு, ஆசிரியச் சுரிதகத்தில் இரண்டடி பெற்று முடியும் ஒரு வஞ்சி. நேர்நிலை பெற்ற வஞ்சிக்கு எழுத்தெண்ணிக்கையில் ஐந்தும், ஆறும் பெற்ற தொல்காப்பியச் செய்யுள் கூறியவாறு கீழேகாணும் களிச் சீர்களில்;

### 1. வஞ்சிப்பா

### 167. செய்யுள்

"ஒட்டி நின்றவர் உறவுகொண்டவர் ஓடுவாரவர்
வெட்டிவீழ்ந்தவோர் விறகுபோலுடல் வேகும் தீயிடை
எட்டிநிற்பதில் இறப்புஎன்பதை எண்ணுவாரவர்
கட்டிக்காத்தவை கடைசிமூச்சிலே கண்ணை மூடினால்
விட்டுப்போமென விடிந்தநாட்களைத் திட்டுவாரவர்
தொட்டுக் கொண்டதைத் துறக்க அஞ்சியே பற்றுவாரவர்
ஆயினும்
பசித்தழும் கொடுமையில் படுதுயர்
இசிப்பதை விதிஎன நினைப்பதா மனிதா

—புரட்சிதாசன்

மேற்கண்ட வஞ்சிப்பாவில் ஆறாவது அடியை அடுத்து— 'ஆயினும்' என்ற தனிச் சொல் வந்து 'அசைக்கூன்' என்ற பெயரில் இடைப்பட்டுக் கூவிளம் (நேர்நிரை) என்ற தனிச்சீரில் அதுவும்; அடுத்து மூன்றுசீர் கடைசி வரி நான்கு சீர், அனைத்தும் விளச்சீரில் முடிந்திருப்பதை அறியவும். இறுதிச்சீர் புளிமா.

அப்படி வந்த 'ஆயினும்' என்ற (தனிச்சொல்) விட்டிசையை தொல்காப்பியர்,

"அசைகூன் ஆகும் அவ்வயி னான"

—தொ. செய்.—46

என்றார்.

மேற்கண்ட வஞ்சிப்பாவிலும், ஆறு அடிகளில், ஒவ்வொரு அடிக்கும் மும்மூன்று சீர்களாக, இரண்டு கூவிளங் கனியும், ஒரு கருவிளங்கனியும், முறையே ஒற்றுநீக்கி எண்ணப்பட்ட தமிழ் எழுத்துக்கள் ஐந்தாகவும், ஆறாகவும், வந்திருப்பதைக் கீழே கூர்ந்து அறியவும்.

(கூவிளம்) 'ஆயினும்'—என்ற சொல்லுக்கு மூன்று தமிழ் எழுத்துக்களும், மற்ற 'கருவிளம்' ஏழுசீர்களுக்கும் நானாங்கு $4 \times 4 = 16$ எழுத்துக்களும் வந்திருப்பதையும் அறியவும்.

## வஞ்சியப்பா ஈறு

| 5 எழுத்து கூவிளங்கனி | 6 எழுத்து கருவிளங்கனி | 5 எழுத்து கூவிளங்கனி | |
|---|---|---|---|
| ஒட்டிநின்றவர் | உறவுகொண்டவர் | ஓடுவாரவர் | |
| 1 23 45 + | 1234 56 + | 12345 | =16 |
| வெட்டிவீழ்ந்தவோர் | விறகு போலுடல் | வேகும்தீயிடை | |
| 1 23 4 5 + | 1 2 3 4 4 6 + | 1 2 3 4 5 | = 16 |
| எட்டி நிற்பதில் | இறப்புஎன்பதை | எண்ணுவாரவர் | |
| 1 2 3 4 5 | 12 34 5 6 | 1 2 3 4 5 | = 16 |
| கட்டிக் காத்தவை | கடைசிமூச்சிலே | கண்ணைமூடினால் | |
| 1 2 3 4 5 + | 1234 56 + | 1 2 345 | = 16 |
| விட்டுப்போமென | விடிந்த நாட்களை | திட்டுவாரவர் | |
| 1 2 3 4 5 + | 1 2 3 4 5 6 + | 1 2 3 4 5 | = 16 |
| தொட்டுக் கொண்டதை | துறக்க அஞ்சியே | பற்றுவாரவர் | |
| 1 2 3 4 5 + | 1 2 3 4 5 6 + | 1 2 3 4 5 | = 16 |

ஆயினும்
1 2 3

| | | | |
|---|---|---|---|
| பசித்தழும் | கொடுமையில் | படுத்துயர் | |
| 12 34 | 1 2 3 4 | 12 34 | |
| இசிப்பதை | விதிஎன | நினைப்பதா | மனிதா! |
| 12 34 | 1234 | 1 2 34 | 123 |

இசைக்கும், தாளத்திற்கும் கட்டுப்பட்ட சீரமைப்புச் சொற்கள் நிரம்பியவை வஞ்சிப்பாவினம். மயக்கந்தரும் அந்த ஓசைத் தொகுப்புக் கொண்டவற்றை,

"தூங்கலிசையன வஞ்சி"

என்றார் காக்கை பாடினியார் (90).

## 5. மருட்பா

### (அதன் இனமும் வகையும்)

### 168. செய்யுள்

"பாப்பழுக்கக் கொண்ட பல உறுப்பும் தன்தளையும்
நாப்பழுக்கச் செய்யுள் நலம்புனையும்—யாப்பு
குறட்பா, பலசீர்ப்பாக் கொண்டனபோல் இந்த
மருட்பாவிற் கில்லைபிற மாண்பு"

—புரட்சிதாசன்

அகவல், ஆசிரியம், வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா என இவைகளுக்குச் சொல்லப்பட்ட சீர்கள் கொண்ட இலக்கணம் மருட்பாவிற்கில்லை. ஆனால் உறுப்புகளெனச் சில, பல அடிகள்

கொண்டு பாடலாக நிற்கும் அந்த மருட்பாவிற்கு மாமுன்நிரை, காய்முன்நேர், விளமுன் நேர் என வெண்சீர் இயற்சீர், காய் விளம், வரும் வெண்பா உரிச்சீர் நான்கு கொண்டது ஒரு அடியாகச் சில அடிகளும், பல அடிகளும், கடைசி இரண்டடி, மாமுன் நேர், விளமுன் நிரை என வரும் ஆசிரியத் தளையால், அவற்றிலேயே முதலடி மூன்று சீருள சிந்துக் குறளடியாகவும். இரண்டாவதடி நான்கு சீருள்ள அடியாகவும். முடிய வேண்டு மென்ற மரபு இருக்கிறது.

மருட்பா என்ற தலைப்பிற்குக் கொள்ளப்படும் பொருட் பாடலுக்கேற்று உறுப்புச் சீர்கள் சொல்லப்பட்ட மரபினை நியாயப்படுத்தி இருக்கின்றனர். தொல்காப்பியரும் மருட்பா இலக்கணம் கூறுமிடத்து : தொ. செய்—79—83

79. "துள்ளல் ஓசை கலி என மொழிப"
80. "தூங்கல் ஓசை வஞ்சி ஆகும்"
81. மருட்பா ஏனை இருசார் அல்லது
82. தான்இது என்னும் தனிநிலை இன்றே
83. அவ்வியல் அல்லது பாட்டு ஆங்குக்கிளவார்"

என்றார். ஓசைச்சிறப்பில்; கலிப்பா துள்ளல் ஓசையுடையது, வஞ்சிப்பா மயக்க ஓசையுடையது. என்று தான் கூறுகிறார்.

அவரே அடுத்தவரியில் "தனக்கு இலக்கணச் சீர் இதுதான் என்று உறுதிப்படுத்தி நில்லாமல், மேற்கண்ட துள்ளற் கலிப்பா வையும் தூங்கல் வஞ்சிப்பாவையும் கொண்ட சார்பு வழியில் அவை தழுவி அப்படியொருபாட்டு மருட்பா" என்றும் கூறுகிறார்.

"காட்சி முதலாக் கலவியி னொரு தலை
வேட்கையிற் புலம்புதல் கைக்கிளை யதுதான்
கேட்போ ரில்லாக் கிளவிகள் பெறுமே"

என்ற காக்கை பாடினியப் பொருள் விளக்கமாக மருட்பாவை, தனித்த ஒரு காட்சி கண்டு அதனால் ஈர்க்கப்பட்ட காமத் தழுவுதலும், அவ்விருப்பத்தில் புலம்பலும், ஒருதலைக் காமமான கைக்கிளை மொழிகளை ஏதோ பயித்தியக்காரப் புலப்பமென எண்ணுமளவிற்குப் பிதற்று சொற்களுடையதென்றார்.

இத்தன்மையுணர்த்தும் தொல்காப்பியரும் அனைத்து வகைப் பாக்களிலும், கைக்கிளை பாடப்பெறும் என்றவாறு.

கலிவெண் பாட்டுகளும், கைக்கிளைச் செய்யுள் என்றார்.

''புறநிலை, வாயுரை,செவியறிவு றூஉ எனத்
திறநிலை மூன்றும் திண்ணிதின் தெரியின்
வெண்பா இயலினும் ஆசிரிய இயலினும்
பண்புற முடியும் பாவின என்ப''

என்றார். —தொ. செய் 154

'புறநிலை வாயுரை, செவியறிவுறூஉ'' என்பனவாக் களவிற்கும், கற்பிற்கும் கடந்தவையான புறத்துறை நிலைப் பாடல்களில் படிப்பினையால் கருத்துமிக்க பொறுப்புள்ள வாய்ப்பாடல்களில், கண்ணால் பார்த்து, காதால் கேட்டறிந்த சீர்தூக்கும் அறிவுரைப் பாடல்களில் தெளிவாக வெண்பா ஆசிரியப்பாவிற்குரிய சீர்கள் வரவேண்டுமென்றார்.

''கைக்கிளை தானே வெண்பாவாகி
ஆசிரிய இயலான் முடியவும் பெறுமே''

—தொ, பொ. 431

என்றார்.

இதை உறுதிப் படுத்துவதாக காக்கை பாடினியமும்.

''வெள்ளை முதலாக ஆசிரியம் இறுதி
கொள்ளத் தொடுப்பது மருட்பா ஆகும்''

என்றது. இதனைத் தெளிவுபடுத்துவதில் புறப்பொருள் வெண்பா மாலை, ஐயனாரிதனார்,அவரே மருட்பாவின் முதல் தலைப்பிற் குரிய கைக்கிளைக்கு ஆண்பாற் கூற்று ஒன்பதெனவும்; பெண்பாற் கூற்று பன்னிரண்டுமாக—21 (இருபத்தோறு) மருட்பாவகை பாடினார்.

மேற்கண்டவாறு மருட்பாவிற்குத் தெளிவான இலக்கணம் இவ்வாறிருக்கத் தொல்காப்பியச் செய்யுள் இயலைத் தழுவாமலும் தழுவியுமாக,

''புண்பாற் புறநிலை பாங்குடைக் கைக்கிளை'' என்ற அமுத சாகர யாப்பருங்கல உரையாசிரியர் குணசாகரர் சமணத் துறவியாக இருந்தும் அவர்கால வழக்கிருந்தமை பின்பற்றி வர்ணத் திணிப்பில், பன்னிரு பாட்டியல் வழியில்.

பிராமணருக்கு வெண்பா
சத்தியருக்கு ஆசிரியம்
வைசியருக்கு கலிப்பா
சூத்திரர்க்கு வஞ்சிப்பா என்பதோடு,

பஞ்சம சாதியான வினைவலர், கடைபோர் என்பவருக்கு அடிமை என கடைநிலை வர்ண ஆணைக் கருத்தில் பாடல் கூறவேண்டும் என்று கூறுகிறார். இந்த மருட்பாவில் உயர்ந்தவர்

களாக அவர்களால் திணிக்கப்பட்டு, நெறிப்படுத்தப்பட்ட கருத்துக்கள் உள்ளனவாக மேற்கோள் பொருட்பாக்களையும் குணசாகரர் கையாண்டிருக்கிறார். அந்தப் பாடல்.

"வெண்பா முதலா நால்வகைப் பாவும்
எஞ்சா நால்வகை வருணம் போலப்
பாவினத் தியற்கையு மதனோ றற்றே"

"வேதவாய் மேன்மகனும் வேந்தன் மடமகளும்
நீதியாற் சேர்ந்து நிகழ்ந்த நெடுகுலம் போல்
ஆதிசால் பாவும் அரசர் வியன்பாவும்
ஓதியவா றோத மருட்பாவா யோங்கிற்றே"

என்றார்.

மேற்கண்ட பாடற் பொருள்களைக் கூர்ந்து அறிக. வெண்பா ஆசிரியம், கலி, வஞ்சி—என்ற நால்வகைப்பாவினமும் நால்வகை பிராமண, சத்திரிய, வைசிய, சூத்திர வகைத் தன்மை யுடையனவாகக் கொள்ளப்பட்டதாம், வேதத்தை ஓதும் பிராமணன் மகனை மேல் மகன் என்றார். அத்துடன் சத்திரியன் (வேந்தன்) மகளைச் சேர்ந்து அந்த நெறிசார்ந்த வாழையடி வாழையாகக் குலமென அரசர்க்குரிய பாவென ஆசிரியமும் கலந்து பாடியவாறு 'மருட்பா' என்றார். அதாவது பிராமண னுக்கும் அரசகுமாரிக்கும் பிறந்தவன் முதன்மைப் படுத்தப்படு கிறான்அதாவது, ஆதிசால் பாவான–அவர்கள் திணித்துக் கூறிய பிராமண வெண்பாவும், அரசர் வியன்பாவான ஆசிரியப்பாவும் சேர்ந்து மருட்பா என்பதை அவர்களின் வர்ண தர்மங்களுக்கு ஞாயப்படுத்தி இருக்கின்றனர். என்னே திணிப்பு. அதையும் உறுதிப்படுத்த உரையாசிரியர் குணசாகரர், தொல்காப்பியரின்.

"பொலிமின் என்னும் புறநிலை வாழ்த்து"
—தொ. பொ. செய்—110

என்ற பாடற்பொருளுக்கு.

"தென்றலிடை போழ்ந்து தேனார் நறுமுல்லை"

என்ற பாடலை 'புறநிலை வாழ்த்து மருட்பா' என்ற தலைப் பிற்கு மேற்கோள் காட்டியும். கைக்கிளை மருட்பாவிற்கு,

"வழிபடு தெய்வ நிற்புறங் காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து"
—தொ. பொ செய்—110

என்ற பாடல் விளக்கமாக

திருநுதல்வேர்வரும் புந்தேங்கோதை வாடும்" என்ற தலைப்புடைய (புறப் பொருள் வெண்பாக் கைக்கிளை—3) ஐயனாரிதனாரின் வெண்பாவை ஒருதலைக் காமத்தின்

துணிச்சலாக அணங்கென்ற தெய்வப் பெண்ணைப் பார்த்துக் புலம்பியதாக மேற்கோள் பாடலையும் காட்டி இருக்கிறார் ஏன்? நாட்டுப்புறப் பெண்ணழகைப் பார்த்து வியந்து. பாராட்டக் கூடாதோ? திணிப்பு.

"பலமுறையும் ஓம்பப்படுவன" என்ற பாடலையும் செவியறிவுறூவு மருட்பாவிற்கு "பல்யானை மன்னர்" என்ற பாடலையும்,

மேற்கோள் பாடலாகச் சொல்லியதுடன், மேற்கண்ட பாடற் கருத்துக்களே மருட்பா வகையான இலக்கியமென்று அதற்கும் ஒரு பாடலை எடுத்துக்காட்டாகத் திணித்து ஞாயப் படுத்தி, வேறு பொருள்படுத்தி, மற்ற வகையில் யாரும் மருட்பாவிற்கு ஞாயமான பாடல் எழுதிவிடக் கூடாது என்று அந்த வர்ண சாதி தர்மமுள்ள திணிப்புக்கருத்துக்களே பின்பற்றப் படவேண்டுமென்ற கட்டாய முனைப்பில் தன்னை நிறங்காட்டு கிறார் சமணத்துறவி குணசாகரர். அமுதசாகர யாப்பருங்கலக் காரிகைக்கு அவ்வாறு குணசாகரர் அப்படிப் பொருள் உரைப் படுத்தினாரா? இல்லை! அவர் பெயரில் அதைத்தொகுத்த வேறு மற்றவர் செய்த திணிப்பா? என்பது ஆய்வுக்குரியது,

யார் செய்தாலும் அது கட்டாயத் திணிப்பென்று ஒரு சார்புப் பொருள் கொண்டு அவ்வாறு மத இலக்கியம் கூறி இருப்பது நீக்கப்பட வேண்டியதே, ஏன்? புறக்சணிக்கப் பட வேண்டியதே.

"நெடுவெண்பாட்டே குறுவெண்பாட்டே
கைக்கிளை பரிபாட்டு, அங்கதச் செய்யுளொடு
ஒத்தவை எல்லாம் வெண்பா யாப்பின"

—தொ. செய்—114

"பாவிரி மருங்கினைப் பண்புறத் தொகுப்பின்
ஆசிரியப்பா, வெண்பா என்று ஆங்கு
ஆயிரு பாவினுள் அடங்கும்"

—தொல்—செய்—103

பாவின வரிசையை ஒழுங்காக வரிசைப்படுத்தினால் ஆசிரியப்பா, வெண்பா, கலி, வஞ்சி, ஆகும். மேற்கண்ட ஆசிரியத்திலும், வெண்பாவிலும், பஃறொடை வெண்பா எனும் நீண்ட பாட்டுகள், திருக்குறள் போன்ற குறைந்த அடிகளுடைய குறளடி வெண்பாவும், கைக்கிளைப்பாட்டு பரிபாடல், அங்கதச் செய்யுள் என ஒத்தவை எல்லாம் வெண்பாவில் அடங்கு மென்றார். இலக்கண உறுப்புகளை மட்டும் எடுத்தாண்ட செய்யுள் நெறியுடன் தொல்காப்பியம் கூறியவாறு, [கலியும்

வஞ்சியும் கலவாத மருட்பா உறுப்பினச் சீர்களாக, வெண்பா ஆசிரியத்தளை கொண்டு வகை, வரிசைப்படுத்தி அவற்றிற்குரிய இலக்கண இலக்கியமாகச் சில பாடல்கள் இயற்றி வரிசைப்படுத்தி இருக்கிறேன் அவற்றைக் கீழ்கண்டவாறு அறியவும்.

புறநிலை வாழ்த்தும், கைக்கிளையும் வாயுரை வாழ்த்தும் செவியறிவு றூவு' வும் என்னும் நான்கு வகைப் பொருள்மேல் வருவனவாக மருட்பா.

## 1. புறநிலை வாழ்த்து மருட்பா

### 169. செய்யுள்

(வெண்பாச்சீரில் மூன்றடியும், அகவலடியில் இரண்டுமாக மருட்பா)

**1. மக்கள் அறிவை மதவாதக் கீழ்மையில்**
**2. தக்கவைத்துக் கொண்ட தடயத்தை—சுக்குநூற்**
**3. ஆக்கிப் பெரியார் அறங்காக்கும் தென்னகத்தை**

**1. காப்போம் சூளுரைக் கவிதையில்**
**2. வார்ப்போம் எழுக வண்டமிழ் இனமே''**

**—புரட்சிதாசன்**

மேற்கண்ட பாடல் தொல்காப்பியரின்,

''பொலிமின் என்னும் புறநிலை வாழ்த்தே''

—தொ. செய்—106

என்பனவற்றிற்கு; ஆர்த்தெழுந்து புற நிகழ்வுகளைச் சொல்லிப் 'பொலிவுபெறஎழுக' என வாழ்த்தியல் வந்ததறிக மேற்கண்ட மக்கள் அறிவை'' என்ற பாடலில், வெண்பாச் சீரில் ஒரு அடிக்கு நான்கு சீராக மூன்று அடிகளுக்கு முன்னாங்கு ($3 \times 4$) பன்னிரண்டு சீர்களும்; நான்காவது அடியில் மூன்று சீரும், இறுதியடியில் நான்கு சீரும் ஆசிரியத் தளையில் வந்திருப்பதறியவும். சீழ்க்கண்டவாறு:

## 2. கைக்கிளை மருட்பா

### 170. செய்யுள்

**''நின்றால் இமைத்துடிப்போ நீசிரித்தால் புன்சிரிப்போ**
**சென்றால் இடைச்சிரிப்போ செங்கமலம்—உன் இனிப்போ**

**அள்ளினும் குறையுமோ அருமையாம்**
**தெள்ளினும் தெவிட்டாத் தேனினும் சிறப்பே''**

**—புரட்சிதாசன்**

இது ஒரு தலைக் காம ஏக்கத்தில் நலம் பாராட்டும் புகழ்ச்சி அணி வகையைச் சேர்ந்தது. அத்துடன்

ஓரடி முக்கால் குறளடி எனவாக வெண்பா இலக்கணத்தில் ஏழுசீர் கொண்டனவாகவும், தனிச்சொல் ஒரு சீராகவும் ஆக இரண்டடி நீக்கி, மூன்றாவது அடி மூன்றுசீரும், நான்காவது அடி நான்கு சீரும்என ஆசிரியப் பாவில் புனைந்திருப்பதறியவும்.

## 3. வாயுறை வாழ்த்து மருட்பா

### *171.* செய்யுள்

''நல்லது கேட்க; நயமுற வாழ்வமைப்புச்
சொல்வதில் அன்றோ துணைநலம் அவ்வழி
வெல்வதில் அஞ்சாமை வீரம் தமிழ்ப் பெருமை
மல்லல் மனைமாட்சி மாண்பமை யொப்பக்
குடிப்பிறப் பூராண்மை குன்றாத தொன்மைப்
படிப்பும் பகுத்தறிவும் பான்மையும் ஈயும்
கொடைச்சிறப்புங் கொண்டு குவலய மோங்கப்
படைச்சிறப்புப் பெற்ற பலகற்ற வல்ல
நடைச்சிறப்புக் காட்டுவதில் நாட்டம்—உடைய

உய்ப்பொருள் உலகின் உயர்வாம்
மெய்ப்பொருள் அதுவென மேம்படத் தகுமே''

—புரட்சிதாசன்

இதனை, மெய்ப் பொருள் சொன்னமையால் வாயுரை வாழ்த்தென்றார். தொல்காப்பியரும்,

''வாயுரை வாழ்த்தே வயங்க நாடின்
வேம்புங் கடுவும் போல வெஞ்சொற்
றாங்குதலின்றி வழநனி பயக் குமென்
றோம் படைக் கிளவியின் வாயுறுத்தற்றே''

தொ. பொ. செய்—112.

கசப்பும், கடுமையுமின்றி (அந்தச் சொற்கருத்துத் தழுவாது) நல்வழி பயக்கும் படிப்பினையாக எடுத்துரைத்தல் வாயுரை வாழ்த்தென்றார். மேற்கண்ட மருட்பாப்பாடல் ஒன்பது அடிகள் வெண்பாயாப்புச் சீர்களிலும், (பஃறொடை) கடைசி இருவரிகளில் மூன்று சீர். நான்கு சீர்களென ஆசிரியம்த்திலும் வந்ததறியவும்,

## 4. செவியறி உறூஉ மருட்பா

### 172. செய்யுள்

மாட்டடிமையாக மனித அடிமைகளை
ஓட்டடிமை வாக்கெடுத்தே ஊராண்மைச் சாதி சொல்லிக்
கூட்டணி கொண்டு குலஉறவும் சொல்லிஅதில்
நாட்டைப் பிடித்து நமதர சென்றுரைத்துக்
காட்டாட்சி செய்து கருத்தில் மதவாத
ஓட்டைகளை நீதி ஒழுங்கென்று நம்பவைத்துப்
பாட்டாளி கண்ணீரைப் பன்னீராய்த் தாம்பூசி
ஈட்டும் பொருள் பறிப்பின் இன்னலோ இன்னலைக்
கேட்டால் அடக்கிக் கிளர்ச்சிஎன வாய்ப்பூட்டும்
ஆட்டம் அழியாதோ ஐயகோ—நாட்டிலுள்ள

சாட்சிக்குடன் படாக் குற்ற
ஆட்சி வெறியரை ஆள விடுவதா?

—புரட்சிதாசன்

புறநிலை வாழ்த்துக்களான மருட்பாவில் வெண்பாச் சீர்களும், ஆசிரியச் சீர்களும் தவிர, கலி, வஞ்சி, வகைவராதெனத் தொல்காப்பியரும் கூறுகிறார். கைக்கிளை, வெண்பாச் சீர் ஆகி, ஆசிரியச் சீர்களில் முடியும் என்ற தொல்காப்பியர் இலக்கணத்தை 'மருட்பா' என்று தலைப்பு ஏற்படுத்தி, அதை வரிசைப் படுத்தி, வர்ண தர்மப் பாடல் கருத்துக்களைப் பலரும், பல காலமாகத் திணித்திருக்கின்றனர்.

புறநிலை, கைக்கிளை, வாயுரை, செவியறிஉறூஉ உரை, நான்கும், பிராமணரையும், மன்னரையும், வணிகரையும், வாழ்த்த மேற்கண்ட மூவரை உயர்த்திப் பாடுதல் கடமை என்றும், அவ்வாறன்றி வேறு பொருளில், அவ்வகை பாடக்கூடாதென்றும் குணசாகரர் கூறுகிறார்.

அடிப்படை இலக்கணச் சீரில்லாத மருட்பா என்ற தலைப்பினை, மேற்கண்ட இலக்கணப் புலவர்கள், பிராமன சத்திரிய, வைசிய மூவரைப் பாடப் பயன் படுத்திக் கொண்டது, பொன்னுக்கும் பொருளுக்குமெனக் கொள்ள வேண்டும்.

உரையாசிரியர் குணசாகரர், இசை இலக்கணச் செய்தியுள்ள ஒரு வெண்பாவை, மருட்பாவின் உறுப்புகளைச் சொல்வதற்கு, மேற்கோள் காட்டியும், பொருள் விளக்கம் கூறாது விட்டிருக்கிறார். அந்த வெண்பாவையும், அதன் பொழிப்புரையும் இங்கு கூறுவோம்,

## வெண்பா

"பண்ணும் திறமும் போற் பாவும் இனமுமாய்
வண்ண விகற்ப வகையமையார்—பண்ணின்
திறம்விளரிக் கில்லதுபோற் செப்ப அகவல்
இசைமருட் கில்லை இனம்

அதாவது இசையும் அதை வகைப் படுத்தும் குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என

ச, ரி, க, ம, ப, த, நி,—என்ற சுர வகையினைப் போல, பாவும், அதன் இனங்களும் என்று மருட்பாவிற்கு வணணவிகற் பங்கள் காட்டி அமைக்க முடியாது.

| | | | |
|---|---|---|---|
| பண் | முழுச்சுரமான | (சம்பூரணம்) | 7. |
| பண்ணியல் | | சுரங்கள் | 6, |
| திறம் | | ,, | 5. |
| திறத்திறம் | | ,, | 4. |

மேற்கண்ட பண்ணின் வரிசைச் சுரமான 'விளரி' என்பது ச ரி க ம ப த நி வரிசையில் ஆறாமிடம், அதாவது பகைச் சுரம்-அது தைவதம் எனப்படும். அதற்குப் பெரிய சிறப்பில்லை.

செப்பலோசையில் வரும் வெண்பாவும், அகவலோசையில் வரும் ஆசிரியமும், மருட்பாவிற்கு அதன் அடிகளுக்குரிய உறுப்புச் சீர்கள் தவிர,—மருட்பாவின் இனமென்றோ, வகையென்றோ மற்றன இல்லை என்பதறியவும். இதைப் போல அது என்றார்.

## வண்ணம்

தொல்காப்பியர், "வண்ணம் இருபது என,
வண்ணம் தாமே நால் ஐந்து என்ப"
என்றார் —தொ. செய். 204

4×5=20 எனவாக பா; பாஅ—தாஅ வல்லிசை, மெல்லிசை, இயைபு, அளபெடை, நெடுஞ்சீர், குறுஞ்சீர், சித்திரம், நலிபு, அகப்பாட்டு, புறப்பாட்டு, ஒழுகு, ஒரூஉ, எண்ணு, அகைப்பு, தூங்கல். ஏந்தல், உருட்டு, முருகு என இருபது கூறினர்.

இவை யாவும் வாய்த்தாளம், கைத்தாளம், கால்த்தாளம், என தாள் ஒலித்த—தாளமிட்ட அளபெடையுடைய சந்த வண்ண உறுப்பினங்கள். அதாவது மேற்கண்ட தலைப்புகளில் வரும் கட்டுப்பாட்டுச் சீர்களுக்குத் தாழிசை உறுப்பு வகைகள். அவை சூழல்களுக்கும், சார்பு நிகழ்வுகளுக்குமாக வகைபிரித்த

வரிசைகள். தொல்காப்பியர் கூறும் மேற்கண்ட இருபது வண்ணங்களுக்குத் தூங்கிசை, ஏந்திசை, அடுக்கிசை, பிரிந்திசை, மயங்கிசை, என்ற ஐந்து தலைப்புகளுக்கு ஒவ்வொன்றிற்கும் இருபதாக—மொத்தம் நூறு வண்ணம் கூறுகிறார் பெரும்புலவர் அவிநயனார். ஆனால், தொல்காப்பியச் செய்யுளியல் இருபது வண்ணவகைகளையும், அவற்றில் கொண்டு வந்து விரித்திருக்கின்றார். இவற்றில், குறில், நெடில், வல்லிசை, மெல்லிசை, இயைபு, இடை இசை என வகை பிரித்ததன்றி அவை சிறப்பு உறுப்புத் தலைப்புகள் தவிர புதியனவல்ல. இவற்றை யாப்பருங்கலக் காரிகை உரையும்,

"உரைக்கப்படும் பொருட் கொத்தவை எல்லாம் புகழ்ச்சியின் மிக்க புனைந்துரை யவைதாம், பெரிதினைச் சுருக்கலுஞ்சிறிதினைப் பெருக்கலும் என விரண்டாகும் என்மனார் புலவர்" என மேற்கோள் காட்டுகிறது. இந்தத் தொல்காப்பியச் செய்யுள் வண்ணவகைகளில் வரும் இசை, தாளத்திற்குக் கட்டுப்பட்ட, சந்தஓசைசெப்பலோசையுடன் கூடிய சீர்அளவுத் தொகுப்புகளின் வகைகொண்டன பலவற்றில், குறிப்பாக சில காண்போம்.

பிற்காலக் கண்டுபிடிப்பான ஒரு சீரில் 'நேர்' என்று முடியும் மூவகைச் சீரான 'காய்ச் சீரும்' 'நிரை' என்று மலர் என்பதாகி முடியும் இம்மூவகைச் சீரான கனிச்சீரும்—காய், கனி—என்பவற்றிற்காக 'நேர் நிரை' என்று கொள்ளப்பட்டிருப்பதை அறியவும். உரிச்சீர் எனப் பொதுவாக அதற்குரியதெனப் பொருள் கொண்ட காய்ச்சீர் நான்கும் வெண்பாவிற்கும், கனிச்சீர் நான்கும் வஞ்சிக்கும்வழங்குதல்மரபு. வெண்டளைகளும் கலித்தளைகளும் வண்ணச் சந்தங்களில் பல பெயர்களுடைய உறுப்பினங்களில் நிற்பவை, ஆசிரியங்களும், வஞ்சியும், காய்ச்சீர், கனிச்சீர், கொண்டிருந்தாலும் அந்த அந்த நிகழ்வுக்குரியனவாகத் தொகுக்கப்பட்ட பல நீண்ட மரபு இலக்கணங்களாக அடையாளங் காட்டிக் கொண்டிருக்கின்றன. காய்ச்சீரில் வரும் வெண்டளை, வெண்பாட்டுகளில் செப்பலோசைக் கண்ணிகள் ஆக சிறப்பாக விளங்கி வருகின்றன. மேற்கோளாக,

## 1. கண்ணி

### 173. செய்யுள்

"பூமாலை தோன்றப்புனைந்த துகில்சரிய
பாமாலை சூட்டியொரு பாடகன் பாடிவிட்டான்
கன்னி மயிலாள் கயல்விழியாள் ஆடிவிட்டாள்
பொன்னி எனப்புகழ்ந்தார் பூரித்தார் அன்னவரே"

—புரட்சிதாசன்

மாச்சீரும், விளங்கனிச் சீர்களும் வராத கலிப்பாவின் உறுப்பு களாக தரவு, தாழிசை, அம்போதரங்கம், வண்ணகம், தனிச் சொல், கரிதகம் அத்துடன் பா வென்றாலே, அதன் துறை, விருத்தம் என்று வகைக்கிளை, வரிசைக் கிளைகள் என நின்று சிறப்புப் பெறுகின்றன. உரைநடைச் சொற்களை மிக எளிதாக எண்சீர் விருத்தங்களில் பாடிவிடுகின்றனர். அதிலும் சில வகை யுண்டு. அடிக்கு நான்கு சீர்களாக 32 சீர்களில் காயும், மாவுமாக மாச்சீரில் 'தேமா, புளிமா, விளச்சீரில், கருவிளம், கூவிளம், காய்ச்சீரில் தேமங்காய், புளிமாங்காய், கருவிளங்காய், கூவிளங் காய் கொள்கின்றனர். இவை இயற்சீர், வெண்சீர் கலந்தவை ஆனால் மரபாக வந்த பெரும்பாலான எண்சீர் விருத்தங்களில் நான்கு சீர் கொண்ட ஓர் அடியின் மூன்றாவது சீர், மாச்சீரில், தேமாவாக முடிவதைக் காணலாம். செப்பலோசை நயத்திற்கு இது சிறப்பு.

ஆனால் மாச்சீரில் அடியில் கடைச்சீராக தேமா புளிமாவரும் எண்சீர் விருத்தங்களு முண்டு. இதோ அவ்வாறு, காய், விளம் விரவி வந்த செய்யுள்.

### 174. செய்யுள்

| | |
|---|---|
| பகலவனின் | கருவிளங்காய் |
| ஒளிக்கதிர்கள் | கருவிளங்காய் |
| பாய்ந்தவுடன் | கூவிளங்காய் |
| மொட்டு | தேமா (நேர் நேர்) |
| பங்கயமாய் | கூவிளங்காய் |
| இதழ்விரிக்கும் | கருவிளங்காய் |
| இன்பத்தேன் | தேமாங்காய் |
| ஊறும் | தேமா (நேர் நேர்) |
| அகமகிழ | கருவிளங்காய் |
| ஆற்றலலை | கூவிளங்காய் |
| பாய்கின்ற | தேமாங்காய் |
| நினைவில் | புளிமா (நிரை நேர்) |
| அறிவுமுனை | கருவிளங்காய் |
| தலைதூக்கத் | புளிமாங்காய் |
| தெரியுமதில் | கருவிளங்காய் |
| கவிதை | புளிமா (நிரை நேர்) |

---

அவ்வாறே பண் சுமக்கப்பாடும் விருத்தங்களுக்கு, அறுசீர்கள் கொண்டன வற்றிற்கு விளச்சீரும், கண்ணிவகை, சிந்து வண்ணம்; தாழிசை வகைக்குச் சந்த ஓசை, தாளம், அடங்க, பண்சுமக்க; நீண்டகாய்ச் சீர்களும், அருமை, அருமை. செய்தி களையும் அதில் சுவையாக விரித்தல் கூடும்.

| | |
|---|---|
| வல்லினம் | க், ச், ட், த், ப், ர், |
| மெல்லினம் | ங், ஞ், ண், ந், ம், ன், |
| இடையினம் | ய், ர், ல், வ், ழ், ள், |

இத்தகைய இனங்களால் மெய்ப்பாட்டுப் பொருள் உணர்த்தும் பாடல்களுக்கு இந்த இனத்திற்குரிய தமிழ் இசைச் சொற்கள் நிறைந்த பொருட்சீர் இப்படிப்பட்ட தலைப்புகளில் வர வேண்டுமென்பது இலக்கணம்.

| | |
|---|---|
| வல்லிசைச் சொற்கள் | வீரம், போர், அறைகூவல் முழக்கம். |
| மெல்லிசைச் சொற்கள் | அன்பு, காதல், பாசம், சுவை, ஏக்கம், இன்பம், இனிமை. |
| இடையினச் சொற்கள் | பொதுவான அறங்கூறும் படிப் பினைகள். |

மேற்கண்ட வரம்பு தவறித் தாழிசைச் சொற்கள் மாறுபட்டு வந்தால், அதனதன் பெருமை இழப்பீடாகும். வீரமுழக்கமுள்ள கவிதைகளுக்கு மெல்லினச் சொற்கள் தொய்வு தரும். பொது நிலை அறங்கூறும் இடையினச் சொற்கள், வல்லின, மெல்லின இடைவெளி நிரப்புமேதவிர தனித்தியங்கக்கொள்ளப்படாதவை. இருந்தாலும் அனைத்திற்கும், அனைத்தும் தேவை. நெடுஞ்சீர் களான, தேமாங்காய், புளிமாங்காய், கருவிளங்காய், கூவிளங் காய்ச்சீர்களில், புளிமா, தேமாவுடன், அதன் துவக்கமாகத் தாழிசைச்சந்தங்களில் ஒரு ஒப்பாரிப் பாட்டு:—

## 1. பாடல்

### 175. செய்யுள்

நான்—(விட்டிசை)

1. நெனச்சாப் பொறுக்கு தில்லே—என்
நெஞ்சைவிட் டகலுதில்லே—தீ
அணைச்சா அணையுதில்லே—அந்த
ஆசை ஒழியுதில்லே—என்
அடிவயிறோ தாளுதில்லே

2. நான்—(விட்டிசை)
காத்திருந்து மாலையிட்டேன்—இன்பக்
களிதீர அனுபவிச்சேன்—அடி
ஆத்தா! மறைஞ்சிட்டானே—அதை
அவனெனக்குச் சொல்லலையே—நான்
அருகிருந்து பார்க்கலையே!

3. அடி—(தனி நிலை)—விட்டிசை
ஆனைகட்டி நெல்லடிச்சு—பல
ஆயிரம் பொதிகுவிச்ச—அந்தச்
சேனைத் தளபதியை—நான்
திருமணம் செய்தாலும்—நீ
திசை எல்லாம் சொன்னாலும்—இந்த
மானைப் புடிக்காமெ—அந்த
மந்தியைப் புடிச்சானே—அவனைப்
பூனையின்னு சொல்வேனா—இல்லை
புலியின்னு சொல்வேனா—நான்
புலம்பித் தவிப்பேனா?

4. முழக்—(தனிச்சொல்)—விட்டிசை—
கொட்டுக் குரவையொடெ—புதை
குழிவெட்டி என்னவெச்சு—அதில்
நட்டகல்லைப் பார்த்தாலும்—அட
நல்லமனசு வந்து—என்னை
நாடிவர மாட்டானா—வச்ச
பொட்டோடெ பூவோடெ—நான்
பொறந்தெடத்துப் பட்டோடெ—செத்துக்
கட்டையிலே போனாலும்—எங்
கவலை எரியாதே—இந்தக்
காலமுந் தொலையாதே

—புரட்சிதாசன்

*அவ்வாறே அறுசீர் விருத்தத்தில் அடிக்கு ஆறுசீர்களாக இருபத்து நான்குசீர் அடங்கிய, 'அதாவது விளச்சீர்த் தலைப்பில், கூவிளம் என்று துவங்குவதில், மூன்றாம் சீரில், மாச்சீரில் தேமா என்று முடிவதில்;*

## 2. விருத்தம்

### 176. செய்யுள்

''ஆவினக் குரலைக் கேட்டார்
அம்மாவென் றறிந்து கொண்டார்
கூவின குயிலைக் கண்டார்
குரல்வளம் பயின்று கொண்டார்
பாவின மொழியைக் கேட்டார்
பண்ணுடன் இசைத்துக் கொண்டார்
வாழ்வின அவிநயத்தை
வழக்கினில் தொகுத்துத் தந்தார்''

—புரட்சிதாசன்

மேற்கண்ட அறுசீர் விருத்தத்தில் மாச்சீர்; தேமா, புளிமாவும் விளச்சீர்; கூவிளம், கருவிளமும், காய்ச்சீர்; தேமாங்காய்ச்சீரும், வந்திருப்பதறியவும்.

அவ்வாறே கருவிளம் சீர்த்துவக்கமாக.

## 3. விருத்தம்

### 177 செய்யுள்

''கடல்படு செல்வ மன்றோ
கயல்விழி இனத்தின் கூட்டம்
அடல்மலை அருவி நீண்ட
அடவியில் விலங்கின் கூட்டம்
திடல்படு செல்வ மன்றோ
செறிவுநெற் கழனிக் கூட்டம்
உடல்வளம் உழைப்பு கல்வி
ஒன்றிய செழுமை அன்றோ''

— புரட்சிதாசன்

மேற்கண்ட அறுசீர் விருத்தத்தில் மாச்சீர், தேமா, புளிமாவும், விளச்சீர்; கூவிளம், கருவிளமும் வந்திருப்பதறியவும். நான்காவது சீரில் மோனையும், ஏழாவது சீரில் எதுகையும் கொள்ள மேற்கண்ட விருத்தத்தில் சீர்வரிசை கீழ்க்காணுமாறு அறியவும்.

| | | |
|---|---|---|
| கருவிளம் | தேமா | தேமா |
| கருவிளம் | புளிமா | தேமா |
| கருவிளம் | புளிமா | தேமா |
| கருவிளம் | புளிமா | தேமா |
| கருவிளம் | தேமா | தேமா |
| கருவிளம் | புளிமா | தேமா |
| கருவிளம் | புளிமா | தேமா |
| கூவிளம் | புளிமா | தேமா |

மேற்கண்ட அறுசீர் விருத்த வகையில் கழிநெடிலடி ஆசிரியம் எனவாக மாச்சீரில் புளிமாவும், அதன்பின் தேமாவும் வந்து மூன்றாம் சீர், காய்ச்சீரில்; புளிமாங்காய், கருவிளங்காய், தேமாங்காய் என வருவதை ஒத்த சீரசையாகக் கீழ்கண்டவாறு அறியவும்.

## 4. விருத்தம்

### 178. செய்யுள்

''குறிஞ்சிக் காதல் களவன்றோ
குடும்பம் முல்லை அறமன்றோ
புரிந்தே இன்பச் சுவைப்படுத்தி
போற்றி மகிழ்வ ததுவன்றோ
நெறிஞ்சி முட்கள் தைத்தாலும்
நிலைமை துயராய் இருந்தாலும்
அறிந்த தலைவி தலைவன்பால்
அணைந்தே இருத்தல் தகுமன்றோ''

—புரட்சிதாசன்

---

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியப்பாவில் மற்றொரு வகையாக, முதல் நான்கு சீர்களும், காய்ச்சீர்களில் பரவி வந்து, ஐந்தாவது, ஆறாவது சீர், முறையே, புளிமா, தேமாவில் முடிவதாகக் கீழ்க்கண்டவாறு அறியவும்.

## 5. விருத்தம்

### 179. செய்யுள்

''என்னையொரு பெண்ணென்றே என்கணவன்
எண்ணாமல் இருக்கும் போதில்
அன்னவனை நான்தொழுதால் ஆசையதற்
கென்னபொருள்? அறியும் போது
மன்னவனாய் நான்விரும்பி மாற்றானைக்
கைப்பிடித்தால் புகழ்வா ருண்டோ?
உன்னதமாய் நான்வாழ ஊரார்ஏன்
ஏற்கவில்லை உணர்ந்து பாரீர்''

—புரட்சிதாசன்

---

## எழுசீர் (புளிமா) விருத்தம்

முதலடிக்கு நான்கு சீர்களும்,

இரண்டாமடிக்கு மூன்று சீர்களுமாக, ஆக எட்டடிக்கு இருபத்தெட்டு சீர்கள் கொண்ட ஏழுசீர் விருத்தம். அதாவது அனைத்தும் (நிறை நேர்) புளிமாச்சீரில் கீழ்க்கண்ட பாடலில் தொகுத்திருப்பதறியவும்.

## 6. விருத்தம்

### 180. செய்யுள்

1. ''பொருளும் சுகமும் பொலிவும் வளமும்
2. புணர்வும் அதனால் அடையும்
3. அருளும் நிறைவும் அழகும் குணமும்
4. அறிய விரும்பும் கலவி
5. உருகும் உணர்வோ ஒருபால் நிமித்தம்
6. உலகில் இதுதான் வழக்கு
7. மருகும் கலையின் மதங்கள் பரத்தை
8. மனமும் நினைவும் உறவே''

– புரட்சிதாசன்

---

மாச்சீர், காய்ச்சீரில் எண்சீர் விருத்தம்

(8×4=32 சீர்கள் கொண்டவை)

## 7. விருத்தம்

### 181. செய்யுள்

''எழுசுரத்தில் குரல்துத்தம் படும லையாம்
இவைநடத்துப் பைரவியாய் குறிஞ்சி தோன்றும்
முழுநிலத்தில் மலைக்குன்றில் அருவி யாங்கு
முதிர்புதரில் குழல்மூங்கில் ஒலியுந் தோன்றும்
தினைப் புனத்தில் பரண்கட்டி உலவிப் பாடித்
திளைத்திருக்கும் கிளிப்பெண்கள் வரவு தோன்றும்
மணம்பரப்பும் மலர்ப்பெண்ணைக் கொடிச்சி என்பார்
மகிழ்ந்திருக்க அவளன்றோ முதன்மை என்பார்''

—புரட்சிதாசன்

மேற்கண்ட விருத்தத்திற்கு துவக்கமோனை, எதுகை, தொடர்பான அடிகளின் இரண்டிரண்டு சீர்கள் காய்ச்சீர்களில் வந்து, அடிகளின் மூன்றாம் சீரும், நான்காம் சீரும் புளிமா (நிரை நேர்) தேமா (நேர் நேர்) சீர்கள் தொகுக்கப்பட்ட, தனிப் பட்ட ஓசை நயச் சிறப்பை அறியவும்.

---

நேரொன்றாசிரியமாக, எண்சீர் விருத்தம். கீழ்கண்ட வற்றில் 8×4=32 சீர்களும் ஒரே சீராக தேமா—(நேர் நேர்) மட்டுமே கீழ்க்காணுமாறு தொகுக்கப்பட்டதை அறியவும்.

## 8. விருத்தம்

### 182. செய்யுள்

''கண்ணீர் பொங்கி ஏங்கி ஆசைக்
காதல் கொண்ட மன்னன் தோளின்
வண்ணம் பற்றி வாழ்வி னின்பம்
வாழ்த்திச் சேர்ந்து தன்னைத் தந்த
பெண்ணின் நேசம் பெண்மை ஆங்குப்
பெற்ற தெல்லாம் வெற்றி யாமோ
திண்ணம் அன்னார் ஒன்று பட்ட
தேட்டம் சொல்ல இன்னும் என்ன?''

—புரட்சிதாசன்

---

## கூவிளஞ்சீர்க் கண்ணிகள்

## 9. விருத்தம்

### 183. செய்யுள்

''மேழியும் செல்வமும் மேம்படப் பைம்புனல்
ஆழியாய் ஏரியாய் ஆங்கமை நெல்வயல்
கோடியாய்ப் பாலையாய்க் கொள்இளிக் கூவலாய்ப்
பாடலாய்ப் பண்ணிசை ஏழிசைக் கூடலாய்''

—புரட்சிதாசன்

விளச்சீரில் கூவிளம். அளவடி இரண்டில் மேழி, ஆழி என அந்தக் கண்ணியில் எதுகையாகவும். அடுத்த இரண்டடியில் கோடி, பாட என வந்ததறியவும். அவ்வாறே மூன்றாம் சீரில் மோனையும், ஐந்தாவது சீரில் எதுகையும் வந்திருப்பதறியவும்.

---

## விளச்சீரில் அராக நடைக் கண்ணிகள்

அடிக்கு நான்கு சீர்கள் என அளவடித் துவக்கமிருந்து மூன்று சீர்கள் கருவிளம் (நிரை நிரை), நான்காவது கடைசிச் சீர் மாச்சீரில் தேமா (நேர் நேர்), அவ்வாறு சிறப்புக்குரிய பொழிப் பெதுகையில் இசைநளினக் கண்ணிகள் 6—அடிகள் கொண்டவற்றைக் கீழ்க்கண்டவாறு அறியவும்.

## 10. விருத்தம்

### 184. செய்யுள்

''குழல்முடி கருவிழி குறுநகை காட்டி
எழிலுற நிமிர்முலை இறுக்கமும் ஆட்டி
தளிர்விரல், கரம்இடை தகஅணி மாட்டி
கலைக்குறி மருங்கினைக் கவர்ந்துகில் பூட்டி
அலைஎனச் சதிர்நடை அதன்பத மூட்டி
பதநிலை அகம்புறம் படிப்பது கூத்து''

—புரட்சிதாசன்

---

## 2. சந்தப் பாடல்கள்

இதுவரை ஆசிரியம், வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா ஆகியவற்றின் இலக்கணச் சுருக்கம், இலக்கண இலக்கியம் அதற்குரிய, செய்யுள்கள் அனைத்தும், அந்த அந்தப் பாவினம்,வகை சார்பு என இசைபடு தாழிசை எனப் பலவற்றை வரிசையாக அறிந்தோம்.

தமிழ்ப் பேச்சு வழக்கே ஆரம்ப முதல்கவிதை நடையாக இருந்ததால் அதன் ஆழத்தை மன்னர்களும், புலவர்களும் அறிந்து புலமை பெற்று, அதன் இலக்கண, இலக்கியங்களையும் வழிமொழிந்து வைத்தனர்.

சங்கப்பாடல்களும், சிவனிய நாயன்மார் புராணங்களும், ஆழ்வார் பிரபந்தங்களும், பலவகைப்பட்ட கோவை நூல்களும், கம்பராமாயணம், பாரதமென ஆரியவர்ணம் சொல்லும் நூல்களும் பெருந்தமிழ்ப் புலமை பெற்றவர்களால் அனைத்து இலக்கணங்களையும், கூறும் அவை மத இலக்கியங்களாகப் போற்றப்பட்டு வந்திருக்கின்றன.

தமிழ் இலக்கணக் கட்டுக் கோப்பிற்குள் வரும் மேற்கண்ட அனைத்துச் செய்யுள்களும் பாடுதுறைத் தாளம், இசைக்குக் கட்டுப்பட்டு, பாடுவதற்கு ஏற்றதாக உடன்படும் தமிழ்ச் செய்யுள்கள், அன்று பாடப்பெற்றனவே,இன்றைய உரைநடை வளர்ச்சி.

சந்தப் பாடல்களுக்கு வரும் செய்யுள் இலக்கணம் தவறாமல் பண்டைய தமிழ்ப்புலவர்களால் தரவு, தாழிசை வண்ணம் (வர்ணம்) சிந்தியல், கிளிக்கண்ணி, எனப்பல வேறு தலைப்புகளில் – கொண்டு வரப்பெற்றிருக்கின்றன. அவற்றில் பல்லவி, அனுபல்லவி, சரணம், எடுப்பு துடிப்பு, படுப்பு, இவை அடங்கும்.

வள்ளுவர், குறள் வெண்பாவையே பாடினார். பெரும்புலவர் கம்பர் அனைத்துத் தமிழ்ப்பாவினங்களையே இலக்கணம் பிரித்து அதன் வகைப்பாடல்கள் அனைத்தையும் பாடிவிட்டார். இருசீர்க் குறளடியும், முச்சீர்ச் சிந்தடியுமே பாடல்வகைக்கு அடிப்படையாக வழங்கி வருகின்றன. இன்றும் அந்த இலக்கணம் இல்லாமல் தமிழ்ப்பாடல்கள் இல்லை.

பாடல்

"எல்லை இகந்தார்
வில்லர் வெகுண்டார்"

கம்பர்—யுத்—1236

இது மேற்கண்ட இரண்டடியிலும் இரண்டிரண்டு தேமா, புளிமாச்சீராக வந்த. குறளடி

பாடல்

"அடலே றமரும் கொடியண்ணால்
மடலார் குழலா னொடுமன்னுங்"

—சம்பந்தர்

இது அடிக்கு மூன்று சீராக, அதாவது புளிமா, புளிமா புளிமாங்காய் என இரண்டடியுமாக வந்த சிந்தடி.

பாடல்

"அன்போ டுருகி அகங்குழை வார்க்கன் றி
என்போல் மணியினை எய்தவொண் ணாரே"

—திருமூலர்—272

இது அடிக்கு நான்கு சீர்கள் கொண்ட அளவடி.

மேற்கண்ட மூன்று பாடல் வகைகளில்தான் சந்தப்பாடல் களின் அடிப்படையே இருக்கின்ற தென்பதை அறியவும். இசைத் தாளத்திற்குக் கட்டுப்பட்ட பாடல் வரிகளுக்கு அனைத்துச் சீர்களுமே அருமை. ஆனால் ஆசிரிய உரிய சீர்களான. தேமா, புளிமா, கருவிளம், கூவிளம் என்பதைவிடக் காய்ச் சீர்களான, தேமாங்காய், புளிமாங்காய், கருவிளங்காய், கூவிளங் காய் என்ற நீண்ட சீர்களில் நிறைந்த செய்திகளையும் எளிதாகப் புரிய வைக்கும் நாட்டுப்புறப் பண்களில் கொள்ளும் பாடற் பொருளையும், ஓசை நயத்துடன் கூறலாம். எவ்வாறானாலும் பாடலின் சூழல், கருத்தினைக் கொண்டு அந்த அந்தப் பாடல்கள் புனையவேண்டும்.

## பாடல்

"கைம்மாவின் நடையன்ன மென்னடையும்
கமலம்போல் முகமும் காணா
தெம்மானை என்மகனை இழந்திட்ட
இழிதகையேன் இருக்கின் றேனே"

—நாலா-திவ்-735.

மேற்கண்ட அறுசீர்க் கழிநெடிலடியில், மாச்சீர், காய்ச் சீர்கள் வந்த சொல் நயமும், இசை நயமும், 'முகமும் காணா', 'இருக்கின்றேனே' என்ற சீர்களில், புளிமா, தேமா,—புளிமா தேமா—என்று பிரிந்து வந்ததைச் சேர்த்தால் 'புளிமாந்தண்பூ— என்ற இரண்டு பூச்சீர் வரும். அதனையே பொதுச் சீர்களாக, சீர் வாய்பாடு கொண்டால் 'கருவிளங்காய்' என்ற காய்ச்சீரில் எழுத்தெண்ணிக் கொள்ளப் பெறும்—அந்த ஓசை நயங்களை ஒப்பிட்டு மேற்கண்ட பாடலை இசையில் எந்தப் பண்ணிலும், தாளத்தில் கொண்டால் ஆதிதாளமான பழைய தாளத்தில் வரும். அவ்வாறே, தேமா, புளிமா, கருவிளம், கூவிளம் என்ற ஆசிரிய நான்கு உரிச் சீர்களை, சுரிதக, அராக நடையில் கொண்டால் சிறப்பாக இருக்கும்.

மேற்கண்ட அகவலாசிரிய நடையில் வரும், பட்டினத்தார் பாடல்.

"பீளையும் நீரும் புறப்படும் ஒரு பொறி
மீளுங் குறும்பி வெளிப்படும் ஒரு பொறி
சளியும் நீருந் தவழும் ஒரு பொறி
வளியும் மலமும் வழங்கும் ஒரு வழி
சலமும் சீயுஞ் சரியும் ஒரு வழி"

—26—31

மேற்கண்ட பாடல் அளவடிச் சீர்களில் சுரிதக, அராகம் வந்த அகவலாசிரியம். இளங்கோவடிகளின் சிலப்பதிகார

"மாசறு பொன்னே வலம்புரி முத்தே
காசறு விரையே கரும்பே தேனே"

என்ற இந்த வரிகள், ஆசிரிய உரிச்சீர்கள் என்ற அகவல்அடிகளே, காந்தார பஞ்சமத்தில் பாடப் பெற்ற,

"புத்தர் சமண்கழுக் கையர் பொய் கொளாச்
சித்தத் தவர்க டெளிந்து தேறின"

என்ற தேவாரத் திருஞான சம்பந்தரின் பாடலும் அகவலா சிரியமே. சந்தப் பாடல்களில், மாச்சீரும், சாய்ச் சீர்களும் விரவி வந்த பண்ணொடு வழங்கும் பாடல்களை வரிசைப்படுத்தி அறிவோம். சுந்தர மூர்த்தி அடிகளின்;

"பொன்னார் மேனியனே புலித்தோலை அரைக் கிசைத்து
மின்னார் செஞ்சடைமேல்மிளிர்க் கொன்றைஅணிந்தவனே"

இது நாட்டராகத்தில் வழங்கும் பாடல். இவற்றில் சீரமைப்புக் கூறுமிடத்து.

"தேமா கூவிளங்காய் புளிமாங்காய் கருவிளங்காய்"

என்ற நான்கு சீர்களுமே; முறையாக மேற்கண்ட அளவடிகளில் இசைபடு கண்ணியில் மிக மிக மெய் மறக்க வைக்கும் தொடர் அடுக்கான அதே காய்ச்சீரில்; காய்முன்நேராக வெண்டளை விரவிய அவ்வாறே கீழ்க்காணுமாறு இரண்டு வெண்பா.

## 185. செய்யுள்

**"செத்துவிடப் போகின்றாய் சேர்ந்தவர்கள் உன் பிணத்தை
மொய்த்துவிடப் போகின்றார் மொய்த்தாலும் சற்றழுவார்
சுட்டுவிடப் போகின்றார் சூழ்நிலைக்குத் தக்கனவாய்
நட்டமென்ன வாழ்ந்துவிடு நன்கு"**

—புரட்சிதாசன்

அவ்வாறே காய்முன் நேராக், மாமுன் நிரையாக இயற்சீற் விரவிய ஒரு வெண்பா.

## 186. செய்யுள்

**இருப்பவர்கள் உன்னை இனம்பிரித்துக் கொள்வார்
வெருப்பில் புறக்கணிப்பார் வீணர்—பொருப்பற்றோர்
ஒற்றுமை என்றே, உயர்ந்தவர் தாழ்ந்தவரை
சுற்றத்திற் கொள்ளார் துணை,**

—புரட்சிதாசன்

பாடும் இசைக் கொப்பனவாக, அறுசீர்கழிநெடிலடி விருத்த மாகத் திருவாசக மாணிக்கவாசகரின்;

"முத்தாணிக் கொங்கைகள் ஆட ஆட
மொய்குழல் வண்டினம் ஆட ஆட"

இது இரண்டு கூவிளம், இரண்டு தேமா வென இரண்டுஅடி களுக்கும் வந்த சந்த விருத்தம். இது இசையமைத்துப் பாடும் ஒழுங்கிற்கு வரும். சீர்களுக்குரிய தமிழ்ச் சொற்களின் அருமையே அருமை.

அவ்வாறே, திருவாசகத் திருப்பெருந்துறை—கலி வெண்பாச் சந்தப் பாடலாக;

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல் விருக மாகிப் பறவையாய் பாம்பாகி"

கலித் தாழிசையாக;

"வளைந்த வில்லு விளைந்தது பூசல்
உளைந்தது முப்புர முந்தியற
ஒருங்குடன் வெந்தவாறுந் தீபற"

கலிவிருத்தமாக;

"முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல் வேனைப்
பத்திநெறி யறிவித்துப் பழவினைகள் பாறு வண்ணஞ்"

மேற்கண்ட வெண்பா, கலித்தாழிசை விருத்தம் அனைத்தும் சந்த ஒசையுடைய மாச்சீர், காய்ச்சீரில் ஒலிப்பதறியவும்.

திருப்புகழ் அருணகிரியார் பாடல்களில், சந்தம், முடுகியல், வண்ணம் ஆகியவற்றில் தொல்காப்பியரின்

"நெடுஞ்சீர் வண்ணம் நெட்டெழுத்துப் பயிலும்"
"குறுஞ்சீர் வண்ணம் குற்றெழுத்துப் பயிலும்"

என்ற இலக்கணம் வந்தனவாக;

"பாதி மதிநதி போது மணிசடை
நாதர் அருளிய குமரேசா
பாகு கனிமொழி மாது குறமகள்
பாதம் வருடிய மணவாளா"

இந்தப் பாடல் நான்கு அடிகளுக்கும் வந்த சீர்களாக;

"தேமா கருவிளம் தேமா கருவிளம்
தேமா கருவிளம் புளிமாங்காய்

அவ்வாறே தன்னகரச் சந்த எழுத்துக்களாக;

"தான தனதன தான தனதன
தான தனதன தனதான"

என ஒழுங்குபெற்ற சந்தமாக வரிசைப்பட்ட விதத்தால் ஒலிநயம் சிறப்படைகிறது. அவ்வாறே,

கூவிளச் சீரினைத் தலைப்பாகக் கொண்ட;

"கைத்தால நிறைகனி அப்பமொ டவல்பொறி
கப்பிய கரிமுகன் அடிபேணி
கற்றிடு மடியவர் புத்தியி லுறைபவர்
கற்பகம் எனவினை கடிதேகும்"

**சந்த விளக்கம்**

"தத்தன தனதன தத்தன தனதன
தத்தன தனதன தனதான"

மேற்கண்ட பாடலுக்குரிய தன்னகரம் வந்த விதம் போல, இசைபடும் சீருக்கு அவ்வாறே சந்தம் அமைந்துவிடும்.
அடுத்து

"தத்தத் தன தத்தத் தனதன
தேமாங் கனி தேமா கருவிளம்"

இவற்றிற்குரிய தத்தகரச் சீர்சளையுடைய பாடலைக் கீழ்க் கண்டவாறு அறியவும்;

"முத்தைத் தரு பத்தித் திருநகை
அத்திக் கிரை சத்திச் சரவண
முத்திக் கொரு வித்துக் குருபரன்"

என வருவதறியவும்.

மாச்சீரில் தேமா நான்கும், விளச்சீரில் கருவிளம் நான்கு மாக வந்த இரண்டடிச் சந்தப் பாடல், சுரிதக நடையில் கீழ்க் கண்டவாறு.

"தேமா தேமா தேமா தேமா
கருவிளம் கருவிளம் கருவிளம் கருவிளம்"

என்பனவற்றிற்குப் பாடலாக;

"ஒன்றென் றென்றுந் துன்றுங் குன்றுங்"
துளைபட மதகரி முகனுடல் நெரிபட"

சந்தம் (முழவொலி)

தத்தம் தத்தம் தத்தம் தத்தம்
தரிகிட தரிகிட தரிகிட தரிகிட

அவ்வாறே முடுகியல் சந்தத்தில், தமிழக நாட்டுப்புற வழக்கில் உள்ள ஒரு மாதிரிப்பாடல் (கைக்கிளைப் பெண்பாற் கூற்று)

187. பாடல்

1. "கன்னிப் பெண் ஆசை கை கூடுமா—கை
கூடினும் இன்பம் ஈடேறுமா
இன்னமும் நான்ஏங்க நேருமா—நான்
ஏங்கியே வீணாகக் கூடுமா."

### சுரிதகம்

2. ஆடல் அதில் அசைவும் இசைப்
பாடல் அதில் பதமும் விழி
தேடும் சுகத்தினவும் எழ
நாடும் மனம் நயமே பெற —கன்னி

### பாடல்

1. **ஊருக்கு ஊராடி வந்தேனே—வந்து
உள்ளங் கவர்ந்தானைக் கண்டேனே
நேருக்கு நேர்நின்று சொன்னேனே—சொல்லி
நெஞ்சை அவனுக்குத் தந்தேனே —கன்னி**

### சுரிதகம்

2. **பச்சை மலை பவள மலை
கச்சை அதில் கனியும் கலை
இச்சை எழும் இனிய நிலை
கொச்சை அதில் குலவும் அலை —கன்னி**

— புரட்சிதாசன்

மேற்கண்ட பாடல் வகைத் தன்னகரம்;
"தந்தான தந்தான தானனா—தந்
தந்தான தாந்தான தானனா" (1;1,)

இந்தத் தன்னகரம் மேற்கண்ட பாடல் அடிகளில் ஒன்று ஒன்றாக, இரண்டு இலக்கமிட்ட நான்கடி, நான்கடிகளுக்கு வரும். அவ்வாறே, 2,2, என்று இலக்கமிட்ட நான்கு அடிகளுக் கெனக் கீழ்கண்டவாறு தன்னகரம் ஒப்பிட்டுக் கொள்ளவும். சுரிதகத்தில்,

''தன்னா தன தனனா தன (2,2,)
தன்னா தன தனனா தன.'
என வருவதறியவும்.

பக்தர்களால் பண் அமைத்துப் பாடப்படும் வடலூர் இராமலிங்க அடிகளார் பாடல்களில், சந்த விருத்தம், கண்ணிகள் சிந்தடிகள் பெரும்பாலும், காய்ச்சீர்கள் மிகையாகவும், மாச்சீர்கள் விரவியும் வரும் பாடல்களில் கீழ்க்காணுமாறு சில,

## பாடல்

''அம்பலப் பாட்டே அரும்பாட்டு
அல்லாத பாட்டெல்லாம் மருட்பாட்டே
சிதம்பரப் பாட்டே திருப்பாட்டே
சீவர்கள் பாட்டெல்லாம் தெருப்பாட்டே''

மேற்கண்ட பாடல், விளமுன் நேரும், மாமுன் நிரையும், காய் முன் நேர், வந்த வெண்சீர் வெண்டளை,இயற்சீர் வெண்டளைப் பாடல். இது பியாக்கடைப் பண்ணில், ஆதிதாளத்தில் வந்த தத்தகரப் பாடல். மற்றொன்று;

## பாடல்

''வானத்தின் மீது மயிலாடக் கண்டேன்
மயில் குயிலாச்சுதடி—அக்கச்சி
மயில் குயிலாச்சுதடி''

துள்ளலை விட்டுத் தொடங்கினேன் மன்றாடும்

வள்ளலைக் கண்டேனடி—அக்கச்சி
வள்ளலைக் கண்டேனடி —'வானத்தின்'

ராகம் எதுகுல காம்போதி—ஆதிதாளத்தில். இது கூவிளம், தேமா, கூவிளம், தேமா என்ற சீரில் துவங்குகிறது. அதாவது;

''தானன தானா தன்தன தானா''

எனத் தொடங்கி காய்ச்சீர் விரவி வந்த பாடல், தொடர்ந்தால் விரியும். மேற்கண்ட பாடல்கள் 50 வருடங்களுக்கு முன்னர்

S.G. கிட்டப்பா தெருக் கூத்துகளில் பாடி அப்போதே இசைத் தட்டுகளாக வெளிவந்தவை. அவ்வாறே, மூன்று சீர்கள்கொண்ட சிந்தடியாகப் புன்னாகவராளிராகக் கண்ணிகள் கீழ்க்காணுமாறு.

1 "அம்பலத்தில் ஆடுகின்றார் பாங்கிமாரே
ஆட்டங்கண்டு நாட்டங்கொண்டேன் பாங்கிமாரே"

2 "தன்னையறிந் தின்பமுற வெண்ணிலாவே
தந்திரம்நீ சொல்லவேண்டும் வெண்ணிலாவே"

மேற்கண்ட இரண்டு பாடல்களும், காய்ச்சீர்த் தத்தகரங்களில் வந்திருப்பதறியவும். அவ்வாறே, எண்சீர் ஆசிரியச் சந்த விருத்தங்களில் நிறைந்த செய்திகளைச் சொல்பவராக, காய்ச் சீர்களில். விளம், மாவுடன்,

"மருந்தறியேன் மணியறியேன் மந்திர மொன்றறியேன்
மதியறியேன் விதியறியேன் வாழ்க்கை நிலையறியேன்"

என்று பாடுகிறார்.

குறளடிகளில், சிந்தடிக்ளில் துவங்கி அளவடிக்ளில் தொடரும் அறுசீர், எண்சீர், சந்த விருத்தங்கள், அதன் வளர்ச்சியைக் குறிக்கும். அனைத்தும், அதிகமாகப் ஆயிரமாயிரமாகப் பாடியவர் வள்ளலார்.

இருசீர் ஓரடி, மோனை, எதுகை பெற்ற குறளடியாகவும், முச்சீர் ஓரடி, மோனை எதுகை பெற்ற சிந்தடியாகவும், அதுவே நான்கு சீர்கொண்டு அதில் தொடருவதும், சிந்தியல், அளவியல் அடிகளே. குறள்வெண் செந்துறை என்று பெயர் பெற்ற அடிகள் வெண்பா யாப்பில் கொள்ளப்பெற்றவைகளே. சிற்சில மாறுதல்.

ஓரடியளவிலேயே, எதுகை, மோனை பெற்றும், ஈரசை நாற்சீர் அடிகள், இரண்டு கொண்டும், இதற்கு மேற்பட்டு சீர்களும் கொண்டு, அடிதொடர்வனவும், 'குறள்வெண் செந்துறை' என்றார்.

ஆத்திச்சூடி, கொன்றை வேந்தன், அவ்வினம் சேர்ந்தனவே. அவ்வாறு கீழ்க்காணுவது குறள்வெண்செந்துறை.

## 188. செய்யுள்

"மாடுபிடி சந்தையிலே மச்சானைப் பார்த்தேனா
ஓடிப்பிடிச் சேனா ஒருவார்த்தை பேசலையே
ஆட்டுக்கிடை ராப்பொழுதில் அங்கோநான் நின்றேனா
பாட்டொலி கேட்டோனா பக்கத்திலே யாருமில்லே"

—புரட்சிதாசன்

சுப்ரதீபக் கவிராயர் இயற்றிய ''கூளப்ப நாயக்கன் காதல்'' என்றவற்றில் வரும்; அதாவது, வெண்சீர் வெண்டளையில் இயற்சீர் வெண்டளையும் விரவி வந்த; கலிவெண்பா

''பெற்றெடுத்த தன்மகளைப் பேய்க்கிழிவி யானாலும்
குற்றமற நோக்கிக் குறிப்புறவே கண்டு கொண்டாள்
செவ்வாயிதழ்க் குறியுஞ் செப்புமுலை மேற்பதித்த
கைவாளுகிர்க் குறியுங் கண்மை யழிந்ததுவும்
பார்த்தாளுடன் போன பாங்கியரைச் சண்டையிட்டாள்
வேர்த்தாள் மகளை வெகுண்டாள் விசாரமிட்டாள்''

மேற்கண்டவை இசைச் சந்தக் கண்ணிகளான கலிவெண்பா அடிகள்,

பலசீர்களில், பல அடிகளில் நெடிலடிகளாகத் தொடர்ந்தன வெல்லாம், இன்று வழக்கிலுள்ள, தெருக் கூத்துப் பாடல், திரைப்படப் பாடல் எல்லாமே பல்லவி, அனுபல்லவி, சரணம் என்ற வகையிலும், சிந்தடிகளாக கிளிக் கண்ணிகளாகவும், தாழிசைச் சந்த அடிகளாகவும். பாடல் பெற்று வருவன வெல்லாம், குறளடி, சிந்தடி, வழியினவே என்பதைத் தெளிவாகக்கொள்ளவும்.

ஐயா அண்ணாமலைரெட்டியாரின்;

''வெள்ளிமலை யொத்தபல மேடை—முடி
மீதினிலே கட்டுகொடி யாடை''

இது மூன்றுசீர் அடுக்கிய சிந்தியல் அடி.

மகாகவி பாரதியாரின்,

''செந்தமிழ் நாடெனும் போதினிலே—இன்பத்
தேன்வந்து பாயுது காதினிலே''

இது மூன்றுசீர் அடுக்கிய சிந்தியல் அடி.

பாவேந்தர் பாரதிதாசனின்.

''குறட்பாவில் இரண்டு செய்யுள
படித்தோமே அவற்றி னுக்கு''

இது மூன்றுசீர் அடுக்கிய சிந்தியல் அடி.

அவ்வாறே, பாவேந்தரின்,

''கோரிக்கை யற்றுக் கிடக்குதண்ணே
இங்கு வேரில் பழுத்தபலா—மிகக்
கொடியதென் றெண்ணியே விட்டனரே
குளிர்வடிகின்ற வட்டநிலா'' இது—சிந்தியலடி

காக்கையின் ஒற்றுமை கூறுமிடத்து,

"ஆக்கிய சோறுகொஞ்சம் சிந்திக் கிடக்கும்—அதை
அழைத்துத்தன் இனத்தோடு குந்திப் பொறுக்கும்!

இது நான்கு சீர்கொண்டு ஓரடி, ஈரடியாக, தனிச்சொல் பெற்ற அளவடிச் சந்தம். தமிழ்த் திரைப்படக் கவிஞர்களின் இசைப்பாடல் கூறுமிடத்து; கவிஞர் K.D. சந்தானமவர்களின் "தேவதாஸ்' படப்பாடல்;

"உலகே மாயம்
வாழ்வே மாயம்"

இது இருசீர் ஓரடியாக வந்த இரண்டடிக் குறளடி;

கவிஞர் கம்பதாசனின் 'ஞானசௌந்தரி' படப்பாடல்;

"அருள்தாரும் தேவ மாதாவே
ஆதியே இன்ப சோதியே"

இது ஓரடிக்கு மூன்று சீர்வந்த சிந்தடி

ஐயா உடுமலை நாராயண கவியின்;

"சும்மா இருக்கா தூங்க
சுறுசுறுப் புள்ளவன் கையுங் காலும்"

இது முதலடி மூன்று சீர் அடுக்கியும், இரண்டாவதடி நான்கு சீர் அடுக்கியும் வந்த சிந்தியல் அளவடி.

கவிஞர் மருதகாசியின்;

"நீலவண்ணக் கண்ணா வாடா
நீயொரு முத்தம் தாடா"

இது சிந்தடி.

டாக்டர் கவிஞர் பாஞ்ச்பீரின்,

"நன்றி மறப்பது நன்றல்ல
வள்ளுவர் சொன்ன குறளுங்க!
வகுப்பு வாதிகளை வளரவிட்டால்
கேடுகள் வந்திடும் நம்புங்க!"

இது அடிக்கு முச்சீர் கொண்ட சிந்தடி.

கவிஞர் கண்ணதாசனின்

"வீடுவரை உறவு
வீதிவரை மனைவி
காடுவரை பிள்ளை
கடைசிவரை யாரோ"

இது குறளடி.

கவிஞர் பஞ்சு அருணாசலத்தின்,

"வாராயோ தோழி வாராயோ
மணப்பந்தல் காண வாராயோ"

இது சிந்தடி.

கவிஞர் வாலியின்,

"யாருக்காகக் கொடுத்தான்
ஒருத்தருக்கா கொடுத்தான்
ஊருக்காகக் கொடுத்தான்"

இது குறளடி.

பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரத்தின்

"ஆரம்பம் ஆவதும் பெண்ணுக்குள்ளே
ஆடி அடங்குவதும் மண்ணுக்குள்ளே
ஆராய்ந்து பார்மனக் கண்ணுக்குள்ளே
ஆத்திரங் கொள்ளாதே நெஞ்சுக்குள்ளே"

இது சிந்தடி.

"சின்னச்சின்ன இழை பின்னிப் பின்னிவரும
சித்திரக் கைத்தறிச் சேலையடி
தென்னாட்டில் எந்நாளும்
கொண்டாடும் வேலையடி"

இது குறளடியும், சிந்தடியும் விரவி வந்த பாடல்.

ஆலங்குடி சோமுவின்

"ஆடி அடங்கும் வாழ்கையடா
ஆறடி நிலமே சொந்தமடா"

இது சிந்தடி.

கவியரசு வயிரமுத்துவின்,

"ஆயிரம் தாமரை மொட்டுக்களே"

இதுவும் சிந்தடி.

அண்மையில், குறளடி, சிந்தடி, அளவடி ஆகிய சந்தங்களில் பலநூறு பண்களையும், பாடல்களையும் தமிழ்த்திரையுலகில் "இசைஞானி" இளையராசாவும், இளவல் கங்கை அமரனும் முத்துக்களைப் பரப்பியது போலத் தூவி நிரப்பி விட்டார்கள். வாழ்க!

1952 முதல் 1992 முடிய பிறமொழிகளான, இந்தி உருது, கன்னடம், துளு, மலையாளம், தெலுங்கு, ஆகியவற்றி லிருந்து தமிழுக்கு மொழி மாற்றிய பல படங்களிலும், தமிழில் நேரடியாக எடுத்த சில படங்களிலுமாக நானும் மேற்கண்ட வழியில் ஐயாயிரம் பாடல்கள் எழுதி, பாகவதர், P. U. சின்னப்பா முதல் இன்றைய T. L. மகாராசன் வரை அப்பாடல்களைப் பாடிப் பதிவு செய்து படங்களாகவும், இசைத் தட்டுகளாகவும் அவை வெளி வந்துவிட்டன என்பதையும் இங்குக் குறிப்பிடுகிறேன்.

சிறப்புமிக்க ஆழமான, அழுத்தமான, செறிவான தமிழ்ச் செய்யுளின் இலக்கணங்கள்; சித்தர், சிவனியப் பத்தர் ஆதினத் தில் போனவை, முத்தி நெறியாயின. வைணவ ஆதினத்தில் போனவைகள் அந்தாதித் திவ்ய பிரபந்தங்களாயின.

திருவையாற்றுத் தெலுங்குத் தமிழர்களிடம் போனவைகள் தியாகராசக் கீர்த்தனை, நடனப் பதங்களாயின.

நல்ல வேளை தெற்குச் சீமை, பசும்பொன், மதுரை மாவட்டத்தில் இருந்தவைகள் அண்ணாமலை ரெட்டியார், பாசுகரதாசு, சங்கரதாசு சாமிகளால் தெருக்கூத்துப் பாடல்களா னாலும்; சிவனியம், மாலியம் கலந்திருந்தாலும் அவை நாட்டுப் புறத் தெம்மாங்கு இசைப்பதப் பாடல்களாயின.

இன்றைய உலகின் அனைத்து மொழிகளிலும் அந்தந்தக் கவிஞர்களால், இசையமைப்பாளர்களால், பாடலாகவும், இசைப்பத வரிகளாகவும், கொள்ளும்போது ஒரு குறிப்பிட்ட அளவு சொற்றொடர் வரையறுத்தால் அவை ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, எனக் கட்டமைத்த சீர்ச் சொற்களாகவே அமையும், அது ஒலியியல் ஒருங்கிணைப்பு என்பதறியவும்.



## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 16 | 28 | பொய்ந்திருந்தால் | பொய்த்திருந்தால் |
| 25 | 10 | மூன்றடி ளும் | மூன்றடிகளும் |
| 37 | 5 | நேசை | நேரிசை |
| 48 | 23 | புள்ளிபும் | புள்ளியும் |
| 39 | 21 | சீாகி | சீராகி |
| 42 | 6 | றிரை | நிரை |
| 49 | 24 | நே | நேர் |
| 50 | 11 | 16 + 16 = 52 | 16 + 16 = 32 |
| 54 | 6 | புளிமாங்களி | புளிமாங்கனி |
| 56 | 25 | வஞ்சிப்பா ற்கும் | வஞ்சிப்பாவிற்கும் |
| 58 | 22 | வஞ்சிப்யபா | வஞ்சிப்பா |
| 59 | 3 | தமிலே | தமிழே |
| 67 | 22 | சீரிரரண்டிடைவிட | சீரிரண்டிடைவிட |
| 71 | 3 | றாழ்தனர் | றாழ்ந்தனர் |
| 74 | 28 | துளள்ல் | துள்ளல் |
| 75 | 7 | அப்போ | அம்போ |
| 81 | 21 | ஒசை | ஓசை |
| ,, | 24 | குறனாசிரியப்பா | குறளாசிரியப்பா |
| ,, | 28 | ஒவ்வொன்றுற்கும் | ஒவ்வொன்றிற்கும் |
| 84 | 27 | நாநீல | நாநில |
| 85 | 13 | இாண்டு | இரண்டு |
| 91 | 22 | ஆகிரிய | ஆசிரிய |
| 96 | 22 | மூன்றம்சீர் | மூன்றாம்சீர் |
| 98 | 17 | தூபுறு | துபுறு |
| 106 | 26 | துனியா | தனியா |
| 109 | 26 | உயர்த்தும் | உணர்த்தும் |
| 111 | 27 | பாத்த | யாத்த |
| 117 | 14 | பாமணக்கு | பாமணக்கும் |
| ,, | 27 | வழிவனவெல்லாம் | வருவனவெல்லாம் |
| 125 | 19 | நெரிசை | நேரிசை |
| 126 | 18 | தப்வின் | தரவின் |

| | | | |
|---|---|---|---|
| ,, | 23 | விட்டிகை | விட்டிசை |
| 128 | 11 | சிரண்டடி | சீரிரண்டடி |
| 131 | 21 | முளைச் தடி | முளைச்சதடி |
| 130 | 18 | வந்தறியவும் | வந்ததறியவும் |
| 134 | 19 | செரச்சகம் | கொச்சகம் |
| 136 | 1 | கரைசாரர் | கரைசாரக் |
| 137 | 15 | யாத்தணர் | யாத்தனர் |
| 142 | 18 | சிஃறாலிகை | சிஃறாலிசை |
| 146 | 16 | அயடியாய் | அடியாய் |
| 146 | 18 | முதல்வர் | முதல்வர |
| 149 | 10 | எடுத்துர் | எடுத்துக் |
| 155 | 11 | அளவடிககளால் | அளவடிகளால் |
| ,, | 22 | நடைத்தனையும் | நடைத்தளையும் |
| ,, | 30 | இலக்கணக் | இலக்கணச் |
| 160 | 20 | சீர்க்கணகிற்கு | சீர்க்கணக்கிற்கு |
| 163 | 13 | படுத்துயர் | படுந்துயர் |
| ,, | 6 | சீருள | சீருள்ள |
| 165 | 35 | கடைபோய் | கடையோர் |
| ,, | 10 | ஒதியவர் | ஓதியவர் |
| ,, | 26 | சீழ்க்கண்ட வாறு | கீழ்க்கண்டவாறு |
| 169 | 30 | ஆசிரியம்த்திலும் | ஆசிரியத்திலும் |
| ,, | 29 | பிராமன | பிராமண |
| ,, | 32 | தாட்ட | தாளம்பட்ட |
| ,, | 13 | புனந்துரை | புனைந்துரை |
| 173 | 2 | தாழிபை | தாழிசை |
| ,, | 3 | கரிதசம் | சுரிதகம் |
| ,, | 14 | தாழிசைக் | தாழிசைச் |
| 187 | 1 | மேற்சண்ட | மேற்கண்ட |
| ,, | 2 | நான்சடி | நான்கடி |
| ,, | 31 | தன்ன | தனதன |
| 189 | 7 | கிர்க்குறி | கீர்க்குறி |
| 189 | 28 | செய்யுள | செய்யுள் |

